# துருவத்தின் கல்லறைக்கு

**இ.தியாகலிங்கம்**

**சுயவெளியீடு**
**உதவி**
Amazon

THURAVATTHIN KALLARAIKKU

(A new Novel from Norway)

First Edition
August 2016
ISBN: 978-1-326-76434-0

Publication Editor
Thiagalingam Ratnam
Vetlandsveien 117
0686 Oslo
Norway

Pages: 258

# என்னுரை

ஈழத்தில் ஏற்பட்ட யுத்தத்தாற் பல காரணங்களுக்காக அகதிகளாய்ப் பல இலட்சம் மக்கள் இந்தியா, ஐரோப்பா, கனடா, அவுஸ்ரேலியா என்று புலம் பெயர்ந்தார்கள். ஆனால் புலப்பெயர்வு என்பது வரலாற்றுக் காலங்களிலும், அதற்குப் பிந்திய காலணித்துவக் காலங்களிலும், அதைத் தொடர்ந்தும் நடைபெற்றிருக்கின்றன. அவை வரலாறாகிவிட்டவை என்று வைத்துக் கொள்வோம். இலங்கையின் சுதந்திரத்திற்குப் பின்பு மேற்படிப்புக்காக, தொழிலுக்காக ஈழத்தில் இருந்து உள்நாட்டு யுத்தம் ஆரம்பமாக முதல் பலர் புலம்பெயர்ந்து சென்று இருக்கிறார்கள். கப்பலுக்கு, மத்திய கிழக்கு நாடுகளுக்குச் சென்று செல்வந்தர்கள் ஆனவர்கள் பற்றிய விபரங்களைச் சிறுவனாக இருக்கும்போது கேள்விப்பட்டிருக்கிறேன். அப்படி, யுத்தம் தொடங்குவதற்கு முன்னால் வேலைக்காகப் புறப்பட்டு, ஐரோப்பாவில் உண்டான நட்பின் நிமிர்த்தம் அங்கே தங்கிவிட்ட நண்பர்களைச் சுற்றிப் புனையப்பட்ட நாவலே இது.

ஈழத்திலிருந்து யுத்தத்தால் புலம் பெயர்ந்தவர்கள் இது ஒரு தற்காலப் புலப் பெயர்வே என்று எண்ணி இருந்தனர். இந்திய இராணுவம் இலங்கையை ஆக்கிரமித்தபோது நாடு திரும்புவதற்கான நாள் வந்துவிட்டதாய் சந்தோசப்பட்டு அவதிப்பட்ட நண்பர்கள் இருக்கிறார்கள். முடிவில் அந்த நண்பர்கள் இறுதிக் காலத்தை இந்த ஐரோப்பிய, கனேடிய அல்லது அவுஸ்ரேலிய மண்ணில் கழிப்பதற்கு தங்களைத் தயார் செய்கிறார்கள். எரிப்பதா புதைப்பதா என்கின்ற விவாதமும், ஓய்வூதியம் சேர்ப்பது பற்றிய விவாதமும் தொடர்கிறது. சிலர் தங்கள் கடைசிக் காலத்திற்காய் மாய்ந்து மாய்ந்து காப்புறுதி கட்டுகிறார்கள். அரச காப்பகங்கள் இருந்தாலும் அதைவிடப் பாதுகாப்பு வேண்டும் என்று நினைக்கிறார்கள். இருந்தும் அவர்களின் அசைபோடல்களும், நாட்டைப் பற்றிய அங்கலாயிப்புக்களும் இன்னும் ஓய்ந்தபாடில்லை. அவை ஆத்மாக்களோடு ஒன்றியதாகக் கூடு விட்டு மேலுலகம் செல்லவும் தயாராக உள்ளன.

ஒருவனுடைய வயோதிபக் காலம் இந்தியாவில் அல்லது ஈழத்தில் எப்படிக் கழியும் என்பதற்கு ஏற்கனவே பல நாவல்கள் வந்திருக்கலாம். அதே தமிழர்களின் முதுமைக் காலம் ஐரோப்பாவில் எப்படி இருக்கும் என்பதையும், அதனால் உருவாகும் ஆத்ம விசாரணைகளையும் உள்ளடக்கியதே இந்த நாவல். இங்கு உணவைப் பிச்சை எடுக்க வேண்டியதில்லை என்றாலும் உறவைப் பிச்சை எடுப்பவர்கள் பலர் உள்ளார்கள்.

என் இலக்கியப் பயணத்திற்கு உலகம் எங்கிருந்தும் ஆதரவு தரும் வாசகர்களாகிய உங்களுக்கும் எனது மனமார்ந்த நன்றிகள்.

அன்புடன்
இ.தியாகலிங்கம்

http://www.karainagaran.com
ratnamt67@gmail.com

இயந்திர மனிதர்கள் இன்றும் முதியோர் இல்லத்திற்குள் வரவில்லை. அது ஒரு தற்காலிக தாமதமே. அத்தால் மனிதர்களை மனிதர்கள் பராமரிக்கும் மகத்தான காலம் இன்னும் மறையவில்லை. இயந்திர மனிதர்கள், மனிதர்களின் பராமரிப்பைப் பொறுப்பேற்க முதல் முற்றுப்பெற்ற ஒரு புலம்பெயர்ந்த தமிழனின் (புலம்பல்) அந்திமக் காலக் கதை இது.

குறிப்பு: இதில் வரும் நோர்வே மொழிச் சம்பாசனைகள் மொழிக்கலப்பைக் குறைப்பதற்காகவும், இரண்டுமுறை ஒன்றை வாசிப்பதைத் தவிர்ப்பதற்காகவும், வட்டார வழக்கிற்கே மாற்றப்பட்டுள்ளன.

# 1

**ப**னியோடு பனியாகக் கலந்த வாகனத்தின் வெண்மை. வொல்வோக் காரொன்று பின்னோக்கிச் சக்கரங்கள் உருளுவது போல் பிரமை காட்டிய வண்ணம் பதுமையாக வந்து அந்த முதியோர் மடத்திற்கு முன்பு நின்றது. அதன் மூச்சை விட்டது. அசையும் பொருளாய் வந்து அது அசையாப் பொருளானது. இந்த வாகன நிறுவனங்களுக்கும் தோற்றம் உண்டு. இளமை உண்டு. முதுமை உண்டு. இறப்பும் உண்டு. ஒரு காலத்தில் எண்ணெய்யில் ஓடத்தொடங்கி இன்று மின்சாரத்தில் ஓடும் இயந்திரங்கள். உலகத்தில் நித்தியமாய் வாழ வேண்டும் என்கின்ற வேட்கையோடு வாழும் மனிதனுக்கும் தோற்றம் உண்டு. முதுமை உண்டு. தப்பிவிட முடியாத இறப்பும் உண்டு. நித்தியம் என்பது கதையில் வரும் மார்க்கண்டேயனுக்குக் கிடைக்கலாம் உலகில் வாழும் மனிதனுக்கு அல்ல. இறுகப் பிடிக்கும் இறப்பிடம் இருந்து தப்பிக்க துடிக்கும் மனித ஜென்மங்கள் ஆயிரம் மாயிரம். சிவன் எத்தனை ஜென்மங்களுக்குக் காலைத் தூக்குவான்? அவனுக்குக் கால் கடுத்திருக்கும். அவன் காலைத் தூக்க மனிதன் அவன் தலையில் கால் வைத்து விட்டான். அந்த மனிதப் புழுக்களில் நானும் ஒன்றாக.

வெண்மை தூய்மையானது. அது களங்கம் அற்றது. வெண்மை ஏறும் போது மனிதன் முதுமையை உணர்கிறான். அந்தரிக்கிறான். அலமலக்கப் படுகிறான். பயப் படுகிறான். பதட்டப் படுகிறான். சோகம் கொள்கிறான். சுவர்க்கம் நரகம் பற்றி எண்ணுகிறான். கடவுள் இல்லை என்று கூறியவன்கூட கடவுள் இருப்பாரோ என்று ஐயம் கொள்கிறான். ஆப்பிரிக்கன், ஆசியன், ஐரோப்பியன், அரேபியன் ஈறாக அனைத்து மனித இனத்தின் முதுமை காட்ட வந்த அடையாளம் வெண்மை. அதுவே வெள்ளி நரை. இறப்பு என்பது சர்வ நிச்சயம் என்பதை ஞாபகப்படுத்தும் இயற்கையின் குறியீடு. தன்னில் வெண்மை ஏறும் போது பல மனிதருக்கு ஈரக்குலை நடுங்குகிறது. உள்ளம் பதைபதைக்கிறது. நரையை மறைப்பதால் மார்க்கண்டேயராகும் தந்திரம் தலையை மண்ணில் புதைத்த தவளைகளின் தப்புக்கணக்கு. சாயத்திற்கும் சவரத்திற்கும் அலையும் கூட்டங்கள்.

இளமையின் துடிப்பு. எதுவும் அடைந்து விடலாம் என்கின்ற துணிவு. என்றும் வாழப் போவதான ஏக கற்பனை. காமத்தின் மொழி பேசும் காலங்கள். சித்திரமாய் உடலை எண்ணும் சிந்தனை. புத்தியிலே அகந்தை. ஆட்டம் தொடரும் என்கின்ற பகற்கனவு.

அனைத்தும் வடியும் ஒரு ஞானப் பருவம் வரும். யாரும் தப்ப முடியாது வரும். அதற்கு அறிகுறியாக வெண் நரைகளின் வரவு கட்டியம் கூறும். சித்தனாகிவிடு அல்லது நான் என்பதைச் சிதைந்து போகவிடு நித்தியம் என்று அடைகாத்த உன் போகங்களை விட்டுப் போகும் காலம் வந்தது என்பதை நம்பு என்று திடமாக உரைக்கும். இதற்கு எல்லாம் ஒரு நிறமாய், எத்தனையோ தத்துவங்கள் சொல்ல வந்த நிறமாய்...

பொறு மானிடா! வெண்மை மதிக்கப் படுகிறது. முதுமை மிதிக்கப் படுகிறது. ஆடிய ஆட்டங்கள் அடங்கும் பொழுது யார் யாரோ நாடி பிடித்துப் பார்ப்பார்கள். ஏன்? உன் பற்களையும் எண்ணிப் பார்ப்பார். அது ஆண்டிக்கும் நடக்கும். ஆண்டவர்களுக்கும் நடக்கும். உனக்கும் நடக்கும். எனக்கும் நடக்கும்.
முதுமை சிலருக்கு ஞான போதியாகிறது. தத்துவங்களும், வித்தகங்களும் அனுபவத்தில் விளைந்த முத்தாக அவன் முன்னே படைக்கப் படுகின்றன. அப்போது அடுத்த மனிதனின் அவதி கண்டு அவன் நெஞ்சு தனக்குள் எரிகிறது. முதுமைக்கும் இளமைக்கும் இடையில் முரண்டு பிடிக்கும் போராட்டம். இளமை நித்தியம் என்று இறுமாந்திருந்து, முதுமை பற்றிக் கொள்ளும் பொழுது துடித்துப் போகும் அதன் பரிதாபம். இன்றைய இளங்கன்றின் அறியாமையில் தவழும் நையாண்டிகள்.

காவோலை விழக் குருத்தோலை சிரிக்கும். மறுபடியும் மறுபடியும் குருத்தோலை சிரிக்கும். குருத்தோலையும் காவோலையாகும் காலம் வரும் போது கண் கெட்ட பின்பு சூரிய நமஸ்காரம் என்கின்ற ஞானம் பிறக்கும்.

என் பிள்ளை இன்று குருத்தோலை. அவனுக்கு என்னைப் பார்க்க காவோலை போலத் தோன்றியிருக்கும். மருமகளுக்கு அதைவிட அரிகண்டமாயிருக்கும். வயோதிபம் மனிதனைக் குழந்தையாக்கி விடுகிறது. சொந்த வாரிசுகளாலேயே அதைச் சகித்துக் கொள்ள முடியாது போகிறது. தவன்று, எழுந்து நடந்த மனிதன் மீண்டும் தவழும் நிலைக்கு வருகிறான். அது சிலருக்கு வயோதிபமாகிறது. சிலருக்கு வசையோடு கூடிய வதையான தரிசனமாகிறது.

வயோதிபம் வெண்மை மட்டும் அல்ல. நித்தியம் அற்ற இவ்வுடலை நீக்கி, மறுபிறப்பு என்று ஒன்றிருந்தால் அதை அடைய ஆயுத்தமாகும் அவஸ்தை அதில் இருக்கிறது. உன்னோடு உரசியவர்கள் ஒதுங்கி நிற்பர். முகர்ந்து பார்த்தவர்கள் மூக்கைச் சுழிப்பார். உடல் இற்றுப் புண்ணாகி, அதிற் பொந்து விழுந்து, நாறும் போது உன்னைக் கண்டாலே ஓங்காலிப்பார். இன்னும்… இன்னும்… முதுமை உனக்கு மீண்டும் ஒரு வாழ்பனுபவத்தைக் கொண்டு வந்து கண் முன்னே படைக்கும்.

‘நான்’ என்கின்ற அறியாமையில் நானும் தலை கால் புரியாது ஆடித் திரிந்தேன். கனவுகளை நித்தியமாக எண்ணி இறுமாந்திருந்தேன். இன்று கனவுகள் கலைந்து போயிற்று. நித்தியம் என்பது எதுவும் இல்லை என்கின்ற உண்மை புரிகிறது. என்னுடையவை என்பன என்னை விட்டுப் போனதான உணர்வு. எல்லாமே என்னுடையது என்கின்ற உண்மையும் புரிகிறது. கொண்டு வந்தவரும் இல்லை. இந்த உலகில் இருந்து கொண்டு செல்பவரும் இல்லை. காமத்தில் உருவாகி அஸ்தியாகக் கரைந்து போகும் நமது பிண்டங்கள்… என்றாலும் அனைத்தும் நித்தியம் என்கின்ற ஆசையோடு அலையும் மனித ஜென்மங்கள்.

முதுமை என்பது மரத்தில் இருக்கும் காய் கனியும் நிகழ்வல்ல. மரமே பழுக்கிறது. மரணத்தை நோக்கி அது யாகம் செய்கிறது. நரை முன்னறிவிப்பாக வந்து விடுகிறது. தோல் இனிக் கவர்ச்சி வேண்டாமெனச் சுருக்கங் காண்கிறது. நடையும், நடத்தையும் மீண்டும் குழந்தையாகிறது. எனது மனது மாத்திரம் விழித்து விட்டது. நான் வாழ்க்கை என்று கருதியது உண்மை வாழ்க்கை இல்லை என்பது புரிந்துவிட்டது. எனது மகன் தற்போது வாழ்க்கை என்று எதை எண்ணுகிறான் என்று அறிந்ததில் பரிதாபமாக இருக்கிறது.

பாசமாக இருந்த காலம் பறந்து போயிற்று. பாரமாகிக் குந்திய காலம் வந்தாகி விட்டது. இதுவும் சக்கரம்தான். என் முறை இப்போது வந்து விட்டது. என் பிள்ளையின் முறையும் இன்னும் சில காலத்தில் வரும். மனிதப் பிறப்பெடுத்த அத்தனை ஜீவன்களும் அந்தச் சக்கரத்தை விட்டு நகரமுடியாத புழுக்கள் எனக்கு முதுமையால் வந்த வெறுப்பா இது? இல்லை. முதுமையால் வெறுப்பு வரக் கூடாது. தெளிவு வர வேண்டும். நான் சிறிதாவது தெளிந்திருக்க வேண்டும். பாரம் என்பவனுக்குப் பாரமாய் இருப்பது தவறென்பது எனக்குப் புரிகிறது. என்னால் அவன் துன்பப்படக் கூடாது. என்னால் எந்த ஆத்மாவும் துன்பப்படக் கூடாது. எனக்காக எந்த உயிரும் இந்த உலகில் துன்பப்படக் கூடாது. முதுமை வேதனையா? இல்லை. முதுமை வேதனை இல்லை. மனிதனுக்கு வாழ்வின் தத்துவத்தை, அவன் தன் வாழ்வை முடித்துக் கொள்ளும் பொழுது உணரவைக்கும் பருவம் முதுமையாகிறது. அப்பொழுதும் உணராமல் இறந்துவிடும் ஜென்மங்கள் பல்லாயிரம்.

இந்த மடத்தில் எனக்குத் தனிமை இல்லை. விருப்பு இல்லை. வெறுப்பு இல்லை. எனினும் நாட்கள் உறைந்து விடப் போவதில்லை. மனம் படுத்துக் கொள்ளப் போவதில்லை. மனித ஜென்மமாய்க் கடந்து வந்த வாழ்வு பற்றிய ஆத்ம விசாரணை இங்கு ஆரம்பமாகிறது. என்ன செய்தாய்? ஏன் செய்தாய்? எவனோடு உறவு பூண்டாய்? எவனோடு பகை கொண்டாய்? எவளோடு படுத்தாய்? எவளோடு வாழ்ந்தாய்? யார் உன்னை நேசித்தாள்? யார் உன்னிடம் வேஷம் போட்டாள்? யார் உன்னிடம் இலாபம் பிடுங்கினர்? யார் உனக்கு இலாபம் தந்தார்கள்? இறுதி மூச்சு இழுக்கும் வரை இந்த விசாரணை தொடரப் போகிறது. இதுகூட மாயமாகப் போகும் வாழ்வு பற்றிய மயக்கம்தான். கடைசி மூச்சுதான்.

எதிர்பார்ப்புக்களை மீறிய சம்பவங்களின் கோர்வையாகத்தான் பலருக்கு வாழ்க்கை அமைகிறது. சுற்றி வரும்போது மகனே தந்தைக்குக் குருவாய் வரும் காலமும் வரும். சிவனுக்கே வந்தது. சில்லறை ஜீவன்களான எங்களுக்கு?

அசையாப் பொருளான காரைவிட்டு மகனும் மருமகளும் இறங்கினார்கள். எனது இருப்பு அவனைக் கேள்வி கேட்க வைத்தது. 'அப்பா என்ன யோசிச்சுக் கொண்டு இருக்கிறியள்? காரைவிட்டு இறங்குங்க' என்றான் கட்டளையாக. நான் கோபிக்கவில்லை. அது பாம்புச் செட்டையாக என்னிடமிருந்து கழன்று போய் சில காலங்கள் ஆகின்றன. வாழ்க்கையின் ஆரம்பத்தில் அதுதான் என்னை அழுங்காய்ப் பிடித்து ஆட்டியது. அதுவே இளமையில் பகையின் விளை நிலமாகியது. பிழையென்று புரிந்த பின்பும் பித்திறங்காது பிடிவாதம் காட்டியது. இப்போது எல்லாம் அடங்கிவிட்டது. உணர்ச்சிகள் சுருண்டு கொள்ள உணர்வு பூர்வமான சிந்தனை விழித்து விட்டது.

நான் காரின் கதவோரம் நகர்ந்தேன். காரை விட்டு இறங்க என்னைத் தயார் படுத்தினேன். எனது இயக்கத்தின் வேகம் இப்பொழுது குறைந்து விட்டது. இளமையின் உச்சியிலிருக்கும் என் வாரிசுக்கு இது எரிச்சலாக இருக்கலாம்.

சில மனிதர்கள் வாழும் போது உலகைப் படிக்கிறார்கள். வாழும் போது உலகைப் புரிகிறார்கள். உலகில் வாழும் போதே ஞானியாகிறார்கள். சில மனிதர்களின் மூச்சு அடங்குவதற்கும் அவர்களது கடைசி ஆசைகளைத் தீர்த்து வைக்க வேண்டியிருக்கிறது. நான் எந்த இனத்தைச் சார்ந்தவன்? விடையில்லாத கேள்விகள் என்னிடம் புழுத்துக் கிடக்கின்றன. அவை மூளையை இடைவிடாது குடைகின்றன. காலம் ஒரு கலாசாலை. இது நான் இவனுக்குச் சொல்ல வேண்டியது இல்லை. நித்தியின் கையை நான் இறுகப் பற்றினேன். அந்தப் பிடியில் இறுக்கம் இருந்தது. மனிதனுக்கு வாழ்க்கையில் இருக்கும் பிடிப்பை அது எனக்கு ஞாபகப்படுத்தியது. நான் எனக்குள் சிரித்தேன். நான் நிலத்தில் விழாது இருப்பதற்காய்ப் பிடித்ததுகூட எனக்குச் சிரிப்பை வரவழைத்தது. எப்பொழுதும் மனிதன் தன்னையும் தனது வாழ்வையும் பற்றி மட்டுமே சிந்திக்கிறான். இப்போதும் நான் என்னைப் பற்றிச் சிந்தித்ததால் அவனை இறுகப் பற்றினேன். பற்று அறாத பற்றல். எனது தேகம் இம்சைப்படக் கூடாது என்பதற்காக நான் இறுகப் பற்றினேன். சில மனிதர்களுக்கு உலக வாழ்க்கை பிடித்துவிட்டதால் அதை இறுகப்பற்ற நினைக்கிறார்கள். அது மாத்திரம் மனிதனால் முடியாது போய் விடுகிறது. எப்படி இறுகப் பற்றினாலும் அது ஏமாற்றி விடுகின்றது.

நித்தியின் கையைப் பிடித்து நான் இறங்கினேன். இறங்கியவுடன் நாரியை நிமிர்த்திப் பார்த்தேன். அது முழுமையாக நிமிரவில்லை. காலம் முதுகில் பாவ புண்ணியக் கணக்கை எழுதிச் சென்றதாக கூனல் விழுந்துவிட்டது. விழுந்த கூனலோடு குறிப்பிட்ட அளவே நிமிரமுடியுமென நாரி அடம்பிடிக்கிறது. கூனிக்கு இராமன் அடித்த உருண்டையால் கூனல் விழுந்தது. எனக்கு நான் செய்த பாவம் அடித்த உருண்டையால் கூனல் விழுந்ததா? உடல் முதுமையில் பழுத்தாலும் மனம் அதை ஒத்துக் கொள்ளாது அடம்பிடிப்பதுண்டு. கூனல் விழுந்தாலும் குமரப் பருவத்து நினைவுகள் இன்னும் என்னிடம். வேகும் கட்டையோடு மட்டும் அழியும் எச்சங்களாக அதன் தொடர்ச்சி.

நான் காரை விட்டு வெளியே இறங்கினேன். வடதுருவத்துக் குளிர் மென் கருக்காய் உரசிச் சென்றது. இளமையாக இருந்தபோது இந்தக் கால நிலைக்குச் சிற்றாடையோடு செல்லத் தோன்றியிருக்கும். முதுமை இப்போது இன்னும் உடை கொண்டு வா என்கிறது. அந்த முதியோர் இல்லத்துக்குள் இருந்து ஓர் தாதி என்னை நோக்கி வந்தாள். அவள் வெள்ளைச் சீருடையில் அன்னப் பேடான தோற்றம். 'காய் கெலேனா..' எனக் கை தந்தாள். நானும் அதை இறுகப் பற்றினேன். மென்மை... இப்போதும் உணரமுடிகிறது. 'புத்திரன்..' என்றேன். அவள் மிகவும் கஷ்டப்பட்டுப் 'புத்திரன்' என்று உச்சரித்தாள். நல்லவேளை அக்கினிபுத்திரன் என்கின்ற அம்மா வைத்த பெயரைக் கூறியிருந்தால் மயங்கியிருப்பாள். நான் எனது முழுப் பெயரையும் இங்கே கூறுவதில்லை. இதில் என் சுய நலம்தான் அதிகம். 'உங்களால் நடக்கேலுமா?' என அந்தத் தாதி என்னைப் பார்த்துக் கேட்டாள். 'ஆம்' எனத் தலையை ஆட்டினேன். அவள் நித்தியிடம் இருந்து என்னை விடுவித்து, தான் பொறுப்பேற்க முயற்சித்தாள். நித்தி என்னை முழுமையாக அவளிடம் விட்டுவிடாது ஒரு பக்கம் பிடித்த வண்ணம் அந்த முதியோர் இல்லத்திற்குள்ளே வந்தான். சுசான் எனது சொத்தில் சிலவற்றைக் காரில் இருந்து எடுத்து வந்தாள். இவள் எனது மருமகள். நித்தியின் ஆசை மனைவி. கலப்புக்களை ஓரக் கண்ணால் பார்ப்பதையும் மீறி அபூர்வமாகக் கலந்துவிட்ட பிறவிகள். நித்தியும், சுசானும் தொடர்ந்தும் தம்பதிகளாய் இருப்பது அதிசயம்தான். ஆபத்தான காலத்தை இருவரும் கடந்து விட்டார்கள். பிள்ளைகள் இனிப் பாலமாகி விடுவார்கள். என்னை முதலில் அலுவலகத்திற்கு அந்தத் தாதி அழைத்துச் சென்றாள். நித்தியும் கூடவே வந்தான். எனது விபரங்கள் எல்லாம் அவளிடம் கோப்பாக இருந்தன. இருந்தும் 'சொர்னாலை' (மருத்துவ அறிக்கையை) கணினியில் தேடத் தொடங்கினாள்.

‘குரு..’ நித்தி இடையில் புகுந்தான்.

‘புத்திரன் அவருடைய முழுப்பெயர் இல்லை. அவருடைய பெயர் ‘ஆ’வில தொடங்கும்’ என்றான்.

‘ஓ..’

அவள் எல்லாவற்றையும் மீண்டும் சரி பார்த்தாள். அந்த அலுவல்கள் முடிய என்னை அழைத்துக் கொண்டு எனக்கெனத் தரப்பட்ட அறைக்குச் சென்றாள். பின்பு என்னைப் பார்த்து,

‘உங்களுக்கு அதிகம் வயசில்லை’ என்றாள்.

நான் சிரித்தேன். இவர்களோடு ஒப்பிடும் போது அதிகம் வயதில்லைதான். தமிழரின் சராசரி வயதோடு ஒப்பிடும் போது எனக்கு வயது வந்துவிட்டது. நித்தி அவளோடு கதைத்தான்.

‘அப்பா எங்கள மாதிரி நீண்ட காலம் வாழுறது சாத்தியம் இல்ல. அவர்களுடைய மரபணுவு அப்பிடி. எனக்கும் சிலவேளை பொருந்தும். சராசரி ஐந்து தொடக்கம் பத்து வருசம் ஆயுள் இங்கு பிறந்தவர்களைவிடக் குறைவாக இருக்கும்’ என்றான்.

‘ஓ எனக்கும் படிச்ச ஞாபகம் இருக்குது’ என்றாள் அந்தத் தாதி.

நாங்கள் அறைக்குள் வந்துவிட்டோம். அறை வசதியாகத்தான் இருந்தது. உள்ளே சாதுவாகப் புண் வாடை. உள்ளும் வெளியும் நாறும் உடம்பின் உண்மை நெடி. அது தெரிய வரும் போது உலகம் வெறுக்கும். வயிற்றைப் பிரட்டும். நான் என்னைக் கல்லாக்கினேன். சுசான் இளைக்கப்பிளைக்க எனது சில பொருட்களை அள்ளி வந்தாள். பொருட்களை அங்கே இருந்த மேசையில் வைத்த பின்பு அந்தத் தாதியிடம் சென்று கையை நீட்டினாள். அவளின் கையைப் பற்றிய தாதி, ‘நீங்கதான் இவருடைய மருமகளா?’ என்று கேட்டாள்.

அவள் ‘சொர்னாலைப்’ படித்திருக்க வேண்டும் என்பது சுசானுக்குப் புரிந்தது. நித்தியும் சுசானும் மீண்டும் காருக்குச் சென்று எனது பொருட்களை எடுத்து வந்தனர். ‘கெலேனா’ அவற்றை என்னைக் கேட்டுக் கேட்டு அந்தந்த இடங்களில் அடுக்கினாள். நான் எனது மடிக்கணினி பற்றிய தவுனத்தோடு பொருட்களைப் பார்த்த வண்ணம் இருந்தேன். என்னால் இப்பொழுதும் எழுத முடியும் என்பதைக் கேட்டு அவள் சந்தோசப்பட்டாள். எல்லாம் அடுக்கிய பின்பு அவள் வெளியே சென்று விட்டாள். நித்தியும், சுசானும் எனக்கு அருகே வந்து இருந்தார்கள். அவரவர் மனது அவரவர் உலகத்தில். நிசப்தத்தைப் பொறுக்க முடியாதவனாய் நித்தி,

‘அப்பா?’ என்றான்.

‘என்ன நித்தி?’ என்று கேட்டேன்.

‘எங்கள்ள கோபம் இல்லையே?’

‘ஏன் நித்தி நான் உங்கள்ள கோவப்படோணும்?’

‘இல்ல நாங்கள் கடைசி காலத்தில இப்பிடித் தனிய விட்டிட்டம் எண்டு... என்மேலையும், சுசான்மேலையும் கோபம் இல்லையே அப்பா?’

‘ஒவ்வொரு மனிசரையும் மற்றைய மனிசர் பார்க்கிற கோணத்தில தான் கோபம், சந்தோசம், நல்லவன், கெட்டவன் எல்லாம் இருக்குது. பார்க்கிற கோணம் பிழையாய் இருந்தால் மற்றைய மனிதர்களின் பிழைகள் தான் உறுத்தும். அதே பார்க்கிற கோணம் சரியாய் இருந்தால் மற்றைய மனிதர்களின் நிறைகளும் நற் குணங்களும்தான் தூக்கலாகத் தெரியும். கோபம் வராது...’

‘நீங்க தத்துவமா தமிழில கதைக்கிறது விளங்கேல்லை அப்பா’

அவன் சங்கடம் எனக்குப் புரிந்தது.

‘எனக்கு உன்னில எந்தக் கோபமும் இல்லையடா நித்தி’ என்றேன்.

‘தாங்ஸ் அப்பா’

‘புத்திரனுக்கு என்மேல கோபம் இல்லத்தானே?’ சுசான் கேட்டாள். அவள் எப்போதும் பெயர் சொல்லியே கதைப்பாள். இவர்களின் பழக்கம் அப்பிடி.

‘இல்ல சுசான். நான் யார் மேலையும் கோவப்படேல்ல’

‘தாங்ஸ் புத்திரன்’

‘நாங்க அடிக்கடி வருவமப்பா…’

‘தனிய வராதேங்கோ. மோல்றனையும், கதரீனாவையும் கூட்டிக் கொண்டு வாங்கோ’

‘நிச்சயம் கூட்டி வாறம் புத்திரன். எங்களுக்கு நேரம் கிடைக்கிற போதெல்லாம் நாங்க இங்க வருவம்’ என்றாள் சுசான்.

தன்னோடு கூடும் வேற்று மனிதன் தனது கலாசாரத்திற்குள் கரைந்து விடுவது ஒவ்வொரு மனிதனுக்கும் வசதியாகத்தான் இருக்கிறது. சுசான் தன்னோடு கூடிய நாங்கள் அவளின் கலாசாரத்திற்குள் கரைந்து விடவேண்டும் என்று எதிர்பார்த்தாள். நித்தி கரைந்தாலும் என்னால் முழுமையாகக் கரைய முடியவில்லை. இந்தச் சமுதாயத்தை ஓரளவு புரிந்து அதற்குள் வெட்டி ஓடியிருக்கிறேன். அந்த ஓட்டத்தில் என் சுவடுகளைத் தக்க வைத்துக் கொள்ளப் போராடித் தோற்றதான உணர்வு. என்னை இறப்பு இழுக்கிறது. எனது வம்சம் இந்நாட்டுக் கலாசாரத்திற்குள் கரைந்து போய்விட்டது.

இனி?

அவர்கள் சென்ற பின்பு நிசப்தமும், தனிமையும் என்னைச் சூழ்ந்து கொண்டன. தனிமையில் தொடங்கும் வாழ்க்கையின் முடிவு காலமும் தனிமையாகக் கழிகிறது. வாழ்க்கையின் கடைசி காலத்தில் உற்பத்தியற்ற வறட்டு மனிதக் கட்டைகளாகச், சமுதாயத்திற்குப் பாரமாகக், குந்தும் நிலை. உன்னை பராமரிப்பதைச் சமுதாயம் தன் கடமையென எடுத்தாலும் அதுவும் உற்பத்தியாகவே பார்க்கப்படும். உற்பத்தி என்று சேவையைப் பார்க்கும் நாட்டில் நிசப்தமும், தனிமையும் உன்னிடம் தாராளமாக ஆட்சிக்கு வரும்.

நான் நிசப்தத்தை விரட்ட கணினிக்கு அருகே சென்றேன். இதில் நான் இப்பொழுதும் சிலவற்றை தமிழில் எழுதுகிறேன். என்னைப் போல் எம் தமிழுமா என்கின்ற ஆதங்கத்தின் திடீர் எழுச்சி. மார்பு இரணமாக நோகின்ற அவஸ்தை. நான் எதையும் இன்றுவரை உருப்படியாக முடித்தவனில்லை. இதையாவது முடிக்க வேண்டும். இறப்பதற்குள் இந்தப் புத்தகத்தை எழுதிவிட வேண்டும் என்கின்ற அடங்காத ஆசையின் அவதியான இழுப்பு.

இரவு பகலாய் இதே வேலையாக இருந்து செய்து முடிக்க வேண்டும். அதன் பின்பு ஆனந்தமாகச் செத்து மடிய வேண்டும். கணினியின் ஆழியை அழுத்தினேன். அது இசையுடன் உயிர் பெற்றது. உயிர்ப்பு ஏதோ ஒரு வித இசையுடன்தான் தொடங்குகிறது. சுசான் தூசு துடைத்ததில் கணினி புது முகம் காட்டியது. கணினி தயாராகிய போது கதவில் தட்டிவிட்டு அந்தத் தாதி வழுக்கி வரும் இளம் தென்றல் போல் உள்ளே வந்தாள்.

‘எழுதுறீங்களா?’ என்றாள்.

இளம் தென்றலாக இருந்தாலும் சிவ பூசையிற் கரடி புகுந்த எரிச்சல் எனக்கு. வாயைப் பிளக்கும் வாலிபம் தொலைந்தது புரிந்திற்று. இப்படி வரவேண்டியது அவள் வேலை என்பதாக என்னைச் சமாதானம் செய்தேன்.

‘என்ன பேசுறியள் இல்ல? நான் உங்களக் குழப்பீட்டனா?’

‘இல்ல… இல்ல… நான் அப்பிடி நினைக்கேல்ல’ பண்பாடு என்னும் பொய் பேசும் வாழ்க்கை.

‘நல்லது… நான் உங்களைக் கூட்டிக் கொண்டு போய் இல்லத்தைச் சுற்றிக் காட்டுறன்’

‘தாராளமாக’ என்றேன்.

அவள் என்னை வண்டிலோடு தள்ளிக் கொண்டு அறைக்கு வெளியே வந்தாள்.

‘நீங்க எழுதி ஏதாவது வெளிவந்திருக்கா?’ என்னை ஆவலோடு கேட்டாள்.

‘இல்ல’

‘இப்ப என்ன எழுதப் போறியள்?’

‘என்னுடைய வாழ்பனுபவத்தை’

‘அவ்வளவு சுவாரசியமான வாழ்பனுபவமா? சரி இதை வெளியிடுவீங்களா?’

‘நிச்சயமா’

‘அப்ப எனக்கு முதற் புத்தகம் தருவியளா?’

‘தாறனே.’

அந்தத் தாதி முதலாவது அறையைத் திறந்தாள்.

‘இவ… ஆஸ்திரி. தொண்ணுற்றெட்டு வயசு’ என்ற வண்ணம் அந்த மூதாட்டியைப் பார்த்து,

‘காய் ஆஸ்திரி..’ என்று உரக்கக் கத்தினாள். என்னைப் பார்த்து,

‘அவவுக்கு காது அவ்வளவாகக் கேட்காது’ என்றாள்.

‘காய் ஆஸ்திரி’ நானும் கத்தினேன். அந்த மூதாட்டி இருவருக்குமாய் வாய் மலர்ந்தார். எதுவும் கதைக்கவில்லை.

‘இவ இப்பிடிச் சிரிப்பாவே தவிர கதைக்கிறது அபூர்வம். ஏன் எண்டு யாருக்குமே தெரியாது’ என்றாள் அவள். புன்னகையைவிடப் புரிந்து கொள்ளக்கூடிய மொழியேது இந்த உலகில் என எனக்குத் தோன்றியது. அந்த அறையைவிட்டு வெளியே வரும் போது முதுமை அழகென எண்ணினேன். முதுமை அழகுதானே?

என்னை அவள் ஒவ்வொரு அறையாகக் கூட்டிச் சென்று அறிமுகப்படுத்தினாள். மனிதரை அறிவதில் இருந்த ஆர்வம் எனது அலுப்பை அசட்டை பண்ணியது. தொண்ணுற்றெட்டு வயது ஆஸ்திரியைப் பற்றி எண்ணப் பரிதாபமாகிற்று. மெலிந்த தோலும், அது கிழிந்த அடையாளங்களும், குழி விழுந்த கண்ணில் வழியும் பீளையும், தணியாத ஏக்கமும் இருந்தும், மற்றவரைப் பார்த்துக் கோணாத வதனத்தைப் பார்த்தபோது அது என் நெஞ்சைப் பிழிந்தது. முதுமையின் நீட்சி மனித அவஸ்தையாகும் என்கின்ற பாடம் எனக்குப் புரிந்தது.

அந்தத் தாதி என்னைச் சாப்பிடும் அறையை நோக்கித் தள்ளி வந்தாள். இறப்பு என்னும் இலக்கு நோக்கி இயம்பும் யாகம் முடிவுறாதா என்கின்ற ஏக்கம் தொடர்கிறது. நான் கண்ணை மூடினேன். எனது யாகம் குறுகிய காலத்தில் முடிய வேண்டுமென வேண்டினேன். அவள் என்னைக் கோலுக்குள் கொண்டு வந்து நிறுத்தினாள். பின்பு திடீரென ஞாபகம் வந்தவள் போல் ‘உங்களுக்கு இன்னுமொரு சந்தோசமான செய்தி’ என்றாள். நான் அவளை வியப்புடன் பார்த்தேன்.

‘ம்… நாளைக்கு உங்களுக்கு இங்க ஒரு தமிழ் பிரண்ஸ் வாறார்’ என்றாள்.

‘நிச்சயமா?’ நான் வியப்போடு கேட்டேன்.

‘நிச்சயமா’ என்று கூறிய அவள் என் கன்னத்தில் தட்டிவிட்டு நடந்து சென்றாள். நான் குழந்தையாக அவள் தாயாகிவிட்டாள்.

★

எனக்கு விடியும் வரை சிவராத்திரி ஆகிற்று. புதிய படுக்கையறையின் அன்னியம் ஒரு பக்கமாக நாளை வருவது யார் என்பது மறு பக்கமாக எனது நித்திரை களவாடப்பட்டது. விடிந்த பின் என்னை யாரோ அமுக்கிய உணர்வு. நான் அயர்ந்து போனேன். காலை ஒன்பது மணிக்குத் தாதி வந்து என்னை எழுப்பினாள்.

‘குமோர்கன்’ (காலை வணக்கம்) புத்திரன்’ என்றாள். இவள் நேற்று வந்த தாதியல்ல. மிகவும் பரபரப்பாகக் காணப்பட்டாள். காலையில் வேலை அதிகமாக இருக்கும் என்பது நான் ஏற்கனவே கேள்விப்பட்ட ஒன்று. அவள் பரபரப்பிற்குக் காரணம் புரிந்தது போல் இருந்தது.

‘ஒன்பதரைக்குக் காலைச் சாப்பாடு. அதுக்கு பிறகு வந்து பல்லுத் தீட்டலாம்’ என்றவாறு அவள் அவசரப்பட்டாள். எத்தனை பேருக்கு அவள் உதவி செய்ய வேண்டி இருக்கும் என்பது எனக்குப் புரியவில்லை.

‘அப்படி நான் பழகேல்லை’ என்றேன்.

‘அப்ப?’

‘நான் பல்லுத் தீட்டி முகம் கழுவினாப் பிறகுதான் சாப்பிடுவன்’ என்றேன்.

‘ஓ… அப்பிடியா? சரி உங்கட விருப்பம்’ என்றாள்.

‘நீங்கள் இங்கதான் பிறந்து வளர்ந்தியளோ?’ என்றேன்.

‘இல்ல நான் ‘ஸ்தவங்கர்’. இங்க வேலைக்காக வந்தனான்’ என்றாள்.

அவள் அதற்குப் பின்பு அங்கே நிற்கவில்லை. பக்கத்து அறைக்குச் சென்றாள். நான் மெதுவாக எழுந்தேன். மூட்டுக்கள் எல்லாம் வலித்தன. அவற்றை நிமிர்த்துவதிலும் மடக்குவதிலும் பெரிய வில்லங்கம். இளமையில் எந்த வலியும் இன்றிப் பம்பரமாய் ஆடிய மூட்டுக்கள். இன்று எண்ணெய்க் காணாத பிணைச்சல்களாக வில்லங்கத்திற்கு நிற்கின்றன. நான் பற்பசை, விறஸ் ஆகியவற்றை எடுத்துக் கொண்டு முகம் கழுவும் சிங்கிற்கு அருகே சென்றேன். கண்ணாடியில் என் உருவம் விகாரமாகத் தெரிந்தது. முதுமை விகாரமா என்கின்ற விசாரணையில் மனசு இறங்கியது. இளமையில் பொங்கும் அழுகு முதுமை வரவர வடிந்து விடுகிறது. என் அழகும் வடிந்து விட்டது. எலும்பாலான இந்தக் கூட்டை சுருங்கிய தோல் போர்த்துக் கிழிந்து விடாது இருப்பதற்குப் போராடுகிறது. நான் எனது முகத்தைச் சில கணங்கள் நின்று நிதானித்தேன். ஓ எவ்வளவு மாற்றம்? எவ்வளவு சுருக்கம்? வாழ்க்கையில் நான் படித்தவை எல்லாம் சுருக்கம் என்னும் எழுத்தால் முகத்தில் எழுதப்பட்டது போன்றிருந்தது. கண்ணை மூடித் தியானித்தேன். காலம் தரும் பரிசு இது என்பது எனக்குப் புரிந்தது.

நான் விறசை நனைத்துப் பல்லை விளக்கத் தொடங்கினேன். தமிழ் முறையில் பல்லின் சுகாதாரத்தைப் பாதுகாத்து பதினைந்து பற்கள்தான் மிச்சமாய் இருந்தன. பல்லுத் தீட்டிய பின்பு சாப்பிட்டு, வாயில் தங்கும் எச்சங்கள் கிருமிகளுக்கு விருந்தாகி, அது போதாதென அவை பல்லைப் பதம்பார்த்தபின் எஞ்சிய பற்கள் சில இன்னும் என்வாயில் அகல ஊன்றிய கதியால்கள் போல. பற்கள் என்பது சிலருக்கு முதுமையின் மையில் கற்கள் ஆகின்றன. என் வாயும் அதற்குச் சாட்சியாக…

இப்போது உணவில் இருந்த ஆசை குறைந்து செமியாக்குணம் மேவுகிறது. நெஞ்செரிவின் பயத்தில் பட்டினி கிடக்கத் தோன்றுகிறது. உறைப்பாய் ஏதாவது சாப்பிடலாம் என்றால் அதற்குக் கனவு காண வேண்டியதாகிற்று. மூனாவோடு இருக்கும் போதுகூட நான் எங்கள் சாப்பாடு சமைத்துச் சாப்பிடுவேன். நான் தமிழ்ச் சாப்பாடு சமைத்தால் மூனா அந்தப் பக்கமே எட்டிப் பார்க்கமாட்டாள். சமைத்து முடிந்ததும் அவசரமாக வந்து அழுது அழுது சாப்பிடுவாள். மூனா தான் மாத்திரம் சாப்பிடவில்லை. பலருக்கும் எங்கள் உணவின் சுவையை அறிமுகப் படுத்தினாள். இருந்தும் அவள் சமைக்க மாத்திரம் ஒப்புக் கொண்டதில்லை. எரிச்சல் தாங்கும் துணிவு அவளுக்கு இருந்ததில்லை. நோஸ்க் சாப்பாடு என்றால் மணித்தியாலக் கணக்காய் சமையல் அறையில் மினக்கெடுவாள். மிளகுதான் அவள் சாப்பாட்டின் உச்சக் காரம். எங்கள் சாப்பாட்டுக்குச் சுவை அதிகம். சமைப்பதில் நிறையத் தவறு செய்கிறோம். சத்து எல்லாவற்றையும் இழக்கும் விதத்தில் சமைத்துச் சக்கையைச் சாப்பிடுகிறோம் என்பது அவள் கருத்து.

அவர்கள் சாப்பாடு சத்து நிறைந்ததாக இருக்கும். சுவையைக் கோட்டை விடுவதாக நான் நினைத்துக் கொள்வது உண்டு. சுவையாக இருந்தால் அதில் அதிகமான கொழுப்பை அல்லது இனிப்பைக் கலந்திருப்பார்கள். ஆறு விரலும் ஒன்று போல் அல்ல. அப்படியே அவர்கள் சாப்பாடும். தொடக்கத்தில் அவர்கள் உணவின் சுவை பிடிபடவில்லை. பச்சைத் தண்ணி என்கின்ற அவிப்பிராயம் எனக்கு. பழகப் பழக அவர்கள் உணவின் சுவை பிடிபட்டது. நீருக்கும் சுவையிருக்கிறது. அவர்களின் சாப்பாட்டின் தரமும் விலையும் மலைக்க வைத்தன.

தூள் போட்டு உறைக்க உறைக்க வைக்கின்ற குழம்பைப் போல் எதுவும் வந்துவிடாது என்கின்ற என் கருத்தில் மாற்றம் இல்லை. நான் பல்லைத் தீட்டினேன். எனது காலைக் கடனை வெகு விரைவாக முடித்துக் காலைச் சாப்பாட்டிற்காய் சாப்பாட்டு அறைக்குச் சென்றேன். துப்பரவாக இயலாதவர்கள் என்றால் சாப்பாடு அறைக்கே வந்துவிடும். இயலக்கூடியவர்களைச் சாப்பாட்டு அறைக்கு வந்து சாப்பிடுமாறு கூறினார்கள். என்னால் கொஞ்சத் தூரம் தடியை ஊன்றி நடந்துவிட முடியும். அதிக தூரம் என்றால் வண்டி தேவைப்படுகிறது. நான் எனது தடியை ஊன்றி மெதுவாகச் சாப்பிடும் அறையை நோக்கி நடந்தேன்.

எனக்கு அங்கே முதல் நாள் கூறியது போல ஆச்சரியம் காத்திருந்தது. அவரை அல்ல அவனைக் கண்டதும் ஆனந்த அதிர்ச்சியில் அங்கமெல்லாம் உறைந்து போய்விட்டது. அபூர்வச் சந்திப்பு இது. சிறுவயதில் இருந்து

நாங்கள் இணைபிரியாச் சினேகிதம். பக்கத்து வீடாகத் தொடங்கிப் பாடசாலையில் இறுகிய நட்பு. தேர்முட்டியில் கடதாசி விளையாடியதில் பிரிக்க முடியாது ஒட்டிற்று. நாட்டிலே வேலையில்லாது வீட்டில் பேச்சு வாங்கும் போது ஆறுதல் படுத்தியது. துணிந்து வெளிநாடு போய்ச் சம்பாதிப்பது என்ற கொள்கையில் இணைந்தது.
நட்புக்கு இலக்கணமாய்த்தான் நாங்கள் இருந்தோம். ஒரே பாலினருக்கு இடையேயான நட்பு என்பது எதிர்ப் பாலாரின் மேல் காதல் வரும் போது நலிந்து போய்விடும். இன்றைய உலகு மாறிவிட்டது. ஆணும் ஆணும் அதிகம் நட்பாய் இருந்தால் ஒருமாதிரிப் பார்க்கிறது. அவன் ஒரு பெண்ணைக் காதலித்தான். அவளோடு வேறு இடம் சென்றான். அது தொலை தூரமாகியது. எங்கள் நட்பு நைந்து நலிவுற்றது. அது நைந்தபடியே அழியக் கூடாதென அவன் எண்ணி இருக்க வேண்டும். இறுதி நட்போடு இங்கே கடைசி காலம் கழிய வேண்டும் என்று வந்து விட்டான். என்னை இன்ப அதிர்ச்சியில் திக்குமுக்காட வைத்து விட்டான்.
நான் அவனைப் பார்த்த வண்ணம் அப்படியே சில கணங்கள் என்னை மறந்து தொடர்ந்தும் நின்றேன். அவன்தான் இவன் என்பதில் எனக்குச் சந்தேகம் இல்லை. கடைசியாகப் பார்த்த படத்தில் இருப்பது போலவே அவன் தோற்றம். இங்கு மீண்டும் வருவதாய் எப்போதும் அவன் அறிவிக்கவில்லை. எனக்கு அதிர்ச்சி கொடுக்க எண்ணினானா என்கின்ற கேள்வி என்னிடம்.

என்னை அதிர்ச்சியில் இருந்து விடுவிக்க அவனே முதலிற் கதைத்தான்.

'என்ன அப்பிடியே நிக்கிறா? வா... வந்து பக்கத்தில இரு' என்றான். நான் பக்கத்தில் சென்று அமர்ந்தேன்.
'நீ இங்க வருவாய் எண்டு நான் கனவும் காணேல்ல!' என்றேன்.
'ம்... நான் இங்க வரவேண்டிய பருவத்துக்கு வந்திட்டன். உன்னுடைய வாழ்க்கை எப்பிடிப் போகுது?'
'நல்லா இருக்கிறன்'
'நித்தி?'
'அவனுக்கு என்ன? இஞ்சதான் இருக்கிறான்'
'மருமகள் எப்பிடி?'
'நல்ல பிள்ளை... அவளும் இங்கதான்..'
'அவைக்குப் பிள்ளையள்?'
'ம்... இரண்டு பேரப்பிள்ளையள்..'
'மூனா எப்பிடி?'

என்னைத் துக்கம் விழுங்கியது. முகம் சந்திரனைக் கிரகணம் கௌவியது ஆகிற்று. அதை எப்படி இவனிடம் சொல்வது? அவளைப் பற்றி நான் ஒரு போதும் இவனுக்கு எழுதியது இல்லை. எனக்கு இப்போது சொல்வதிலும் விருப்பம் இல்லை. நான் பேசாது இருந்தேன். எனது மௌனத்தை அவன் புரிந்திருக்க வேண்டும். 'உங்களுக்குள்ள சிக்கல் போல இருக்குது?' என்றான்.
'அப்பிடியே வைச்சுக் கொள்ளன்' என்றேன். பின்பு அந்தக் கதையை மாற்ற எண்ணியவனாய்,
'சரி அதை விடு... உன்ர புதினத்தைச் சொல்லு?' என்றேன்.
'இரமேஸ் கிறிஸ்ரீனா எண்ட ஒரு நொஸ்க் பிள்ளையைத்தான் கட்டி இருக்கிறான். அது உனக்குத் தெரியும். அவைக்கு ஒரு பிள்ளை இருக்குது. அவனுக்குச் 'சில்வஸ்ரார்' எண்டு பெயர். எனக்கு உன்ன மாதிரி ஒரு பிரண்ஸ் கிடைக்காது புத்திரன். அதுதான் நான் இங்க வரோணும் எண்டு அடம் பிடிச்சு வந்திருக்கிறன். நான் இங்க வந்தா உன்னைக் கூப்பிட்டு அடிக்கடி கதைக்கலாம் எண்டு தான் நினைச்சனான். நீயே இங்க இருக்கிறதப் பார்க்க ஒரு பக்கம் சந்தோஷமா இருக்குது. இன்னொரு பக்கம் நாங்கள் எல்லாம் இங்க வரவேண்டி வந்திட்டுதே எண்டு கவலையா இருக்குது' என்றான் குமரேசன்.
'மனித எண்ணங்களை மாற்றி மாற்றி மடக்கிறதுதானே யதார்த்தம் எண்டுற தாச்சி விளையாட்டு. நினைப்பது போல வாழ்க்கை எண்டுறது நிஜத்தில நடக்காது. எங்கட உடம்பு இந்த நாட்டிற்கானது இல்லை. அதைக் குளிர் தின்னத் தின்ன உக்கிப் போச்சுது. வயது போன பிறகு இங்க வாறதுதானே இந்த நாட்டு வழமை?' என்றேன்.

‘ம். உண்மைதான் புத்திரன். இப்பிடியெல்லாம் வாழ்ந்து, இங்கேயே குடும்பம் நடத்திப் பிள்ளையும் பெத்துக், கடைசிக் காலமும் இங்கேயே முடியும் எண்டு யார் நினைச்சது?’

‘அந்த நேரம் நாங்கள் உழைப்புக்காக ஓடி வந்தம். அந்த வகையில எங்களை யாரும் குறை சொல்லேலாது. அது மனித இயல்பு, அப்போதைய நடைமுறை.
ம்... வந்தம். உழைச்சம். இயக்கங்களுக்கும் கொடுத்தம். அவங்கள் ஆடினாங்கள். குருட்டுத்தனமா தாங்களும் அழிஞ்சு இனத்தையும் அல்லாட வைச்சாங்கள். சுருட்டினவங்கள் சுருட்டினாங்கள். அதுக்குப் பிறகு பழைய குருடி கதவத் திறவடி எண்டுற அரசியல் அங்க நடக்குது’ என்றேன்.

‘நாங்கள் நாட்டுக்குப் போய் வந்தாலும் நாட்டில பாதுகாப்பு இருக்கிற மாதிரி எங்களால உணர முடியேல்ல. இங்கையும் சொந்த வீடு போல உணர முடியேல்ல’ எனக் குமரேசன் ஆதங்கப்பட்டான்.

‘நாடு ஓரளவு நல்லா வரேக்க எங்கட வேர் இங்க பலமாய்ப் பாஞ்சிட்டுது. அதை பிடுங்கிக் கொண்டு போற துணிவு எங்களிட்ட இருக்கேல்லை’ என்றேன் நான்.
நாங்கள் இருவரும் திடீரென வாய்விட்டுச் சிரித்தோம். ஆழ்மனதின் சோகங்களை அதில் மறைக்க முயன்றோம். எங்களைச் சுற்றி இருந்தவர்கள் புரியாது விழித்தார்கள். அவர்களுக்கு நாங்கள் கதைப்பது காட்டுவாசிகள் கதைப்பது போன்று இருந்திருக்க வேண்டும். அன்னிய மொழியும் அதனைப் பேசுபவனும் முதலிற் காட்டுவாசியாகத்தான் தோன்றுகிறான். மொழியைப் பழக்கப்படுத்தி கொள்ளும் போது அவர்களின் மேன்மை புரிகிறது.

‘மொழி புரியாத போது சில வேளை அவர்களைப் பற்றித் தப்பாகப் புரிந்து கொள்கிறோம். அவர்களது சிறிய சிறிய பிழைகள் பெரிதாக ஊதப்படுகிறது. அதுவே காலப் போக்கில் உண்மை என்றாகி விடுகிறது. இதை இங்கு உண்மையாக்குவதில் சில அரசியல் வாதிகளுக்கு என்றும் இலாபம். தங்கள் இலாபத்திற்காய் எந்த இனத்தின் கழுத்தையும் நெரிக்கும் செயலை மகிழ்ச்சியோடு அவர்கள் செய்பவர்கள். இங்கும் அதுதான் நடக்கிறது. மற்றைய இனத்தவரை, நிறத்தவரைப் பற்றிய கருத்து அந்த வகையாகவே முன்னேறுகிறது. நாங்களும் சிலவேளை யூதர்களாய் அல்லது அதனிலும் அதிக வெறுப்பிற்கு ஆளாகலாம். அதிலே வழிந்தோடும் துவேஷத்தில் அந்த அரசியல்வாதிகள் வாக்கு வங்கியைப் பெருக்கிக் கொள்ளலாம். மனிதனின் கொடூரம் எத்தனை நூற்றாண்டு ஆனாலும் அழியாது என்பதற்கு மீண்டும் வரலாற்றுச் சான்று பகிரலாம். மனிதம் மீண்டும் மீண்டும் குளியில் விழலாம்’ என்பதாக நான் எண்ணினேன்.

‘என்ன கடுமையா யோசிக்கிறியள்?’ பெண் குரல் அருகே கேட்டது. நிமிர்ந்து பார்த்தேன். தாதி காலைச் சாப்பாட்டோடு சிரித்த வண்ணம் நின்றாள். நானும் சிரித்த வண்ணம் அதை வாங்கிக் கொள்ள மற்றயதை அவள் குமரேசனுக்கு நீட்டினாள். குமரேசன் அமைதியாக இருந்தான். எனது அமைதி அவனையும் வலுக்கட்டாயமான அமைதிக்குள் தள்ளிவிட்டது. நான் பால்ப் பெட்டியைத் திறந்து பாலை இருவரது குவளைகளுக்குள்ளும் ஊற்றினேன். பின்பு குமரேசனைப் பார்த்து,

‘என்ன என்ர யோசினை உன்னிலும் தொத்தீட்டுது போல இருக்குது? ம்... எனக்கு காசி இராமேஸ்வரமெண்டு அலைஞ்சா மனது அமைதிப்படும். அதுக்கு யாரும் ஒத்துக் கொள்ளுகினம் இல்லை’ என்றேன்.

‘யாரையும் நம்ப முடியாது. இந்த இயலாமையோட இந்தியாவில தனியப் போய்ச் சமாளிக்கேலாது. எனக்கும் அப்பிடி ஒரு ஆசை இருந்திச்சுது. காசி, இராமேஸ்வரமெண்டு அலைஞ்சு அங்கேயே அடக்கமாகோணும் எண்டு. எங்கட சொந்த மண்ணில சாகாட்டியும் புண்ணிய பூமியில செத்துச் சிவபதம் அடையலாமெண்டு..’ என்றான் குமரேசன். புண்ணிய பூமி மனிதர்களால் அசுத்த பூமியாகிப் பல யுகங்கள் ஆகிவிட்டது என்பதை அறியாது அவன் கதைத்தான்.
நான் எதுவும் சொல்லவில்லை.

‘என்ன பேசாமல் இருக்கிறா? உனக்கு அப்படியான ஆசையெல்லாம் இல்லையே?’ என்றான் அவன்.

‘ஏன் இல்ல? யாருக்கில்லை? அதெல்லாம் நடக்கப் போறேல்ல. பிறகேன் மனதை வீணாக் குழப்போணும். கொஞ்சம் ஏலக்கூடிய காலத்தில எங்கையாவது அந்தப் பக்கம் போய்க் குடியேறி இருக்கலாம். அதை நாங்கள் செய்யேல்ல’ என்றேன்.

'உண்மைதான். இனி இப்பிடியே காலத்தைத் தள்ள வேண்டியதுதான்' என்றான் அவன்.

'ம்… நான் ஒரு திட்டத்தோடதான் இங்க வந்திருக்கிறன். எங்கட வாழ்க்கையை ஒரு கதையா எழுதிப்போட்டுத்தான் சாகோணுமெண்டு நினைச்சிருக்கிறன்' என்றேன்.

'ஆ… கதை எழுதப்போறியோ? இப்பதானே இன்ரநெற்றில இந்திரஜாலம் காட்டுறாங்கள். எப்பிடி எண்டாலும் ஒவ்வொருத்தற்ற எழுத்தும் ஒவ்வொரு மாதிரிதானே… நல்ல விஷயம்… எழுது எழுது… எங்கட வேதனையை எல்லாம் அப்பிடியே எழுது' என்றான் அவன். முதலில் ஆச்சரியப்பட்டவன் இறுதியில் ஊக்குவிப்பது போல முடித்தான்.

'ம்… கூடியமட்டும் எல்லாத்தையும் எழுதுறன். வாவன் என்ர அறைக்குப் போவம்' என்றேன்.

'சரி போவம்' என்று அவன் புறப்பட்டான்.

## 2

அணையும் விளக்காக எனது வாழ்க்கை. அதற்குள் என்னை அவசரப்படுத்தும் இறுதி மூச்சான எழுத்துப் பணி. சாதிப்பதற்காய் எழுதாவிட்டாலும் சம்பவங்களைப் பதிந்து செல்வது என் கடமை. அதை முடிக்க முயற்சிக்க வேண்டும் என்கின்ற அவசரத்தில் ஒன்பது மணிக்கே அறைக்கு வந்தாகிற்று. கணினியை இயக்கியாகிற்று. பாமினித் தமிழ் எழுத்தைத் தெரிவு செய்து எழுதிப் பார்த்தாகிற்று. எந்த எழுத்து எங்கு இருக்கிறது என்பதில் ஏகப்பட்ட தடுமாற்றம். எப்படித் தமிழ் எழுதுவது என்பதை இன்னுமொருமுறை கற்கவேண்டும் என்பதான அவஸ்தை. அச்செடுத்து வைத்திருந்த பாமினி விசைப்பலகை மாதிரியை முன்னே எடுத்து வைத்தேன். நாவலா? கட்டுரையா? ஏதோ ஒரு விதத்தில் என் பதிவு முற்றுப்பெற வேண்டும். எழுத்தெழுத்தாய் தேடுவதை நினைக்க அது அசுரப் பணியாய் என் முன் எழுந்து நிற்கிறது. சலசலப்பிற்கு அஞ்சா நரி நான். நினைத்ததைச் செய்ய வேண்டும் என்கின்ற அவதி என்னுள்.

மீண்டும் எழுத்துக்களைத் தேடத் தொடங்கினேன். சரியான எழுத்துக்கள் கிடைக்கும் பொழுது எங்கிருந்து எழுதுவது என்கின்ற கேள்வி எழுந்தது. நினைவுகள் என்னை எங்கோ இழுத்துச் சென்றன.

★

எழுபதுவரையும் கவலையில்லாத வாழ்க்கை. எல்லைகள் அற்ற குருவிகளாக எங்கும் பறந்து திரிந்த காலம். நட்புகள் என்றும் இணைபிரியாத சுகம். குமரேசனும் என்னோடு அர்த்தநாதீஸ்வரரின் அடுத்த பாதி போல. பகலிலே அனேகமாகத் தேர்முட்டியில் இருந்து கடதாசி விளையாடுவது எங்கள் பொழுது போக்கு. இல்லை… அதுதான் அப்போதைய பிரதான வேலை. ஐயா வீட்டில் இல்லை. அவர் கொழும்பிலே அரச உத்தியோகம் பார்த்தார். அம்மாவின் ஆட்சி அரசன் இல்லாத நாடுமாதிரி. அரசன் இல்லாத நாட்டில் நான் பெயர் சூட்டப்படாத இளம் சர்வாதிகாரி. தேர்முட்டி எனது போக்கிடம்… போதிமரம்… புகைவிடும் சுதந்திரம்…

எங்கள் வீடு 'டனா' வடிவில் கட்டப்பட்டு முழுமை பெறாது நின்றது. அது முழுமை பெறவேண்டிய அவசியமும் இல்லை. மூன்று பேருக்கு மிக மிஞ்சிய இடம். அம்மாவின் ஆட்சி அதிகம் குசினியில்தான். நின்று சமைக்கக்கூடியதாக சீமேந்தாற் கட்டி மண்ணால் மெழுகிய புகைக்கூடு. இன்றைய நவீன சமையல் அறையின் அன்றைய வடிவம். அப்புத்துரை மேசனின் கைவண்ணம். மாரியில் கறுப்பாக இடைக்கிடை புகைக்கூட்டில் இருந்து இலவசமாகக் கறுத்தப் பொட்டு ஒழுகும். அப்பொழுது சிரட்டை உரைக்காமல் அதை வைத்துக் கொள்ளலாம். வீட்டைச் சுற்றி கிணற்றோடு கூடிய பெரிய வளவு. கிணற்றின் நீரை வாயில் விட்டுக் கொப்பளித்தால்

காறிப் பல முறை துப்ப வைக்கும் கடல் உப்பு, வேம்பு, பனை என்று வறட்சி மரங்களின் செழுமை. வீட்டில் அம்மாவுக்குத் தனியே இருப்பது பயம். அந்தப் பயத்தை போக்கும் ஆண்சிங்கம் நான்.

எங்கள் அயலில் பிள்ளையார் கோவில் இருந்தது. அவர் பணக்காரப் பிள்ளையார். சந்தனம் மிஞ்சினால்... அவர் எப்போதும் தன்னைப் புதுப்பித்துக் கொள்வார். அந்த ஊரிலேயே முதன் முதல் தனக்குக் கோபுரம் அமைத்து தனது செழிப்பை ஊருக்குள் போட்டியாகத் தொடக்கி வைத்தார். முருகனுக்கு இல்லாத அவசரம் அவருக்கு. அவருக்கு மரத்தால் வடித்த சிற்பத் தேர். சிற்பத் தேருக்கு ஒரு வீடு. அதன் தொடராய் மர நிழலில் இந்தத் தேர்முட்டி. முன்னுக்குப் பல வகைக் கடைகள். கோயிலின் இரு புறமும் மனிதர்கள் போய்வரும் பாதைகள். மறு பக்கம் கேணி. வடக்கும் தெற்குமாய்ப் பரந்து கிடந்த வீதி. வடக்குப் பக்கத்தில் ஐயருக்காகக் கட்டப்பட்ட வீடு. தெற்குப் பக்கத்தில் வாசகசாலை. அதையண்டி ஒரு பெரிய ஆலமரம். அதற்கு முன்பு பேருந்துத் தரிப்பிடம். பின்னாளில் பிள்ளையாரைச் சுயநலவாதியாக்கி எல்லாவற்றையும் அடைத்துக் கட்டிக் கோட்டை அமைத்துக் கொண்டனர். கடதாசி விளையாடினால் பொழுது போகும். நட்புப் பெருகும். ஊர் அரட்டைகள் நகைச்சுவையாகும். சிரிப்பு வானைப் பிளக்கும். சில்லறை விடயங்களுக்காகச் சிலவேளை சச்சரவுகளும் உருவாகும். பெண்களைக் கேலி செய்யலாம். பெரிசுகளையும் கேலி செய்யலாம். இம்சிக்கப்பட்டவர்களில் சிலர் தூசனத்தால் பேசக் கேலியாகச் சிரிக்கலாம். பெண்கள் அப்போது அகப்பட்டால் கூனிக் குறுகலாம்.

தேர்முட்டியில் கடதாசி விளையாடுவதும், கேணியில் குளிப்பதும், மானம் ரோசம் இல்லாமல் அம்மாவிடம் பேச்சு வாங்கி வாங்கிச் சாப்பிடுவதும் எழுபதாம் ஆண்டோடு புளித்துப் போய்விட்டது. ஏதாவது புதுமையாகச் செய்ய வேண்டும் என்கின்ற எண்ணம் முளைவிடத் தொடங்கியது. கடதாசி விளையாடும் கூட்டத்திலே அப்போது புகை பிடிக்காதவர்கள் ஒரு சிலரே. அதில் நட்சத்திரமாய் மின்னிய பெருமை எனக்கு உண்டு. அந்த வறட்டு கௌரவம் புளித்துப் போயிற்று. புகைக்கு என்ன சக்தி இருக்கிறது என்பதைப் பரிசோதிப்பது என்று முடிவெடுத்தேன்.

ஐயாவின் பயணக் காசை முக்கிய தேவைக்கு மட்டுமே பாவிப்பேன். அம்மாவிடம் காசு வாங்குவது ஆண் மாட்டில் பால் கறப்பது போல. அப்படியும் நான் ஐந்து பத்து என்று கைச் செலவிற்குக் கறந்து விடுவேன். அந்த பணத்தில்தான் தேர்முட்டிக்கு முன்பிருந்த கொட்டிலில் வாய்ப்பன், வடை போன்ற சிற்றுண்டி வாங்கிச் சாப்பிடுவது. தேர்முட்டிக்கு வருபவர்கள் எல்லோருக்கும் வாங்கிக் கொடுக்க முடியாது. அது ஆனைக்குச் சோளன் பொரி போடுவதான கணக்கு. சிலவேளை அப்படி மாட்டிக் கொண்டு விழி பிதுங்கியதும் உண்டு.

இம்முறை அம்மா தந்த பணத்தில் ஒரு 'கொல்ட்பிளாக்' வாங்கிக் கொண்டேன். முதன்முதல் ஒளித்துப் புகைத்தலே பத்தியமாகத் தோன்றியது. அக்கறையாகத் தோட்டம் பார்க்கப் போவதாக அம்மாவுக்குச் சொன்னேன். பனந்தோப்பில் வடலிக்கு அருகே இருந்து புகைவண்டி ஓட்டினேன். பின்பு கொய்யா இலையைச் சப்பித் துப்பிவிட்டு வீடு திரும்பினேன்.

குளிர்விட்டுப் போயிற்று. குமரேசன் முகர்ந்து பிடித்து விட்டான். இருவரும் சைக்கிளில் கடற்கரைக்குச் சென்று சுதந்திரமாகப் புகை விட்டோம். குமரேசனுக்கு இப்படிக் கடற்கரைக்கு வந்து பற்றுவது பிடிக்கவில்லை. மேலும் சுதந்திரம் தேவைப்பட்டது. தேர்முட்டியில் இருந்து பற்றினால் என்ன என்று கேட்டான். நான் எதுவும் பேசவில்லை. அடுத்த நாள் தொடக்கம் அவன் அங்கே புகை பிடித்தான். நானும் அவனோடு சேர்ந்தேன்.

புகை பிடிப்பதில் இருந்த விறுவிறுப்பு வரவரச் செத்துப் போயிற்று. அட இதுதானா என்கின்ற எண்ணம் எழலாயிற்று. இதற்கு மேல் என்ன என்கின்ற தேடல் தொடங்கிற்று. வேம்படியில் இருந்த 'வார்' கடற்படையின் கங்கை ஜலம். தெங்குவடி எங்களுக்கும் தேவையாகிற்று. போத்தல் ஒன்று வாங்கிக் கொண்டோம். அதற்கு துணையுணவாக மலிவான பருத்தித்துறை வடையைச் சேர்த்துக் கொண்டோம். கலப்பதற்குச் சோடாவும் கைவசமாகியது. 'கசுர்னா' கடற்கரைக்குச் செல்வதாய் திட்டம் தீட்டினோம். அடுத்த நாள் திட்டத்தை செயற்படுத்துவதாய் முடிவு செய்தோம். தூக்கத்திற்காக வீடு சென்றோம்.

அன்று நான் வீட்டிற்குப் போகும் போது இரவு எட்டுமணியாகிவிட்டது. அம்மா வானொலி கேட்டுக் கொண்டு இருந்தார். நான் முகம் கைகால் கழுவுவதற்காய் மெதுவாகக் கிணற்றடியை நோக்கிச் செல்லத் திரும்பினேன்.

'நில்லடா அங்க' பசு சிங்கமானதாக அம்மாவின் குரல் அதிர்ந்தது. எனக்கு அது அதிர்ச்சியாகிற்று. அம்மாவா என்கின்ற ஐயத்தோடு பதற்றம் பிறந்திற்று. அதிர்ந்து கதைப்பது அவரின் வழமையல்ல. எதற்காக இன்று இந்த மாற்றம்? பதில் கிடைக்கவில்லை. திகைப்பு மேலிட்டது.

கேள்விகளோடு நான் அசையாது நின்றேன். அம்மா என்னை நோக்கிப் பிசாசு போல வந்தார். நான் அப்படியே உறைந்து போய் நிற்க எனது தலை முடியைக் கொத்தாய்க் கூட்டிப் பிடித்தார். என்னால் தலையை அசைக்க முடியவில்லை. அம்மாவையே நான் வெறித்த வண்ணம் நின்றேன். 'ஊதடா வாய' என்ற அந்தத் தொனியை அதற்கு முதல் நான் கேட்டது இல்லை. இருந்தும் நான் ஊதவில்லை. நான் வளர்ந்த பின்பு அம்மா என்னை ஒரு போதும் இப்படிச் சிறுவனாக நடத்தியதில்லை. தலைக்கு மேல் வளர்ந்த பிள்ளையென அடிக்கடி சொல்லி என்னைப் பெரிய மனிதனாகவே நடத்தியது அவரின் பிழையாக இருக்கலாம். 'ஊதடா வாய' கன்னத்தில் ஒரு அறை திடீரென விழுந்தது. நான் திகைத்துப் போய்விட்டேன். கள்ளன் கையும் களவுமாய்ப் பிடிபட்டான் என்பது புரிந்தது.

அம்மாவின் கை நீட்டல் அதிர்ச்சிக்கு மேல் அதிர்ச்சி தந்தது. அம்மா எனக்குக் கடைசியாக அடித்து மூன்று வருடங்களுக்கு மேலானதாக ஞாபகம். இப்போது மீண்டும் அடித்திருக்கிறார்.

'ஊதடா வாய' நான் கல்லுளிமங்கனாக ஊதாது நின்றேன். அம்மா பொறுமையை இழந்திருக்க வேண்டும். வலது கையின் பெருவிரலாலும் ஆட்காட்டி விரலாலும் எனது கன்னத்தில் நகம் பதிய அழுத்தினா. அம்மாவின் நரம்புகள் புடைத்துக் கொண்டன. கண்கள் சிவந்திருந்தன. வேதனையை என்னால் பொறுக்க முடியவில்லை. வாய் எனது விருப்பின்றியே திறந்தது. வளமாக மாட்டிக் கொண்டேன். அம்மா எனது வாயை முகர்ந்து பார்த்தார். பின்பு என்னை விலத்தி விட்டுத் தலையில் அடித்து அழுதார்.

'கண்ட நாயளோட சேர்ந்து இப்பிடிச் செய்யிறியேடா? உன்ர ஐயா பீடி குடிக்கிறேல்ல, சிகரெட்டுப் பத்துறேல்ல. நீ இந்த வயசில இப்பிடிச் செய்யிறியோடா? நான் ஊரரிசி அவிச்சுத் தாறன். பத்தாத்துக்குக் கைச்செலவுக்குக் காசு தாறன். நீ தேர்முட்டிவழிய திரியிறது. காட்ஸ் விளையாடுறது. கண்ட நாயளோட சேர்ந்து கடைசியாச் சிகரெட்டும் பத்தப் பழகியாச்சு. உன்னோட்ட வயசுப் பொடியள் தாய் தகப்பனுக்கு எப்படி உழைச்சுக் கொடுக்குதுகள் எண்ட திணுசைப் பார்க்கவேணும். அங்க கமலியின்ர அந்தப் பொடியனுக்கு எத்தின வயசு? உன்னோட்ட வயசுதானே? மாசாமாசம் நானுறுரூபா உழைச்சு அனுப்புது. அது பிள்ளை. நீ என்ன செய்யிறா? சிகரெட்டுப் பத்திக்கொண்டு திரி. படிச்சு ஒரு வழியக் காணம். ஒரு சீ இரண்டு எஸ்சுக்கு மேல போகேல்ல. ஆனா இப்ப சிகரெட்டுத் தேவைப்படுகுது. நான் நாளைக்கே கொப்பருக்கு எழுதுறன். அவர் வரவிட்டி அவருக்குப் பதில் சொல்லு. உன்ன இனி என்னால கட்டுப்படுத்தேலாது. உனக்குக் கை நீட்டி அடிச்சா என்னைப் பார்த்துதான் ஊர் சிரிக்கும். போடர் ஏன் மரம் மாதிரி நிக்கிறாய்? மூஞ்சையக் கழுவிப் போட்டு வந்து கொட்டு'

அம்மா எனக்கு அடிமட்டும் தந்திருந்தால் வலித்திருக்காது. தன் தலையில் அடித்து அழுதது என் மனதில் வலித்தது. நான் தப்பு செய்ததாய் என்னையே என் மனது குற்றம் சாட்டியது. நான் பேசவில்லை. கன்னம் எரிந்தது. அதைவிட மனது வெந்தது. நான் செய்வது தப்புதான் என்கின்ற தீர்ப்பு தலையில் பலமாக அடித்தது.

கிணற்றடிக்குச் சென்று தண்ணியை அள்ளி முகத்தில் அடித்தேன். நகக்காயம் புண்ணில் மிளகாய் பட்டது போல எரிந்தது. எரிவோடு கழுவிவிட்டு கொடியிற் கிடந்த துவாயில் முகத்தைத் துடைத்தேன். சமையல் அறைக்கு வரும் போது அம்மா அரிசிமாப் பிட்டோடு ஒரு தட்டை நீட்டினார்.

சாப்பாட்டைப் பார்த்ததும் அடக்கி வைத்த கோபம் பொங்கியது. நீ தண்டித்தால் மட்டும் போதுமா எனக்கும் தண்டிக்கத் தெரியும் என்று நினைத்தேன். 'எனக்குச் சாப்பாடு வேண்டாம்' என்று நான் கோபத்தோடு கத்தினேன்.
'வேலகாறக் கொம்புக்கு கோவம் வந்திட்டுது போல இருக்குது?' என்றார் அம்மா.
'...'
'நீ இப்படிச் செய்யிறது பிழை இல்லையேடா?'

‘அப்ப நான் என்ன செய்யிறது? எங்கையும் போய்ச் சாகட்டே?’ நான் அம்மாவைப் பயமுறுத்தினேன்.
‘ஏதும் சொன்னா ஆ ஊ வென்று வெருட்டு. ஏதாவது வேலைவெட்டி செய்யலாம் எல்லே?’
‘வேலைக்கு எங்க போறது. ஐயாவும் அக்கறை எடுக்கிற மாதிரித் தெரியேல்ல’
‘சரி முதல்ல வந்து சாப்பிடு பாப்பம்’
‘எனக்குச் சாப்பாடு வேண்டாம்’ வாய் வீம்பு வசனம் பேசியது. பசி அதையும் மீறி வயிற்றை அமிலத்தால் எரித்தது. அந்த வசனத்தில் எவ்வளவு உண்மை இருந்தது என்பதை நான் அறிவேன். பாவம் அம்மா, ‘வாடா’ என்றார்.

அதற்கும் மேலாக அம்மா எழுந்து வந்து என்னைப் பிடித்துச் சென்று சாப்பாட்டுப் பிளேற்றின் முன்பு இருத்தினார். அப்படிச் செய்யும் போது அம்மா சிரித்துக் கொண்டு செய்தது எனது கோபத்தை தணித்தது. கோபம் போன பின்பு காத்துப் போன பலுனாக மௌனமாகச் சாப்பிட்டேன்.

‘உடனடியாக ஏதாவது ஏற்பாடு செய்யச் சொல்லி நான் ஐயாவுக்குக் கடுதாசி போடுறன். கட்டாக் காலியாட்டம் நீ திரியப் பார்க்கிறாய்’ என்றார் அம்மா.
‘வேண்டாம் அம்மா’ என்றேன் நான்.
‘அப்ப? என்ன ஊர்சுத்திக் கொண்டு திரியப் போறியே?’
‘நான் கப்பலுக்குப் போகலாமெண்டு யோசிக்கிறன்’
‘என்னத் தனிய விட்டிட்டு நீ கப்பல் கடல் எண்டு அலையப் போறியே? நீயும் போனா எனக்கு யார் இங்க இருக்கிறது? கூடமாட ஒத்தாசைக்கு ஆளில்லாமல் நான் தனிமரமா நிற்கவே? கொப்பர் ஆடிக்கு ஒருக்கா அமாவாசைக்கு ஒருக்கா இங்க வருவார். உதெல்லாம் சரிவராதெடா’
‘எல்லாத்தையும் பார்த்தா எப்பிடியம்மா? நான் போனப் பிறகு ஐயாவை இஞ்ச மாத்தலாகி வரச்சொல்லு. அதுக்காக என்னைத் தடுக்காத’
‘அதெல்லாம் சரிவருமோடா?’
‘சரிவரும். அவர் வருவார்’
‘கப்பலுக்குப் போறதெண்டா லேசுப்பட்ட காரியமோடா?’
‘முதல்ல அதை றைபண்ணிப் பாக்கிறன். சரிவராட்டி ஐயாவைக் கேட்பம்’ ‘கப்பலுக்குப் போக இப்ப எவ்வளவு காசு வேணும்? அது சரி, ஐயாட்ட சொல்லாமல் நீ போகேலுமே?’
‘நீ இப்ப சொன்னீ எண்டா அவர் ஏதாவது நொட்டை சொல்லுவார். சும்மா தேவையில்லாமல் பிரச்சனைவரும்’
‘சரி நான் சொல்லேல்ல. நீ கெதியாப் போற வழியப்பார். வந்து என்னத் திண்டு கைகழுவிப் போடுவார். அதோட நீ தனியப் போகேலாது’
‘இல்லை. நான் தனியப் போகேல்ல’
‘அப்ப யார் உன்னோட வாறமெண்டவன்?’
‘குமரேசனைத்தான் கேட்டுப் பார்க்கப் போறன்’
‘ம்... அங்கையும் போய்ச் சேர்ந்து சிகரெட்டுப் பத்தலாம்?’
அம்மா கலங்கிய கண்களோடு என்னைப் பார்த்தார்.
‘சும்மா இரம்மா. இஞ்ச ஏதோ முஸ்பாத்திக்குப் பத்தினதைப் பெரிசாகத் தூக்கிக் கொண்டு அலையிறா’ என்றேன்.
‘அவையிட்ட கப்பலுக்கு அனுப்பிற அளவுக்குக் காசு இருக்குமோடா?’ அம்மாவின் கவலைகளின் தொடர் நீண்டது.
‘அது அவையின்ர பிரச்சின அம்மா. எங்கையாவது பிரட்டிக் குடுப்பினம்’ ‘கப்பலுக்குப் போனவையின்ர குடும்பங்கள் எல்லாம் நல்லாத்தான் இருக்குதுகள். எண்டாலும் கண்காணாத இடத்தில என்ன பிழைப்போ என்ன சீவியமோ?’

‘கண்காணாத இடத்தில இல்லை அம்மா… கடலுக்க’ அம்மாவுக்குக் கொஞ்சம் புளி கரைத்தேன்.

‘என்னடா இப்பிடிச் சொல்லுறா. உனக்கு எல்லாம் விளையாட்டா இருக்குது’

‘சும்மா பயப்பிடாத அம்மா. ‘திரை கடல் ஓடியும் திரவியம் தேடு’ எண்டு நீதானே அடிக்கடி பழமொழி சொல்லுவா’

‘ஆயிரம் பழமொழி இருக்குது. அப்பிடியெல்லாம் வாழ முடியுமே?’

‘அது பழமொழி இல்லைப் பொன்மொழி அம்மா’

நான் சாப்பிட்டு அதன் திருப்தியில் ஏப்பம் விட்ட வண்ணம் எழுந்தேன். திடீரெனத்தான் இத்திட்டம் என் மனதில் உதித்தது. அம்மாவிடம் சொல்லியாகிவிட்டது. அம்மாவைப் பிரிந்து எப்படிப் போவது என்கின்ற பிரிவின் சோகம் சொல்லப்படாத இரகசியமாய்… அது கொடூரமாகத் தோன்றியது. கொலை நடுங்கப் பண்ணியது. கற்பனையில் இருக்கின்ற சுகம் நடைமுறைக்குச் சரியாகுமா? குமரேசன் என்னோடு வருவான். அவன் வந்தால் நூற்று ஆனையின் பலம். குமரேசன் வீட்டிற்குப் பத்தாயிரம் பெரிய தொகை. வீட்டில் இல்லை என்று கை விரித்தால் அவன் என்ன செய்வான்? எப்படியாவது அவனையும் கூட்டிக் கொண்டு செல்ல வேண்டும். மூன்று வருடக் கப்பல் வாழ்க்கைக்குப் பிறகு இங்கே வந்து நிரந்தரமாகத் தங்கிவிடலாம். அரச உத்தியோகம் இல்லை என்றால் என்ன? கடைகண்ணி வைத்துப் பிழைத்துக் கொள்ளலாம். பிறகு கலியாணம் செய்து நலமாக வாழலாம்.

எனது கற்பனைக் கோட்டையின் அத்திவாரம் கப்பல் பயணம். என்ன விலை கொடுத்தாவது அதை நிறைவேற்ற வேண்டும் என்கின்ற அவா. சுகமான மணவாழ்வு கற்பனையில் விரிந்தது. சொர்க்கிப் போனேன். பின்பு சுகமாகத் தூங்கிப் போனேன்.

★

அடுத்த நாள் காலை சாப்பிட்டதும் தேர்முட்டிக்குக் குமரேசனைப் பார்ப்பதற்காய்ச் சென்றேன். அவன் அப்போதே தனது தொழிலைத் தொடங்கிவிட்டான். அம்மா பார்த்திருந்தால் ‘வாழுவாள் பிள்ளையை மண் விளையாடலில் தெரியும்’ என்று ஓர் பாட்டம் ஒப்பாரி வைத்திருப்பார். நான் தேர்முட்டியின் மேற்றளத்திற்கு ஏறிச் சென்றேன். குமரேசன் என்னைக் கண்டதும் வழமை போல நட்பாக நகைத்தான். நான் அவனை மெதுவாக அங்கிருந்து கிளப்பிச் செல்லத் திட்டமிட்டேன். தேர்முட்டியில் பேசப்படும் விடயங்கள் பத்து பத்திரிக்கைக்குக் கொடுப்பதை விடப் பிரபலமாகும் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி.

‘குமரேசா இங்க இருக்கிற வெக்கைக்கு இப்ப கடற்கரைக்குப் போனா நல்லா இருக்கும். வா போவம்’ என்றேன்.

‘ம் வெள்ளைக்காரப் பெடியள் வெளிக்கிட்டிட்டாங்கள்..’ என்றான் அவனோடு விளையாடியவன்.

குமரேசன் கேள்வியோடு என்னையும் கடுதாசியையும் மாறி மாறிப் பார்த்தான்.

‘வா… காட்ஸ் இன்னொரு நாளைக்கு விளையாடலாம்’ என்றேன்.

‘ம்… அதுக்கா?’ அவனுக்குக் கள்ள இளநீர் பிடுங்கி அதற்குள் தென்னம் சாராயம் விட்டு அடிப்பதான கற்பனை. நான் அதைக் குழப்பவில்லை. அவன் எழுந்து கொண்டான். நானும் அவனும் பலரின் கோபத்தையும் பொருட்படுத்தாது தேர்முட்டியால் இறங்கினோம். குமரேசன் பரபரப்போடு கதைத்தான்.

‘டேய்! இங்க வேண்டாம். கசூர்னா வீச்சுக்குப் போவம். அங்க அடிச்சிட்டுக் குளிச்சா அந்தமாதிரி இருக்கும். தொண்டன் கடையில சாப்பிட ஏதாவது வாங்கிக் கொண்டு போனா சாப்பிட்டிட்டுப் பின்னேரம் இங்கால வரலாம்’ என்றான்.

‘டேய்! நான் ஒரு முக்கியமான விசயம் உன்னோட கதைக்க வேணும்.’

‘கதைப்பம்… கதைப்பம். கொஞ்ச நேரம் இதில சும்மா நில். நான் போய் அதை எடுத்தாறன்’

அவன் சைக்கிளில் அவசரமாகச் சென்றான். நான் சொல்ல வந்ததைத் தப்பாக அர்த்தப்படுத்தியது எனக்குப் பெரும் சங்கடமானது. குடித்துவிட்டு இன்று வீட்டுக்குப் போனால்… போக முடியாது. குடிக்காவிட்டால் இவனோடு இன்று எதுவும் கதைக்க முடியாது. குமரேசன் தான் நினைத்ததை நடத்தாமல் விடமாட்டான். இன்று அவன் என்னை விடப்போவதில்லை என்பது புரிந்தது. நான் என்ன செய்வதென முழித்த வண்ணம் நிற்கும் போதே அவன் சைக்கிளில் மீண்டும் திரும்பி வந்தான். சைக்கிள் கைபிடியிற் கொளுவியிருந்த தெறி வாக்கினுள்ளே போத்தல். குமரேசன் சைக்கிளைப் பௌவியமாக நிறுத்தினான். போத்தலுக்கான இராஜமரியாதை அது. பின்பு என்னை ஏறு ஏறுவென அவசரப்படுத்தினான். என்னால் அதை மறுக்க முடியவில்லை. சைக்கிளில் ஏறினேன்.
சில கணங்கள் அம்மாவின் நினைவு. அது மௌனத்திற் கரைந்தது. அதைக் குமரேசனே கலைத்தான்.

'என்ன அப்பிடி முக்கியமான விஷயம் கதைக்கோணுமடா?'

'ச் அம்மாவுக்குச் சிகரெட்டுப் பத்தின விஷயம் தெரியும். நேற்று என்னைக் கையும் களவுமாகப் பிடிச்சிட்டா'

'ச் இதே. சோ இனிப் பயமில்லாமல் பத்தலாம்'

'நான் இனிப் பத்துறேல்ல எண்டு முடிவு எடுத்திருக்கிறன்'

'ம்…?'

அவன் அதிசயப்பட்டான்.

'நாளை முதற் குடிக்கமாட்டேன் சத்தியமடி தங்கம். அப்பிடிதானே இது. எத்தினை நாளைக்குப் பாப்பம்' என்றான்.

'நல்லாப் பார். நான் முடிவு செய்தா மாறமாட்டன். நான் உன்னோட வேற ஒரு முக்கியமான விஷயம் கதைக்கோணுமெண்டு வந்தன். நீ சொல்ல வந்ததைக் கேட்காமல் போத்தலோடு வாறா'

'என்னடா புதிர் போடுறா? விஷயத்தைச் சொல்லு' என்றான் அவன்.

'அம்மா நேற்று என்னைக் கையும் களவுமாகப் பிடிச்ச பிறகு அம்மாவுக்கும் எனக்கும் பெரிய சண்டை'

'அணுவாயுதம் பாவிச்சியளோ? தெய்ஞ்ச 'றக்கோர்ட்' மாதிரிப் புலம்பாத.'

'சொல்லுறதப் பேசாமல் கேளடா'

'சரி சொல்லு'

'நான் வேலை செய்யாமல் திரியிறன் எண்டு பேசினா. என்ர வயசுப் பெடியள் எல்லாம் எப்பிடி உழைக்குதுகள் எண்டா. கடைசியாக ஐயாவுக்கு கடுதாசி எழுதி எதாவது வேலை எடுத்துத்தரச் சொல்லப் போறன் எண்டா. எனக்கது பிடிக்கேல்லை. ஐயாவின்ர கட்டுப்பாட்டுக்க எங்கையும் ஆருக்கும் கீழ அடிமையா வேலை செய்ய வேண்டாம் எண்டு நினைக்கிறன். நான் வேறொரு ஐடியாவை அம்மாட்ட சொன்னன். அம்மா ஒரு மாதிரி ஓம் எண்டிட்டா'

'என்னது உன்ர ஐடியா?'

'கப்பலுக்குப் போய்க் காசா அள்ளியாறது'

'காசு அள்ளுறதை விடு. அதுவும் ஆருக்கும் கீழ வேலை செய்யிறதுதானே? சரி அதை விட்டாலும் அதுக்கு நிறையச் செலவாகுமே?'

அவன் முகத்தைத் திரும்பிப் பார்த்தேன். அவன் முகத்தில் ஏகப்பட்ட கவலைக் கோடுகளின் கரிய சித்திரம். இ.போ.ச பேருந்து ஒன்று எங்களை விலத்திச் சென்றது. அதன் கரும் புகை ஒரு முறை மூச்சை முட்டச் செய்தது. அவன் அதைக் கேட்ட பின்பு அமைதியாகிவிட்டான். அவன் தலைக்குள் ஆயிரம் யோசனைகள் என்பது எனக்குப் புரிந்தது. தெருவெங்கும் பள்ளமும் குழிகளும். பாதை போடுவதாய்ச் சொல்லுகிறார்கள். பதவிக்காகக் கோசம் போடுவதில் மாத்திரம் அக்கறை காட்டுகிறார்கள்.

நான் குமரேசனைத் திரும்பிப் பார்த்தேன். அவன் அமைதியாகச் சைக்கிள் பெடலை உழக்கினான்.

'என்ன பேசாமல் இருக்கிறா?'

'எங்கட வீட்டுப் பொருளாதாரத்திற்கு இது சரிப்பட்டு வருமோ தெரியேல்ல' என்றான்.

‘நீ வராட்டி நான் தனிச்சுப் போறதோட அப்பிடியே தொலைஞ்சு போனாலும் போயிடுவன்’

‘ஏன்ரா மூதேவி… ஏன் இப்பிடிக் கதைக்கிறா? என்ர பிரச்சனை பத்தாயிரம்..’

‘வீட்டக்கீட்ட அடவு வைச்சு?’

‘அதுக்கு அவை ஓமெண்டோணுமே. குமர் பெட்டையளோட தெருவில நிக்க ஓமாமே?’

‘நானும் வந்து கதைச்சுப் பாக்கட்டே?’

‘நீ கதைச்சாலும் ஒண்டும் நடக்காது. அவை அந்த வீட்டைத்தான் தங்கச்சிக்குச் சீதனமாய்க் குடுத்துக் கலியாணம் செய்யிறதெண்டு இருக்கினம்’

‘நகையேதும்?’

‘அம்மான்ர தாலிச் சங்கிலி இருக்குது. அதை வைக்க மாட்டினம்.’

‘அது என்ன தாலிச் சங்கிலி?’

‘சங்கிலியில கோர்த்த தாலி. நீ அம்மான்ர கழுத்தில அதை ஒருநாளும் பார்க்கேல்லையே? கனக்க வராது’

‘நான் எங்க பார்த்தன். அது சரி நீ ஒரே பிடியா நிண்டு கேட்டுப்பார். கப்பலுக்குப் போனா ஆறு மாசத்தில லொட்டாத் திருப்பீடலாம்’

‘ம்… போனாத் திருப்பீடலாம். போகாட்டி தொங்கீடலாமே? லேசாப் போகமுடியும் எண்டா எல்லோரும் போயிடுவாங்கள்’

‘போகலாம் பயப்பிடாத’

‘தற்சமயம் ஏதாவது நடந்திட்டா?’

‘அடச்சீ… அவ நம்பிக்கையாகப் பேசாதையடா’

‘அப்பிடி நடந்தா நான் பிறகு இங்க திரும்பி வர முடியாது’

‘நீ ஏன்ரா இப்பிடி அபசகுனமாகக் கதைக்கிறாய்?’

‘நீ செல்லப் பிள்ளை… உனக்கு என்ன?’

‘சரி. நீ கஸ்ரப்பட்டா நானும் இந்த ஊருக்குத் திரும்பி வரேல்லை’

‘அப்பிடியா. நீ எனக்குப் பிரண்சா இருக்கிறது பற்றிப் பெருமைப்பட்டுக் கொள்ளலாம். ஆனா, இது வாழ்க்கை.’

‘நீ இப்ப வாறியா இல்லையா?’

‘நான் வீட்டில கதைக்கிறன்’

‘நாளைக்கு நானும் வாறன். இரண்டு பேருமாகக் கதைப்பம்’

கதைப் பிராக்கில் வலந்தலை வந்ததே தெரியவில்லை. சைக்கிள் சாப்பாட்டுக் கடையின் மணம் கண்டது போல் நின்றது. கடைக்கு உள்ளே நான் ஆணையிட்டால் என்பதாக எம்ஜியாருக்குக் கொடுக்கப்பட்ட சௌந்தர்ராஜனின் குரல் கம்பீரம் காட்டியது. குமரேசன் என் பொக்கேற்றுக்குள் கைவைத்து இழுத்தான். இரண்டு ஐந்து ரூபா நோட்டுக்கள் வந்தன. ஒன்றை மீண்டும் பொக்கேற்றில் வைத்துவிட்டு ஒன்றை மட்டும் எடுத்தான். பின்பு என்னைப் பார்த்து,

‘முதல்ல ஆளுக்கு ஒரு வடை சாப்பிட்ட பிறகு போவம். அப்பதான் டப்பெண்டு ஏறாது. பிறகு கட்டிக் கொண்டு போறதைச் சாப்பிட்டா அந்த மாதிரி இருக்கும்’ என்றான்.

‘சரி வா’

நாங்கள் இருவரும் கடைக்குள் சென்றோம். சில கணங்களில் எங்கள் விருப்பம் கேட்கப்பட்டு அதற்கான ஆவணை செய்யப்பட்டது. நாங்கள் ஆளுக்கு ஒவ்வொரு வடையும் சாப்பிட்டுத் தேநீரும் அருந்திய பின்பு பொதியையும் வாங்கிக் கொண்டு தீர்த்த யாத்திரைக்குப் புறப்பட்டோம். அதற்காக மீண்டும் ‘புதுறோட்’ வந்து சிவன் கோயிலுக்குச் செல்லும் ஒழுங்கையாற் கடற்கரையை நோக்கிச் சென்றோம். சவுக்கும், கத்தாளையும் சோலையாகக் குடைபிடிக்க கடலின் குளிர் தழுவி வந்த காற்று இதம் தந்தது. வெண் புழுதியில் நிழல் பார்த்து

அமர்ந்தோம். கடல் குளித்து வந்த காற்றின் அலையலையான மோதல் தொடர்ந்தும் கிறங்கடித்தது. இப்படியான இறம்மிய பிரதேசத்தில் வீடு கட்டி வாழ்நாள் முழுவதும் வாழவேண்டும் என்பதான ஒரு கற்பனை எழுந்தது. சுனாமி பற்றி அப்போது எனக்குத் தெரியாது. காதல் சோடிகள் களவாகக் கூடும் இடம் இது. ஆங்காங்கே அதுவும் நடந்தது. அவர்கள் இளமை இன்பங்களில் இடையூறு விளைவிப்பது எங்கள் நோக்கமல்ல. போத்தல் திறக்கப்பட்டு பொன்னான திரவத்திற்குள் சோடா கலக்கப்பட்டது. அதனால் அது தூய்மை இழந்து பருகுவதற்கு ஆனவள் ஆகியது. நாங்கள் பொறுப்போடு பணியைச் செய்யத் தொடங்கினோம். பணி செய்த பின்பு குளிக்கச் சென்றோம். திரும்பி வந்து மீண்டும் குடித்தோம். எனக்கு கிக்கேறிற்று. காற்றே என்னைத் தள்ளிவிடுவதான தள்ளாட்டம். குமரேசன் அதிகமாகவே தாங்குவான். இருந்தும் அவனும் கடற்காற்றில் தள்ளாடினான். தடுமாறினான். குடிப்பதற்கு மீதம் இருந்தது. முழு வெறியேறினால் கடலுக்குள் இறங்கக் கூடாது என்கின்ற அறிவும் இருந்தது.

சோலையை விட்டு வெளியே வந்தால் நெருப்பாய் எரிக்கும் வெயில். அந்த வெயிலுக்குக் கடலிற் குளிப்பது சுண்ணாம்பு அறையிலிருந்து குளிரூட்டப்பட்ட அறைக்குள் செல்வது போல. காதற் சோடிகள் சிலரும் கடலிற் கும்மாளம் அடித்தார்கள். காதலிகள் அலைக்கு அஞ்சுவதாய்ப் பெண்மையின் பெருமை காட்ட, காதலர்கள் தாம் அஞ்சாச் சிங்கங்களென அலைமேற் பாய்ந்து நிரூபித்தார்கள். அவர்களின் ஊடலில் நாங்களும் உலகை மறக்க நேரம் மூன்றுமணி ஆகிவிட்டது.

பசியும் மதுவும் வயிற்றை அனலாய் எரிப்பதான பதைபதைப்பு. நாங்கள் மீண்டும் சோலைக்குள் சரணானோம். முதலில் மீதமிருந்ததைக் குடித்து முடித்தோம். பின்பு கொண்டு வந்த சாப்பாட்டைச் சாப்பிட்டு மீதமிருந்த சோடாவையும் விட்டுக் கட்டினோம். இனி இயலாது என்பதாக ஏவறை விட்டோம். உண்ட களை தொண்டருக்குமாகத் துண்டை விரித்துச் சிறிது நேரம் படுத்தோம். காற்று எங்கள் அனுபவிப்பைப் பொறுக்க முடியாது இடைக்கிடை மண்ணைத் தூவியது. அது எங்களுக்கு அரிகண்டமாய்ப் போயிற்று. புறப்படுவதே சாலச் சிறந்தது எனத் தோன்றியது. நான் சைக்கிளை உழக்க வேண்டிய முறையாயிற்று. அவன் அமைதியாக உட்கார்ந்து இருந்தான். எனக்கு வியர்க்கத் தொடங்கியது. அவன் அமைதி அந்தரம் தந்தது. சைக்கிள் வளைந்து வளைந்து ஓடியது.

'இப்படியே வீட்டை போகேலாது? கிணத்தடிக்குப் போனா கிணத்துக்குள்ளேயே போயிடுவன். என்ன செய்யலாம்? ' நான் மௌனத்தை உடைத்தேன். அவன் அதற்கும் பதில் சொல்லவில்லை.

'குமரேசா?'

'ம்...?'

'இப்பிடியே வீட்டை போகேலாது'

'எனக்கும் தெரியும்'

'அப்ப என்ன செய்யலாம்?'

'தேவன் வீட்டில சைக்கிளை விட்டிட்டு 'வஸ்' எடுத்து யாழ்ப்பாணம் போவம்' என்றான் குமரேசன்.

'கட்டியிருக்கிற சாறத்தோடயே?'

'ஓ... எங்களை யார் பார்க்கப் போகினம்?' என்றான் அவன்.

'தற்சமயம் யாராவது பாத்திட்டா?'

'பெம்பிளை தரமாட்டினமோ? பயந்து சாகாத... சமாளிப்பம் வா' என்றான்.

'சரி'

நாங்கள் தேவன் வீட்டில் சைக்கிளை நிறுத்திவிட்டு யாழ் நகரை நோக்கிச் செல்லும் பேருந்திற்காய்க் காத்து நின்றோம். அப்போது அறுவை வினோதினி அங்கே வந்தாள். அவளின் 'கடி' தாங்க முடியாமல் அவளை அறுவை வினோதினி என்று சொல்லுவோம். அவளும் யாழ்ப்பாணம் செல்வதற்காய் புறப்பட்டவள் போன்ற தோற்றம். எங்களைப் பார்த்தவுடன் அடக்க முடியாமல் சிரித்தாள். எதற்கு என்பது எங்களுக்குப் புரிந்து விட்டது. எங்கள் கோலம் அப்படி இருந்திருக்கும்.

‘எங்க... யாழ்ப்பாணமே?’ அவள் தன் தொழிலைத் தொடங்கினாள்.
‘ம்..’

நான் முகத்தைத் திருப்பி மறுபக்கம் பிராக்குப் பார்ப்பதாக நடித்தேன். அவள் தொடர்ந்தாள்.

‘என்ன புதுமையா சாறத்தோட றவுடியள் மாதிரி வெளிக்கிட்டு இருக்கிறியள்? தீவார் எண்டாலே உங்க யாழ்ப்பாணத்தில ஒரு மாதிரிதான் சனம் பார்க்கும். நீங்கள் வேற சாறத்தோட வெளிக்கிட்டு இருக்கிறியள். நல்ல சோக்காத்தான் இருக்கும் இண்டைக்கு..’ அவள் குமரேசனைக் கிண்டினாள்.

‘உனக்கு என்ன வயித்தெரிச்சல். ஏன் வினோ சாறத்தோட போகக்கூடாதே? அப்பிடி ஏதும் சட்டம் இருக்குதே?’ என்றான் குமரேசன்.
‘ஏன் இல்ல... அவங்கள் என்ன நினைச்சா எங்களுக்கு என்னவெண்டு போகலாம். ஆனா, நீங்கள் அப்பிடிப் போற ஆட்கள் இல்லையே? அதுதான் கேட்டன்’
‘ஒரு அவசர விஷயம்... அதுதான். அது சரி உன்ர அக்கா இப்ப எங்க? கண்டியா? கொழும்பா?’ குமரேசன் கதையை வேறுபக்கம் நகர்த்தினான்.
‘கண்டிதான். போன முறை வந்து நிக்கேக்க நீங்க என்ன செய்யிறியள் எண்டு அக்கா அக்கறையா என்னக் கேட்டா’
‘ம்..’
‘நான் என்ன சொன்னனான் எண்டு கேக்க மாட்டியளோ?’
‘என்ன சொன்னா?’ குமரேசன் சுவாரசியமற்றுக் கேட்டான்.
‘தேர்முட்டி வியாபாரம் இலாபத்தில போகுதெண்டன்’ என்று கூறிச் சிரித்தாள்.
‘அடிக்’

குமரேசன் அவளைப் பார்த்துப் பல்லை நறும்பினான். அறுவை என்று பேச வாயெடுத்தவன் இ.போ.சா இரைந்து கொண்டு வந்ததைப் பார்த்து அதைக் கைவிட்டான். வினோ முன்னுக்குச் சென்றாள். அவளைக் கழட்டி விடுவது போல நாங்கள் பின்னுக்கு நின்றுவிட்டோம். அவள் பொல்லாத அறுவை. அவளோடு நின்றால் கிளறிக் கிளறி எங்களின் உண்மை நிலையைப் புரிந்து கொள்வாள் என்கின்ற பயம் எங்கள் இருவருக்கும்.

யாழ்ப்பாணம் போய்ச் சேர்ந்த பொழுது நகரத்தில் பதட்டம். எங்கோ வங்கியில் கொள்ளையடித்து விட்டார்களாம் என்கின்ற செய்தி. இது இப்போது அன்றாட வாழ்க்கையின் ஒரு பகுதியாகிவிட்டது. என்றாலும் வரக்கூடாத நேரத்தில் வந்துவிட்டதான கலக்கம்.

சைக்கிளில் வருவதும், துண்டுப் பிரசுரம் எறிவதும், வங்கிக் கொள்ளையில் ஈடுபடுவதும், பிரச்சாரம் செய்வதுமாக நாடு மாறிப் போய்விட்டது. இன்னும் சிலகாலம் இங்கு இருந்தால் நாங்களும் எதற்குள்ளாவது தலையை நுளைக்க வேண்டி வரும் என்பதும் புரிந்தது. சிறு சிறு ஆயுதங்கள் யார் யாரோ கைகளில். அதன் முனைகள் யார் யாரைப் பார்க்கும் என்பது யாருக்கும் தெரியாத குழப்பம்.

நான் எனது கலக்கத்தைக் குமரேசனுக்குச் சொல்லவில்லை. எதுவும் நடவாதது போல இருவரும் இராணி திரையரங்கை நோக்கிச் சென்றோம். எனது கோலமும் நடையும் எனக்கே வினோதமாகத் தோன்றின. குடித்திருக்கக் கூடாது. குடித்த பின்பு இங்கு வந்திருக்கக் கூடாது. இரண்டையும் செய்தாகிற்று. இனி? இவற்றை விட இடையில் வந்த சலுனில் என்னை நான் பார்த்திருக்கக் கூடாது. பார்த்துமாகிற்று.
இந்தக் கோலத்தில் யாழ்ப்பாணம் வருவது என்பதை மற்றும்படி நினைத்தே பார்த்திருக்க முடியாது. மதுவினால் ஏறிய உசாரில் இங்கு வந்தாகிற்று. அதை நினைத்த போது என்னாற் சிரிப்பை அடக்க முடியவில்லை. நான் சிரித்து விட்டேன்.

‘என்னடா சிரிக்கிறா? ‘ என்றான் குமரேசன்.

‘இல்லை… என்ன நினைக்க, எனக்கே சிரிப்பு வந்திட்டுது’ என்றேன்.

‘உது உன்னை நினைக்க வந்ததில்லை. உள்ள போனதால வந்தது’ என்றான் அவன்.

‘போடா, உள்ள போனதுமில்லை… வெளிய வந்ததுமில்லை. என்ர கோலத்தை ஒருக்கா வடிவாப் பார். எதுக்கு வினோதினி சிரிச்சாள் எண்டு இப்ப விளங்குதா? இந்தக் கோலத்தோட நான் வீட்டில இருந்து கோயிலடியில இருக்கிற கடைக்கே போறேல்ல. இண்டைக்கு என்னண்டா ரவுணுக்க சுத்துறன். ஆனா, ஒண்டடா… தண்ணியின் புண்ணியத்தில வெக்கம் வரேல்ல… சிரிப்புதான் வருகுது’ என்றேன்.

‘ச்… எங்களைவிடக் கேவலமாக எத்தினபேர் திரியினம். நீ என்னண்டா வெக்கம் வரேல்ல சிரிப்பு வருகுதெண்டு சொல்லுறா’ அவன் சமாதானம் சொன்னான்.

இராணித் திரையரங்கிற்கு முன்பு இராணுவ நடமாட்டத்தை மீறிக் கூட்டம் அலை மோதியது. எனக்கு அந்தச் சனத்திற்குள் அடிபட்டு வரிசையில் நிற்கப் பிடிக்கவில்லை. குமரேசன்தான் முந்தியடித்து அனுமதிச் சீட்டு வாங்கச் சென்றான். அவன் அனுமதிச்சீட்டு வாங்கி வந்த போது அவனைப் பார்த்து நான் சிரித்தேன். அதை என்னாற் கட்டுப்படுத்த முடியவில்லை. அவன் கோலம் அப்படி இருந்தது. எனது சிரிப்பின் அர்த்தம் அவனுக்குப் புரிந்து விட்டது.

‘கசங்காமல் நிண்டு கொண்டு சிரிப்பு என்ன?’ என்றான்.

‘இல்லையடா… சொறி’

‘ம்… எதுக்கெடுத்தாலும் இந்தச் சொறிய வியாதி மாதிரிக் கொண்டு திரியுங்கோ’ என்றான்.

தியேட்டரில் படம் பார்க்கும் போது போதையில் எனக்குத் தூக்கம் வந்தது. ஏதோ கனவு வழி நடந்ததான எஞ்சிய நினைவுகளின் ஞாபகம். என்ன என்பது தெளிவாக மீண்டும் மூளையில் வர மறுத்தது. அப்படிக் கனவு காணும் போதுதான் அந்த மணிச் சத்தம் ஒலித்தது. எனது கனவும் மூளையில் எஞ்சிய கறைகளோடு கலைந்தது. விழித்த போது நல்ல நிதானம் வந்திருந்தது. அது இடைவேளை மணி என்பது புரிந்தது. குடித்துவிட்டு வந்ததெல்லாம் கழிவாக வெளிவர அவதிப்பட்டது. நான் அதற்காக எழுந்து செல்லக் குமரேசனும் என்னோடு வந்தான்.

இருவரும் அலுவலை முடித்துவிட்டு இரண்டு ஐஸ்கிறீம் வாங்கிச் சாப்பிட்டோம். சாப்பிட்ட வண்ணம் வந்து அமரும் போது விளக்குகள் அணையத் தொடங்கின. அப்போதுதான் எனக்குப் பின்னே சில இருக்கைகள் தள்ளி அவளைக் கண்டேன். எனக்குத் திக்கென்று போயிற்று. இதயம் அவசரமாக அடித்தது. உடல் குப்பென்று வியர்த்தது. அவள் மட்டும் இருந்தால் பருவாய் இல்லை. அவளோடு ஒரு பொடியனும் சோடியாக இருந்தான். அவன் உரிமையோடு அவளது தோளைச் சுற்றித் தனது கைகளைப் படரவிட்டிருந்தான். என் கண்ணையே என்னாற் சில கணங்கள் நம்ப முடியவில்லை. படம் ஓடும் வெளிச்சத்தில் நான் பார்ப்பதை அவள் பார்த்துவிட்டாள். அத்தால் அவள் தலை குனிந்தது. நான் குமரேசனைத் திரும்பிப் பார்த்தேன். அவன் திரையை விசுவாஷமாகப் பார்க்கத் தொடங்கிவிட்டான்.

‘டேய் குமரேசா’ என்று இரகசியக் குரலில் கூப்பிட்டேன்.

‘என்னடா?’ என்றதில் சினம் பொங்கியது. தன்னைக் குழப்புவதாக அவன் நினைத்திருக்க வேண்டும்.

‘நான் ஒரு சங்கதி பார்த்தன் இப்ப..’

‘படமெண்டா நிறையச் சங்கதி வரும்தானே?’ என்றான்.

‘படத்தில இல்லையடா..’ என்றேன்.

‘அப்ப எங்க பார்த்த நீ?’

‘எங்களுக்குப் பின்னால’

‘எங்களுக்குப் பின்னால என்ன பார்த்த நீ?’ என்றான் எரிச்சலோடு.

‘திரும்பி அங்க பார்’ என்றேன். திரும்பி ஒரு வெட்டு வெட்டினான்.

‘பின்னால என்ன? ஆட்கள்தான் இருக்கினம்’ என்றான்.

‘அந்த மூலைச் சீற்றுக்குப் பக்கத்தில உள்ள பொடியனுக்கு அருகில யார் இருக்கிறது எண்டு பார்’ என்றேன்.

‘சரியாத் தெரியேல்ல. இருட்டா இருக்குது. நொடி போடாமல் யாரைப் பார்த்தா எண்டு சொல்லு?’ என்றான்.

‘வினோதினி.’

‘வடிவாத் தெரியுமே?’ என்றான்.

‘நான் லையிற் இருக்கேக்கயே ஒரு முறை பாத்திட்டன். வோய் பிரண்டோட வந்திருக்கிறாள்’ என்றேன்.

‘அடிச்சக்க..’ என்றான் அவன்.

‘ம்... ச் இதில நமக்கென்ன இருக்குது? அவையவையின்ர விருப்பம். ஏங்கிச் சாகிறதிலும் இருக்கிறதைப் பகிர்ந்து கொள்ளுறது தப்பில்லைத்தானே? அதுகள் அப்பிடிகூடச் செய்யேல்ல. சேர்ந்து திரியுதுகள். இதைக்கூடக் கெடுத்தா எப்பிடி? மிருகம் பறவை சேர்ந்து திரியுது. யார் அதைக் கேட்பான்? மனிசனுக்கு மாத்திரம் ஆயிரம் கட்டுப்பாடுகள். அனுபவிக்கத்தானே வாழ்க்கை. அதுக்குப் பிறகு என்ன எண்டு யாருக்கும் தெரியாது. நீ ஊருக்க இந்த விஷயத்தை ஊதிப் பெரிசாக்கிறேல்ல’ என்றேன்.

‘ம் என்ர தலையெழுத்து’ என்றான். எனக்கு அவனில் நம்பிக்கை வரவில்லை.

‘எனக்காக..’ என்றேன்.

‘அது சரி உன்ர தங்கச்சி யாரும் பொடியளோட இப்பிடி இருந்தா இந்தத் தத்துவம் வருமே?’ என்றான் குமரேசன்.

‘எல்லாரும் இரத்தமும் சதையும் உள்ள மனிசர் தானே? அப்ப இயற்கையின் விதியில ஓரவஞ்சகம் இருக்காது. பிறகேன் அவளைத் தடுக்கோணும்? இது மனிசன்ர அடிப்படை வாழ்வுரிமை. இதில தலையிட மற்றைய மனிதர்களுக்கு அனுமதியில்லை’ என்றேன்.

‘உனக்குத் தங்கச்சி இல்ல. அந்தத் துணிவிலதான் இந்தக் கதை’ என்றான்.

‘டேய் என்ன நம்பேல்லயே?’

‘அப்ப நான் சொல்லுறதுக்குக் கோபிக்கக் கூடாது’ என்றான்.

‘இல்லச் சொல்லு’ என்றேன்.

‘என்ர தங்கச்சியை நீ லவ் பண்ணு. அவளுக்கு நல்ல மாப்பிள்ளை கிடைக்கும். எனக்கு நல்ல மச்சான் கிடைக்கும்’ என்றான்.

‘கொலையும் நடக்கும். சரி பருவாயில்லைக் கையைத்தா’ என்று அவனது கையைப் பற்றிக் குலுக்கினேன்.

‘அவள் விரும்பினா மட்டும்தான் நீ காதலிக்கலாம்’ என்றான் திடீரெனக் குமரேசன்.

‘காதலிக்கலாம்தான். ஆனா, உன்ர தங்கச்சியின்ர முஞ்சைதான் கொஞ்சம் கோணலாக இருக்குது’ என்று நான் அதற்குப் பதிலடி கொடுத்தேன்.

‘அடி செருப்பால. எனக்குப் பசையுள்ள மச்சானப் பிடிச்சமாதிரி இருக்குமெண்டு நினைச்சா அவற்ற நடப்பப் பார். கண்ணாடியில போய் ஆறுதலா உன்ர மூஞ்சைக்கு எத்தின கோணம் எண்டு ஒருக்காப் பார்’ என்றான்.

‘என்ர மூஞ்ச இருக்கட்டும். உன்ர சின்னப் புத்தி எப்பிடிப் போகுதெண்டு பார்..’ என்றேன்.

‘என்ர புத்திக்கென்ன... உண்மை அதுதானே?’ என்றான் அவன் தொடர்ந்தும்.

நான் பேசவில்லை. பின்னால் திரும்பிப் பார்த்தேன். இருட்டினில் மனிதர்களுக்குக் காமம் சுரக்க வேண்டும். அர்த்தநாதீஸ்வரான அவர்கள் தோற்றம். யாருக்கு என்ன நஷ்டம்? இயற்கை இட்ட கட்டளை அது. சந்ததி பெருக்குவது அதன் தர்மம். அவர்கள் தர்மம் காக்கிறார்கள். நாங்கள் நெடு நேரம் அவர்களைப் பார்க்காது கதைத்தது அவர்களுக்குத் துணிவைத் தந்திருக்க வேண்டும்.

எனக்கு ஒரு அடங்காத ஆசை எழுந்தது. இப்படி நானும் படம் பார்க்க வேண்டும் என்று மனது கூத்தாடியது. அது நிர்வாணமாக நின்று தேன்கூட்டிற்குக் கல்லெறிவது போல. இருந்தும் இயற்கை என்னிடம் வீரியமாக

விளையாடியது. மன்மதனின் கோயில்களான திரையரங்குகள். சொல்லிக் கொடுக்காமல் பயிலும் உருபிலாதவன் ஆனந்தக் கலை. என் பார்வை குமரேசனுக்குப் பிடிக்கவில்லை.

'என்ன? கோம்பை சூப்புறவன் மாதிரி ஒரு பார்வை' என்றான் இனம் புரியாத எரிச்சலோடு.
'போடா' என்று அவனைத் தட்டிக் கழிக்கப் பார்த்தேன்.
'தில் இருந்தா நீயும் ஒருத்தியைக் காதலிச்சுப் பார்' என்று உசுப்பினான் அவன்.
'நாங்கள் அந்தக் காலத்தைக் கோட்டை விட்டாச்சு. இப்ப எச்யென்சியக் கண்டு பிடிச்சுக் கப்பலுக்குப் போறது பற்றிக் கதைக்கோணும்' என்றேன் பொறுப்புள்ள இளைஞனாக.
'அப்ப காதலிக்கேல்லையே?' என்று கேட்டு அவன் சிரித்தான். எனக்கு எரிச்சல் வந்தது.
'ச்... உந்தச் சொறிக் கதைய விடு. அதைப் பற்றிக் கதைக்கிற நேரம் இல்லை இது' என்றேன்.
'அப்ப என்ர தங்கச்சி அதிஸ்ரக்காரி இல்லை' என்றான் அவன்.
'டேய் நான் சொல்லுறதைக் கேளடா..' என்றேன் எரிச்சலோடு.
'முக்காவாசிப் படம் வீணாப் போட்டுது... அதைச் சொல்லித் தொலை' என்றான்.
'நாளைக்கு நான் உங்கட வீட்டை வாறன். நீ சாதுவா விஷயத்தைச் சொல்லிவை என்ன?' என்றேன்.
'ம்..' என்று இழுத்தான்.

அதன் பின்பு கல்லைத் தூக்கி அவன் தலையில் வைத்ததான தோற்றம். மேற்கொண்டு அவனிடமிருந்து கதையில்லை. படம் முடிந்ததும் நாங்கள் வீட்டிற்குச் செல்லவில்லை. நகரத்திற்குள் இராணுவத்தை அப்போது காணவில்லை. அந்தத் துணிவில் யாழ் நகரை ஓர் சுற்றுச் சுற்றினோம். அலுத்த பின்பு பேருந்தைப் பிடித்தோம். 'லைன்' ஓடும் பேருந்தைப் பிடித்து ஆசனத்தில் அமர்ந்தால் கண்குளிரப் பல காட்சிகளைப் பார்க்கலாம். நாங்களும் அந்தப் பேருந்திலேயே ஏறினோம்.

பேருந்தால் இறங்கிச் சைக்கிள் எடுத்துக் கொண்டு தேர்முட்டிக்குச் சென்றோம். அதன் பின்பு சிறிது நேரம் கடதாசி விளையாடிவிட்டுப் பதினொரு மணிக்கு வீட்டிற்குச் சென்றேன். அம்மா வீட்டில் இல்லை. அம்மன் கோயில் திருவிழாவிற்குப் போயிருந்தா. அம்மாவைக் கூப்பிட்ட சத்தத்தில் பக்கத்துவீட்டு நீலா திறப்புக் கொண்டுவந்து தந்தாள். திறந்து உள்ளே போன போது பசி வயிற்றைக் கிண்டியது. கைகால் கழுவிய பின்பு மரக்கறியோடு பிட்டுச் சாப்பிட்டேன். அம்மாவிடம் பிடிபடத் தேவையில்லை என்கின்ற புழுகோடு அவசர அவசரமாகப் போய்ப் படுத்தேன்.

★

அடுத்த நாள் எழுந்த போது நேற்று நடந்ததெல்லாம் கனவு போன்றதான ஒரு மயக்கம். நான் குமரேசன் வீட்டிற்கு வருவதாய்க் கூறி இருந்தது ஞாபகம் வந்தது. நிதானம் வந்த போது தயக்கம் மனதிற்குத் தடை போட்டது. தவறாகிவிட்டால் வாழ்நாள்ப் பழி என்பது பயமுறுத்தியது. இப்போது போக அவன் வீட்டில் என்ன சொல்லுவார்களோ என்கின்ற பீதி மீண்டும் பயமுறுத்தியது. நான் அம்மாவிடம் சொல்லிவிட்டுத் தேர்முட்டிக்குச் சென்றேன். அரை மணித்தியாலத்திற் குமரேசன் அங்கே தொங்கிய தலையோடு வந்தான். அவன் முகம் வாடியிருந்தது. நான் தேர்முட்டியின் மேல் தளத்தில் இருந்து இறங்கிக் கீழ்ச் சாய்வுக்கு வந்தேன். அவன் பேசாது நின்றான்.

'என்னடா கவலையா இருக்கிறா?' என்றேன்.
'நீ எல்லாம் ஒரு மனிசனே?' என்றான்.
'ஏன்ரா? ' தெரியாதவன் போலக் கேட்டேன்.
'வாறன் எண்டிட்டு...?' அவன் கோபத்தோடு சீறினான்.

‘சொறியடா, இப்பதான் நித்திரையால எழும்பினனான்’ விளக்கம் கொடுத்தேன்.

‘நான் வரேலாது போல இருக்குது’ என்றான்.

‘என்னடா சொல்லுறா?’

‘காசுப் பிரச்சனைதான். நகை அடவு வைக்க அம்மா சம்மதிக்கேல்லை’ என்றான்.

‘அப்ப?’

‘அப்ப என்ன... நீ போயிட்டு வா’ என்றான்.

‘நீ வாறாய்?’ என்றேன் நான்.

‘எப்பிடி?’ அவன் புரியாது விரக்தியாகக் கேட்டு விளையாட்டாகச் சிரித்தான். அவன் சிரிப்பில் வழிந்த அவநம்பிக்கை கவலையாக, அவன் முகம் இருண்டது. அதற்குமேல் நான் அங்கே நிற்கவில்லை.

★

அம்மா அடுப்படி அலுவலில் வழமை போல் மும்மரம். எனக்கு அதைக் கேட்பதற்குப் பயமாக இருந்தது. பயந்தால் வழி? நான் குசினிக்குள் சென்றேன். மீன்குழம்பின் வாசம் மூக்கைத் துளைக்க அடிவயிற்றில் அமிலம் சுரந்தது. குடல் ஐயோவென்று வயிற்றில் அடித்துக் குளறியது. சில கணங்கள் சித்தம் சாப்பாட்டில் மயங்கிற்று. அந்த மயக்கத்தை அறிவு வென்றது. நான் ‘அம்மா?’ என்றேன்.

‘என்னடா? கந்தோர் வேலை கெதியா முடிஞ்சிட்டுதே? சுருக்காய் வந்திட்டா?’ அம்மா நக்கலாகக் கேட்டார்.

‘சும்மா இரம்மா. நான் உன்னோட ஒரு விஷயம் கதைக்கோணும்’

‘என்னடா புதிர் போடுறாய்? அதுதானே ஏற்கனவே கேட்டிட்டா’ என்றார்.

‘குமரேசன் கொஞ்சக் காசு கடனாத் தரட்டாம். கப்பல் வேல கிடைச்சோண்ண திருப்பித் தாறானாம்’

‘காசு என்னடா கோடிக்க மரத்தில காய்க்குது எண்டு நினைக்கிறாயே? என்னிட்ட இரண்டு பேருக்கும் காசு இருக்குதே? சரி எவ்வளவு வேணுமாம்? என்னிட்ட இல்லை, யாரிட்டையும் வட்டிக்குத்தான் வாங்கித் தரோணும். வட்டியும் முதலும் அவன் திருப்பிக் கட்டவேணும். ‘இணைக்குப் போனாலும் பிணைக்குப் போகாதை’ எண்டுவினம். சரி நான் அதுக்கும் நிக்கிறன்’ என்றார் அம்மா.

அம்மா ஆயிரமோ இரண்டாயிரமோ என்று எண்ணியிருக்க வேண்டும்.

‘பத்தாயிரமாம்? ’ அம்மா திடுக்குற்றது தெரிந்தது.

‘பத்து... விளையாடுறியா?’ என்று என்னை எரிப்பது போலப் பார்த்தா. நான் என்ன கொக்கா எரிந்து போவதற்கு?

‘உண்மையாத்தான் அம்மா’ என்றேன்.

‘டே நீ என்னடா நினைச்சுக் கொண்டு இருக்கிறாய்?’ கப்பலுக்குப் போறதைப் பற்றித்தான் என்று கூறினால் அம்மாவிற்குக் கோபம் வரும்.

‘நகை அடவு வைக்க வீட்டில சம்மதிக்கேல்லையாம். வீடு ஏற்கனவே அடைவிலதானே இருக்குது. அதை வேற சீதனமாகக் குடுக்கிற பிளான்.’

‘அவையின்ர பிரச்சனைக்கு நாங்களே அடவு வைக்கிறது?’

‘அம்மா பிளீஸ். அவன் இல்லாமல் நான் தனியப் போனா ஏதும் நடந்தாலும் ஒருத்தரும் இருக்காயினம். நீ நினைச்சா முடியும் அம்மா’ என்று ஒரு பாசக் குண்டைத் தூக்கிப் போட்டேன்.

‘ஐயா அறிஞ்சா என்னக் கொண்டுபோடுவார்’ அந்த வசனம் ஒன்றும் புதிதல்ல...

‘அப்பிடி ஒண்டும் நடக்காதம்மா’ என்றேன்.

அம்மா அதற்குப் பின்பு எதுவும் பேசவில்லை. அமைதியாகவே கஞ்சி வடித்தார். புழுங்கல் அரிசிக் கஞ்சிக்கு உப்பும் தேங்காய்ப் பூவும் இட்டுக் குடிப்பது அம்மாவிற்குப் பிடிக்கும். எனக்குத் தட்டுக் கழுவிச் சாப்பாடு போட்டார். அம்மாவின் மௌனத்திற்கு என்ன அர்த்தம் என்பது புரியவில்லை. அந்த மௌனத்தைக் கலைப்பதிற்கும் எனக்கு மனதிருக்கவில்லை. நானும் அமைதியாகச் சாப்பிடாது தட்டைப் பார்த்த வண்ணம் இருந்தேன்.

'சாப்பிடன்ரா… இது என்ன கரைச்சல் எனக்கு? சரி ஏதோ செய்யிறன்… நடக்கிறது நடக்கட்டும்' என்று முடித்தார்.

நான் பாய்ந்து அம்மாவின் கன்னத்தில் ஆனந்தத்தில் முத்தம் வைத்தேன். அம்மா சிரித்துக் கொண்டே இன்னும் ஒரு மீன் துண்டை எடுத்து எனது தட்டில் வைத்தார்.

★

நாங்கள் கொழும்பில் அதிக நாட்கள் நிற்கவில்லை. அவசர அவசரமாக அலுவல்கள் முடிந்தன. எங்களை 'வம்பே'யில் கப்பல் ஏற்றுவதற்காக அனுப்பி வைத்தார்கள். 'வம்பே' நகரம் எங்களுக்குப் புதுமையான அனுபவம். இல்லை வெளிநாட்டுப் பயணமே புரட்டிப் போட்ட அனுபவம். 'வம்பே' விமான நிலையத்தில் இறங்கிய போது எங்கே போவது எப்படிப் போவதென முதலில் தெரியவில்லை. இரண்டு பேருக்கும் கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டதான அவஸ்தை. பின்பு ஒருவாறு அறிவிப்புப் பலகைகளைப் பார்த்துப் பாதை பிடிக்கப் பழகினோம். எங்களைக் குடிவரவு குடியகல்வு, சுங்க அதிகாரிகள் உரைத்துப் பார்த்தே வெளியே அனுப்பி வைத்தார்கள்.

விமான நிலையத்தை விட்டு வெளியே வரும்போது வாழ்க்கை வெறுத்த பயணமாகிற்று. குமரேசனும் நன்கு களைத்திருக்க வேண்டும். பேசாது வந்தான். விமான நிலையத்திற்கு வெளியே குறித்த நபர் நின்றார். எங்களைக் கண்டதும் கைதந்தார். 'நான்தான் நகுலன்' என்றார். நாங்களும் எங்களை அறிமுகப் படுத்தினோம். வந்தவர் ஒரு வாடகைக் காரைப் பிடிக்க நாங்களும் அதற்குள் அடைக்கலமானோம்.

வாடகைக் வண்டி வேகமெடுக்க, விமானநிலையம் பின்னால் சிறு புள்ளியாகிக் கண்ணுக்குத் தெரியாது மறைந்தது. காருக்குள் அமைதி. அது எனக்குப் பிடிக்கவில்லை.

'எப்ப சரிவரும்?' நான் நகுலன் என்பவரைப் பார்த்துக் கேட்டேன். அவர் ஒரு மாதிரியாக என்னைப் பார்த்தார். பின்பு ஏளனமாகச் சிரித்த வண்ணம்,

'நீங்கள் என்ன ஆடு அறுக்க முதல் எதையோ அறுப்பியள் போல இருக்குது? இதுக்குப் பொறுமை முக்கியம். நீங்கள் இரண்டு கிழமை இங்க நிற்க வேண்டி வரும். கப்பல்தானே, ஆறுதலாகத்தான் நகரும்' என்றார் அவர்.

'அவ்வளவு நாளா?'

'ம்… இதைவிட மாதக்கணக்காக நிண்ட சனங்கள் எவ்வளவோ. அந்தப் 'பெல்யிய'க் கப்பல் வர நாளெடுக்கும்' என்றார் மீண்டும்.

எனக்கு அந்தச் செய்தி சுவைக்கவில்லை. இன்னும் இரண்டு கிழமை எப்படிப் போகும் என்பதாய்க் கேள்வி எழுந்தது. குமரேசன் எதுவும் கதைக்கவில்லை. அவன் ஏதோ யோசனையில் இருந்தான். வாடகைக் கார் 'மாதுங்கா'வில் உள்ள ஒரு விடுதியின் முன்பு நின்றது. இது வம்பேயில் மிகவும் சன நெருக்கடியான இடம். விட்டு விலக முடியாத சனம் புழுக்கள் போல வீதியில் நெளியும். அடுக்கு மாடி போன்று இருந்ததை அறை அறையாக வாடகைக்கு விட்டிருந்தார்கள். எங்களுக்கு அங்கே அறை எடுத்துத் தந்த கையோடு அங்கே பாலத்திற்கு கீழே இடப்பக்கத்தில் இருந்த ஒரு மலையாளச் சாப்பாட்டுக் கடைக்கும் கூட்டிச் சென்றார்.
அங்கே எங்களுக்குப் பிட்டுச் சாப்பிடும் பாக்கியமாகக் காத்திருந்தது. பிட்டில் நாங்களும் மலையாளமும் இணைந்தது எனக்குச் சாப்பாட்டிற்கு வசதியாகிற்று. புறப்பட்டுப் போகும் போது செலவுக்கு இந்தியப் பணம் தந்தார். தான் மீண்டும் வந்து பார்ப்பதாய்க் கூறி விடைபெற்றுச் சென்றார். அவர் போன பின்பு குமரேசனைப் பார்த்து,

‘ஏன்ரா பேசாமலே இருக்கிறா?’ என்று கேட்டேன்.

‘எனக்கு ஏதோ மனசு சரியில்லை’ என்றான்.

‘ஏன்ரா?’ காட்டிக் கொள்ள முடியாத பதற்றம் என்னிடம்.

‘அப்பா, அம்மா, தங்கச்சியை விட்டிட்டுக், கப்பல் கடல் எண்டு அலைய வேணுமோ?’

‘குடும்பமாகக் கப்பல்ல வேலை தரமாட்டாங்களடா... டே இங்க வர முதல் உதை யோசிச்சு இருக்கோணும்.

‘எண்ணித்துணிக..’ எண்டு வள்ளுவர் சொன்னது ஞாபகம் இருக்கோணும்’

‘எல்லாம் கதைக்கிறதுக்குச் சரி... நடைமுறைக்கு வலி’ என்றான்.

குமரேசன் அடுத்து வந்த நாட்களிற் கலகலப்பாகி விட்டான். வம்பேயின் சன நெரிசலும் அந்தச் சன நெரிசலுக்குள் பறக்கும் சிட்டுக் குருவிகளும் அவன் கவனத்தைக் களவாடின. அடுத்த நாட் காலை எழுந்து சாலையை மாடியில் இருந்து குனிந்து பார்த்தவன் திகைத்துப் போனான். கொழும்பில் தெருவில் பத்துப் பெண் போனால் ஒருத்தி அழகாய் இருப்பாள் என்பது அவன் அனுபவம். இங்கே பார்த்த இடமெல்லாம் அழகிகளே என்று அவன் சொர்க்கிப் போனான்.

அவன் கருத்தில் எனக்கும் ஆட்சேபனை இருக்கவில்லை. வடஇந்தியப் பெண்கள் கருங்காலிகளைப் பார்த்த கண்ணுக்கு அழகாகத்தான் தோன்றினார்கள். நெடுநெடு எனச் சிவப்பாக இதயத்தை திருடிச் சென்றார்கள். இவ்வழகியில் ஒருத்தியை மணம் முடித்தால் என்கின்ற கற்பனை இயற்கையாகவே எழுந்தது. மனிதனின் விலங்குக் குணம் விழித்து விட்டமை புரிந்தது. வெட்கப்பட ஏதும் இல்லை என்றது ஆசை. உயிரினங்களின் இயற்கையது என்றது என் மனதின் சமாதானம்.

நாங்கள் இருவரும் பின்னேரங்களில் புற்றில் இருந்து புறப்படுவோம். வெக்கை அடங்கிய நேரத்தில் பெண் வேட்கை எங்களை உந்தித் தள்ளும். குமரேசனுக்கு அடி வாங்கிய அனுபவம் கிடையாது. அடி வாங்க முடிவு செய்து விட்டதான அவன் துணிவு. அழகான பெண்கள் நேரில் வந்தால் காணாதவன் போல அவர்களின் தோளில் இடித்துச் செல்வான். பின்பு திரும்பிப் பார்த்து மன்னிப்புக் கேட்டு வழிவான். அவர்களோடு சிறிது கதைக்க முடியும் என்றால் கதைப்பான். அவனுக்கு அதிலே பரம இன்பம். வம்பேயில் பெண்கள் யாழ்ப்பாணத்துப் பெண்களைவிட சகஜமாக உரசலை ஏற்றுக் கொள்வார்கள். என்னாற் குமரேசனைப் புரிந்துகொள்ள முடிந்தது. அவன் இடிப்பதோடு நின்று விடுவதில்லை. ஆறரை மணிக்குப் பூங்காவில் போய் இருக்க வேண்டும் என்பான். அது அந்தி மயங்கும் நேரம். காமம் சுரக்கும் காலம். கைகோர்த்துக் கட்டிப்பிடித்து காதல் கதை பேசுவது தொடக்கம் மறைவினிலே பாலியல் இச்சை தீர்த்துக் கொள்வது ஈறாக அங்கே நடக்கும். செடிகளும் மரங்களும் மறைப்பாக மனிதரின் நாணம் பறக்கும் காமனின் கடாட்ஷம். அந்தக் காமலீலைகளைக் காசு கொடுக்காது கண்டு கழிக்கும் பரவசம், வக்கிரம், அவனிடம் என்பதாகக் குளிர்காயும் நானும்.

அன்று பிற்பகல் சாப்பிட்டு பின்பு இருவரும் குட்டித் தூக்கம் அடித்தோம். குமரேசன் இரகசியமாகக் கொண்டு வந்த நூறு அமெரிக்க டொலர்களை இந்திய ரூபாய்க்கு மாற்றி வைத்திருந்தான். கேட்டதிற்கு அவர்கள் தரும் பணம் செலவிற்குப் போதவில்லை என்றான். குட்டித் தூக்கம் முடிந்ததும் பரபரப்பாய்ச் சென்று குளித்தான். அந்தி வேளை குளிப்பதும் அதன் பின்பு படுப்பதும் என் பிரியம். அவன் என் பிரியத்தை புரிந்து கொள்ளவில்லை. என்னையும் குளிக்குமாறு வற்புறுத்தினான். நான் செவிடன் போல அசையாது இருந்தேன். அவன் என்னை வில்லங்கத்திற்கு எழுப்பி என்னிடம் ஒரு துவாயைத் தந்து குளியல் அறைக்குள் தள்ளிவிட்டான். நானும் முதலிரவிற்குச் செல்லும் பெண்ணாக வேறு வழியின்றி உள்ளே சென்றேன். குளித்த பின்பு நவீனமான உடை மாற்றிக் கொண்டேன்.

எதற்காக இவன் இப்படி என்னை வற்புறுத்தினான் என்பது எனக்குப் புரியவில்லை. எடுப்பாக வெளியே செல்ல வேண்டும் என்பது மட்டும் புரிந்தது. இருவரும் கீழே இறங்கினோம். அவன் வாடகைக் கார் ஒன்றைப் பிடித்து ஏறிக் கொள்ளச் சொன்னான். நான் ஏறி அமர்ந்தேன். வாடகைக் கார்காரன் எங்கே எனக் கிந்தியில் கேட்க இருவரும் விழித்தோம். அதனால் பரிதாபத்தில் அவன் ஆங்கிலத்தில் கதைக்க குமரேசனும் ஆங்கிலத்தில்

கதைத்தான். நான் அவர்கள் சம்பாசனையைச் செவிமடுத்தேன். குமரேசன் அவனிடம் 'கிறான்றேட் போ' என்றான். அதற்குமேல் என்னால் பொறுமையாக இருக்க முடியவில்லை.

'எங்கயடா போறம்? ' என்றேன். அவன் அதற்குப்,

'பேசாமல் வா. அது சஸ்பென்ஸ்' என்றான்.

'சொல்லடா?' என்று கெஞ்சினேன்.

'க்கும்... அத நீ அங்கேயே வந்துபார்' என்று புறியம் விட்டான்.

நான் கோபத்தில் அதற்குப் பின்பு கதைக்கவில்லை. ஊமையாக வானுயர்ந்த கட்டிடங்களையும், சில முக்காடு அணிந்த முகம் தெரியாத பெண்களையும், முக்காடு இல்லாது முகம் காட்டிய பெண்களையும், தெருக்களையும் பார்த்தேன். அவன் மூளை எப்படிப் போகும் என்பது எனக்குப் பிடிபட்டது. அவசரமா? அடுத்த நாள் என்பது கனவு என்கின்ற தத்துவத்தின் புரிதலா? என்கின்ற கேள்வி என்னிடம். வாடகைக் கார் நாற்பது நிமிடம் சுற்றிவிட்டு ஒரு கட்டிடத்தின் முன்பு நின்றது. இறங்கும் போது அவன் கேட்டதிற்கும் அதிகமாகக் குமரேசன் பணம் கொடுத்தான். ஏழையாக இருந்தவன் இன்று பணக்காரன் ஆகிவிட்டான். எப்படி இந்த நூறு டொலர்களைப் புரட்டி வந்தான் என்பது எனக்குப் புரியவில்லை. என்னிடம் இருந்த எழுபது டொலர்களை நான் பெரிய சொத்தாக நினைத்திருந்தேன். அது பொய்த்துப் போனது என்னை அவனைவிட ஏழையாக உணர வைத்தது. வாடகைக் கார்க்காரன் மகிழ்ச்சியில் பத்துத் தரம் சலாம் வைத்துவிட்டு வண்டியை நகர்த்தினான்.

'இப்ப எண்டாலும் சொல்லடா. என்ன ஐடியா?' மீண்டும் தன்மானத்தை விட்டு நான் கெஞ்சினேன்.

'உள்ள வந்து பார்... உனக்குச் சுவர்க்கம் காட்டுறன்' என்றான். அதில் பெருமிதம் அவனுக்கு. இந்த விசயங்களை இவன் வந்த இடத்தில் அறிந்து வைத்திருப்பான் என்கின்ற எண்ணம் என்னிடம் இருந்ததில்லை.

நான் அண்ணாந்து பார்த்தேன். என் ஊகம் பிழைக்கவில்லை. அது ஒரு பழங்காலத்து மாடிவீடு. ஏகப்பட்ட பெண்கள் பல்கணிகளில் நின்று எங்களை ஒரு மாதிரியாகப் பார்த்தார்கள். சில பெண்களின் வெளித் தோற்றமே அவர்கள் எப்படியானவர்கள் என்று வெளிச்சம் போட்டுக் காட்டிவிடும். அதற்கு மேல் எனக்கு விளக்கம் தேவைப்படவில்லை. போவதா அல்லது விடுவதா என்கின்ற தயக்கம் எனக்கு. புதுமைகளையும், பதுமைகளையும் பார்க்கும் சராசரி ஆணின் ஆர்வம் சபலமாக வீரிட்டது. வினையாக வருத்தங்கள் விற்கப்படும் என்கின்ற உண்மையும் பயமுறுத்தியது. இறுதியில் சராசரி மனிதன் வென்றான்.

படிகளால் மேலே ஏறிச் சென்றோம். ஏகப்பட்ட பெண்கள் படிகளின் குறுக்காக இருந்து தங்கள் தொழிலுக்கு அட்சரம் போட்டார்கள். சிலர் கண்களால் மறித்தார்கள். சிலர் சைகையால் மறித்தார்கள். அதையும் மிஞ்சிய சிலர் கால்களால் எங்களை மறித்தார்கள். அர்த்தம் புரிந்தது. நாசமாப் போனவனின் ஆசையும் புரிந்தது. நாளை என்பது கனவு என்பதும் இப்போது புரிந்தது. அதனால் இன்று பார்த்து விட்டால் என்ன என்கின்ற ஆசையும் முளை விட்டது. மீண்டும் மீண்டும் விவாதங்களோடான சராசரி மனிதனாக நான் இழுபட்டேன்.

இது தப்பு என்கின்ற எண்ணமும் இடைக்கிடை வந்தது. என்ன செய்வது என்கின்ற கேள்வி சடுதியாகப் பிறந்தது. திரும்பிப் போய்விடலாமா? திரும்பினேன். யாருடனோ மோதிவிட்டேன். மென்மையாக இருந்தது. வாசம் ஒன்றும் வந்தது. காமத்தில் நாற்றம்கூட வாசமாகும். இயற்கையின் விதிப்படி நாற்றம் வாசமாக உடம்பில் சூடு பிறந்தது. எனக்குப் பின்னே ஒருத்தி. திரும்பிப் பார்த்த போது என்னைப் பார்த்துச் சிரித்தாள். கண்களால் காம விஷத்தை எனக்கு ஏற்றினாள்.

இதற்கு மேல்... இனி மேல்...

வெல்வது காமம். அதனால் வீழ்வது அற்ப வைராக்கியம், மகுடிக்கு ஆடும் பாம்பாய், அவன் பின்னால் சென்றேன். இரண்டாவது மாடி பூமியில் நரகங்களைத் தரும் சொர்க்கமாக, மங்கிய வெளிச்சத்தில், மங்கையரின் கொங்கை படும்

நெருக்கத்தில், மீள முடியாத காமத்தில்... உருபிலாதவன் தொடர் மலர்ப் பாணத்தில்... நான் மீண்டும் வாய்திறக்க முடியாத ஊமையாக... அதுவே இயற்கையாக... அப்படியே நடந்தது என்பதாக...

குமரேசன் ஆங்கிலத்திற் கதைத்தான். அந்தத் தலைமைப் பெண் முகம் பூசனி மலராகியது. அவள் பிண்டம் விற்கப் பணம் கேட்டாள். குமரேசன் இருவருக்கும் பிண்டம் வாங்கத் தயக்கமின்றி அள்ளிக் கொடுத்தான்.

எங்களை ஒருவன் அழைத்துச் சென்று பலரைக் காட்டினான். ஒருத்தியை குமரேசன் தெரிவு செய்தான். நான் என்ன செய்வது எனத் திகைத்து நிற்க குமரேசன் ஒருத்தியைப் பார்த்து 'இவன் புதுசு. சொல்லிக்கொடு' என்றான். அங்கே கொல் எனச் சிரிப்பொலி எழும்பியது. எனக்கு அவமானமாய்ப் போயிற்று. அவள் சிரித்த வண்ணம் என் கையைப் பிடித்து இழுத்துச் சென்றாள். இளம் பெண்ணின் ஸ்பரிசம் அறியாத உடம்பு... அவள் கைகளின் ஸ்பரிசத்திற்கே வெப்பம் ஏறியது. எனது கற்பைக், கன்னித் தன்மையை, பணம் கொடுத்து வாடகைப் பிண்டத்திற் கரைத்து, அடங்கிய போது, சீ இதுதானா என்பது போலாகிற்று. மீண்டும் அவள் அணைக்க இன்னும் வேண்டும் என்பதான பிண்டத்தின் தேவை விழித்தது. அதையும் மீறி எச்சில் இலையில் சாப்பிட்ட அரிகண்டம் இடைக்கிடையே என்னை நிமிண்டிற்று. வருத்தங்கள் வரிசையாகப் பயங்காட்டின.

பிண்டத்தின் பிதிர்க்கடன் முடிய குமரேசன் மீது கோபம் வந்தது. அதை மௌனமாக்கினேன். அது அந்த நாளை ஆக்கிரமித்தது.

★

நாட்கள் விமானங்களாய்ப் பறந்தன. எங்கள் பயணம் கற்பனையாகவே போய்விடுமோ என்கின்ற பயம் அழிந்து பயணம் ஒரு நாள் நிஜமாகியது. அந்த 'பெல்ஜிய'க் கப்பலில் அன்று கால்வைக்கும் போது மிதக்கும் சுவர்க்கத்தில் நிற்பது போன்றதான உணர்வு.

★

மணி மூன்றைக் காட்டியது. ஆ... எவ்வளவு நேரம் சிந்தனையில் ஆழ்ந்து விட்டேன்? இதற்குமேல் என்னால் கதிரையில் இருக்க முடியாது என்பது புரிந்தது. முள்ளந்தண்டு நொறுங்கியதாக வலியெடுத்தது. நான் அரங்கி அரங்கிப் படுக்கையில் சென்று விழுந்தேன்.

# 3

எழுதவேண்டும் என்கின்ற ஆசை பலருக்கும் இருக்கலாம். அதை நடைமுறைப்படுத்துவது சின்னமேளம் நடக்கும் இடத்தில் சிவனை நோக்கிச் சாமானியன் தவம் செய்வது போன்றது. இரசிக்கக்கூடிய மாதிரி எழுதுவதற்கு ஓவியனின் பொறுமை அவசியம். என்னிடம் அது இருக்கிறதா என்பது எனக்குப் புரியவில்லை. இரண்டு பக்கங்கள் எழுதிவிட்டு வாசித்த போது பிச்சைக்காரன் சத்தி எடுத்தது போல அருவெருப்பு ஆகிற்று. கதையா? கட்டுரையா என்கின்ற தடுமாற்றம் மேலிட்டது.

அதன் பின்பு அங்கிருந்து என்னால் எழுத முடியவில்லை. படுக்கைக்கு வந்து படுத்த வண்ணம் பழைய வாழ்வை அசைபோட்டேன். இன்ப வலியின் நீட்சி என்னை இரட்சித்தது.

அந்தக் கப்பல் மிதக்கும் சுவர்க்கமேதான். அசையும் சுவர்க்கத்தின் அதிசயங்கள் அங்கு கொட்டிக் கிடந்தன. ஊரில் எங்களுக்குத் தேர்முட்டியே உலகம். புறப்பட்ட பின்பு தேர்முட்டியைவிட உலகத்தில் நிறைய இருப்பது புரிந்தது.

அது பெரியதொரு பயணிகள் கப்பல். 'மறியா' என்கின்ற பெயருடையது. சப்த தீவுகளில் ஓர் தீவு மிதப்பது போன்ற தோற்றம். நான் அதற்கு முன்பு அப்படிப்பட்ட கப்பல்களைப் பார்த்ததில்லை. அதில் ஏறியதில்லை. ஊரில் இலங்கைக் கடற்படையின் கப்பல்களைக் கடலில் தூரத்தில் பார்த்து வாயைப் பிளந்தது உண்டு. கடற்படையின் கப்பல்கள் கப்பல் அல்ல வள்ளங்கள் என்று இன்று புரிந்தது. எறும்பிற்கும் ஆனைக்குமான வித்தியாசங்கள் அவற்றிற்கு இடையில். குமரேசனும் கப்பலின் விஸ்தீரணத்தைக் கண்டு பிரமித்தான். முடிவில்லாது வாயைப் பிளந்தான். எங்களுக்கு நல்ல வேலை கிடைத்தது. இதையே ஊரில் செய்திருந்தால் அவமானம். இரணம். வெள்ளாளன் சமைத்தால் பண்டாரம் என்பார்கள். இந்தக் கப்பலுக்குள் அது ஒரு மேன்மையான தொழில். சமைப்பது வாழ்வைச் சுவைப்பதான தொழில். சுவை, மணம், கைவண்ணம் என்பதைச் சுகிக்கும் தொழில். எங்களைச் சமையல் அறையில் உதவியாளர்களாய் நியமித்தார்கள். எல்லா வேலைகளும் செய்ய வேண்டி வந்தாலும் அனேகமான நேரம் கழுவ வேண்டி இருந்தது. மற்றைய வேலைகளும் இடைக்கிடையே வந்தன. சமையல் வேலை சுவாரசியமாக இருந்ததால் அதை விருப்பத்தோடு செய்தோம். ஒழுங்கான ஓய்வும் எங்களுக்குக் கிடைத்தது. மற்றைய வேலைகள் என்றால் சுழற்சி முறையில் வருவதால் ஓய்வு குழப்பம் ஆகிவிடும். சமையல் உதவியாளர் என்கின்ற வகையில் எங்களுக்கு அந்தச் சிரமம் இருப்பதில்லை.

சாப்பாடுகள் எங்கள் நாட்டு உணவைப் போன்றதல்ல. பாம்புகளும், புழுக்களும் போல் மேல் நாட்டு உணவு வகைகள். ஆனால் பாம்புகளும், புழுக்களும் அல்ல. மச்சம், மாமிசம் தாராளம். எலும்பைக் கடித்த எங்களுக்கு நித்தமும் விருந்து போல. உறைப்பு இல்லாததற்குப் பதிலாகத் 'தபாஸ்கோ' என்கின்ற திரவம் சிறு போத்தல்களில்...

முதலிற் கப்பல் உணவுகளைப் பார்க்க எனக்கு அருவெருப்பாய் இருந்தது. அவற்றின் மணம் வயிற்றைக் குமட்டியது. சாப்பாட்டில் உறைப்பைக் காண முடியவில்லை. நாட்கள் செல்லச் செல்ல அதுவும் பழகிப் போயிற்று. அதிலும் ஒருவகைச் சுவை இருப்பது புரியத் தொடங்கியது. உப்பைத் தூவிச் சாப்பிடப் பழகிக் கொண்டேன். காரம் சேர்த்தால் மாத்திரமே சுவை வரும் என்பதல்ல என்பதும் புரிந்தது. அதையும் மீறிக் காரம் தேவைப்பட்டால் 'தபாஸ்கோ' தவறாது கை கொடுத்தது. ஒன்பதாவது வாசலில் எரிச்சல் இல்லாத நிம்மதியாயிற்று. சமையலறையில் உதவி செய்வதோடு மட்டும் எங்கள் பணிகள் முற்றி விடவில்லை. மேற்கத்தேய உணவுகளை எப்படித் தயாரிப்பது என்பதையும் ஆவலோடு கற்றோம். பிரதான சமையற்காரர் எங்களோடு அன்பாகப் பழகினார். அவர் பெல்ஜியத்தில் பிறந்தவர். நிற, இன பேதம் இல்லாது பழகுவார். அவரது உருவத்தைப் பார்த்தால் பயம் பலரையும் சொல்லாமல் பற்றும். ஆறரை அடி உயரத்தில் அழகான அசுரனின் தோற்றம். உருவத்திற்கும் அவரது குணத்திற்கும் சம்பந்தமே இல்லை. அசுரனின் தோற்றதிற்குள் ஒளிந்திருப்பது ஒரு குழந்தையின் இளகிய மனது. அவர் எங்கள் இருவரையும் தனது பிள்ளைகள் போல அன்பாக நடத்தினார். எங்களுக்கும் அவரை மிகவும் பிடித்திற்று. அவரது மனிதம் கண்டு மட்டற்ற மகிழ்வு கொண்டோம். நான் ஐயாவோடு வேலை செய்திருந்தால் ஐயா இப்படி நடத்தியிருக்க மாட்டார். அதில் எனக்கு எள்ளளவும் சந்தேகம் இல்லை. பெற்றோர்கள் பிள்ளைகளுக்கு நண்பர்களாய் இருக்க வேண்டும். அதைத்தான் பிள்ளைகள் விரும்புகிறார்கள். இந்தப் பிள்ளைகளும் ஒருநாள் பெற்றோராகும் போது அதை மறந்து விடுகிறார்கள்.

சில பெற்றோர்கள் மட்டுமே நண்பர்களாக இருக்கிறார்கள். சில பிள்ளைகள் மட்டுமே பெற்றொருக்கும் விசுவாசமாக இருக்கிறார்கள். எனக்கும் ஐயாவிற்குமான உறவில் பயத்தின் அடர்த்தியும், ஆட்சியும் தலைவிரித்தாடியது. அம்மா அதற்கு எதிர்மறைதான். அருமையான தோழி. அவர் என்னோடு அப்படித்தான் பழகியதுண்டு. அடித்தாலும் அடுத்த கணமே மறந்ததுண்டு. எனக்கு இந்தக் கப்பலில் வேலை செய்த ஐரோப்பியர் பலரைப் பிடித்திருந்தது. பிரச்சனையைப் பேசித் தீர்க்கும் அவர்களின் பொறுமை காக்கும் யுக்தி உன்னத பாடமாகியது. யாரது கருத்தையும் மதிப்புக் கொடுத்து அமைதியாகக் கேட்பது மலைக்க வைத்தது. வயது வித்தியாசம் இன்றி மற்றவரை மதிப்பது மகிழ்வு தந்தது. ஐரோப்பியரில் அனைவரும் இப்படித்தான் இருப்பார்கள் என்று நான் எண்ணவில்லை. எனினும் அதிகமானவர்கள் இப்படித்தான் இருக்கவேண்டும் என்பது எனது கணிப்பாகியது.

எங்களிடம் அதற்கு நேர் மாறான குணம் இருப்பதே உண்மை. எமது வறிய பொருளாதாரத்தின் பக்க விளைவாக அதை நாம் பார்க்க வேண்டியதாக உள்ளதும் எனக்குப் புரிகிறது. பொருளாதார நெருக்கடியால், அதிகரித்த போட்டியால் எதற்கும் போராட வேண்டியதாகிற்று. அதுவே எமது போராட்டமாய் புகையத் தொடங்கிற்று.

பணக்கார நாடு என்றால் அந்தப் புகையை இல்லாது செய்திருப்பார்கள். பிச்சைக்கார நாட்டில் அதை ஊதிப் பெருக்கினார்கள்.
எமது வாழ்வின் அனுபவம்தான் எம்மை உருவாக்குகிறது. எமது அனுபவம் எப்படி இருக்கப் போகிறது? கப்பல் ஏறிய இரண்டாவது நாளே களியாட்ட நிலையத்திற்குச் சென்றோம். அதற்குள் போவதற்கு எங்களுக்கு எந்த அலுவலும் இருக்கவில்லை. நாங்கள் மற்றைய பயணிகள் போலக் காசு கொடுத்து உள்ளே போனோம். காசு செலவழிந்தாலும் அதற்குள் என்ன நடக்கிறது என்பதை அறிய வேண்டும் என்கின்ற அடங்காத ஆவல். குமரேசனைக் கேட்க வேண்டாம். அவன் எங்கே என்று பறந்து வந்தான். களியாட்ட நிலையம் என்றால் என்ன என்பதை அன்றுதான் முழுமையாகப் பார்த்தோம். ஏகப்பட்ட பிரயாணிகள் களியாட்டத்தில் ஈடுபட்டனர். அது கண்கொள்ளாக் காட்சி. முடவனையும் ஆடச்சொல்லி முழங்கும் இசை. எனக்குப் பிரமிப்பாக இருந்தது. நான் அன்று வியிர் குடித்தேன். குமரேசன் விஸ்கி வாங்கிக் குடித்தான். எப்போதும் அவன் முன்னணிதான்.

அதற்குள் எங்களோடு பலர் வந்து கதைத்தார்கள். எந்த நாடெனக் கேட்டார்கள். 'சிலோன்' என்றதும் அழகான நாடு என்றார்கள். பல இடங்கள் அடிபட்ட உல்லாசப் பயணிகளாக இருக்க வேண்டும். நாங்கள் குடித்தோம். அது தந்த உசாரில் பலருடன் கதைத்தோம். சிறிது நேரம் சில்லறைக் காசு போட்டு விளையாடினோம். குமரேசன் எது என்றாலும் அறிய வேண்டுமெனத் துடிப்பவன். புதுமையாக எது இருந்தாலும் அவன் கை போடாமல் விடமாட்டான். அவனோடு சேர்ந்து நானும் சில கணங்கள் விளையாடினேன். அன்றைய பொழுது இடையூறு அற்ற இன்பப் பொழுதாகியது.

★

மூன்று மாதம் கழித்து அதற்கான மொத்தச் சம்பளமும் தரப்பட்டது. குமரேசன் கொடுத்த வாக்கு மாறவில்லை. அவன் பொறுப்போடு அம்மாவின் பணத்தைத் தந்தான். நான் என்னுடைய பங்கையும் போட்டு அம்மாவுக்கு ஒரு தொகை அனுப்பி வைத்தேன். அத்தோடு கடிதமும் எழுதி அனுப்பினேன். அம்மாவிடம் இருந்து பதில் கடிதம் வந்தது. 'பணம் என்ன பணம் எனக்கு நீ வேண்டும்' என்று எழுதி இருந்தார். எனக்கு அம்மாவின் ஏக்கத்தில் சந்தேகம் இருக்கவில்லை. நானும் தாயின் ஸ்பரிசத்திற்காய் ஏங்கினேன்.

அம்மாவிற்கு பணம் அனுப்பி வைத்த பின்பு பொருளாதார விடுதலை பெற்ற திருப்தி எனக்கு. நான் உழைப்பதை என்ன செய்வது என்பது எனது முடிவாகியது. என் உழைப்பில் யாரும் தங்கியிருக்கவில்லை. குமரேசனுக்கு அப்படியல்ல. அவனை நம்பிப் பலர் இருந்தார்கள். அப்படியிருந்தும் சிக்கனமாகச் செலவழிப்பதில் அவன் அக்கறையே காட்டுவதில்லை. எனக்கு இது வியப்பாக இருக்கும். எப்படி இவனால் இப்படிப் பொறுப்பில்லாமல் நடக்க முடிகிறது? என்பதாய்க் கேள்வி எழும். நான் அவனிடம் அதைக் கேட்கவில்லை.

எங்கள் கப்பல் நோர்வேயை நோக்கி நகர்ந்தது. கப்பலில் இப்போது அதிகம் ஜெர்மனி நாட்டுப் பயணிகள் இருந்தார்கள். அவர்கள் 'டொச்'சிற் கதைப்பது எனக்கும் குமரேசனுக்கும் தானறியாச் சிங்களம் போல் இருந்தது. இங்கிலாத்தில் இருந்து வந்த பயணிகள் ஆங்கிலம் கதைத்தார்கள். ஆங்கிலத்திற் கதைப்பவர்களுடனேயே எங்களால் கதைக்க முடிந்தது. ஜெர்மனியில் இருந்து வந்த பயணிகளில் ஆங்கிலம் கதைக்கக் கூடியவர்கள் மிகவும் குறைவு. மொழிப் பிரச்சனையால் அதிகம் அவர்களோடு தொடர்பிருக்கவில்லை.

அன்று வேலை முடிந்த பின்பு அலுப்பில் நான் நித்திரைகொள்ளப் போய்விட்டேன். அப்போதுதான் குமரேசன் வந்து கதவைத் தட்டினான். நான் சினம் பொங்கப் போய்க் கதவைத் திறந்தேன். நித்திரை குழம்பினால் சீறிப் பாய்வது என் இயல்பு என்று அவனுக்குத் தெரியும். அதைச் சமாளிப்பதற்காய் அவன் இளித்து மழுப்பினான். அவனைப் பேசவேண்டுமென்று கதவுவரை சென்ற என்னால் அவனைப் பேச முடியவில்லை. கதவைத் திறந்து விட்டு,

'வாடா. ஏன்டா என்னை இப்ப எழுப்பிறா? ' என்றேன்.
'உண்மையாவே நித்திரையே?' என்றான். சந்தேகமா? அக்கறையா? என்பது எனக்குப் புரியவில்லை.

‘அப்ப போய்க்கே நித்திரை கொள்ளுறன்?’ என்று சலித்துக் கொண்டேன்.

‘சொறி… அப்ப நான் போயிட்டுப் பிறகு வாறன்’ என்று திரும்பிப் போவதாகப் பாசாங்கு காட்டினான்.

‘நித்திரையைக் குழப்பீட்டா. இனி எங்க போறா? சொல்ல வந்ததைச் சொல்லு பாப்பம்’ என்றேன்.

‘வாவேன் டிஸ்கோவுக்குப் போவம்’ என்றான்.

‘எனக்கெண்டா அது இப்ப டல் அடிக்குதடா’ என்றேன்.

‘எனக்குச் சும்மா இருக்க அலுப்பா இருக்குது’ என்றான் அவன்.

‘நான் இப்ப டிஸ்கோவுக்கு வாற நிலைமையில இல்லை’ என்றேன்.

‘நான் இந்த வேலையை விட்டிட்டு ஊருக்குப் போகலாமெண்டு யோசிக்கிறன்’ என்று அவன் எனக்குப் பாசக்கயிறு போட்டான்.

‘டே, உனக்கு என்ன நடந்தது?’ என்றேன் எரிச்சலோடு.

‘தேர்முட்டியும், வீச்சுமெண்டு சுதந்திரமாய் இருந்தம். இஞ்ச வந்து கப்பலுக்க இப்பிடி அடைஞ்சு கிடக்கிறது எனக்குப் பிடிக்கேல்லையடா’ என்றான்.

‘ஓமோம்… நீ இப்ப கொஞ்சக் காசு உழைச்சிட்டா… இனிக் கதைப்பாதானே?’ என்றேன்.

‘அதில்லையடா… எனக்கு இப்பிடி அடைஞ்சு கிடக்கிறது பிடிக்கேல்லை. அதோட வரவரக் குளிருது’ என்றான்.

‘அதுவும் அப்பிடியே? நீ எங்க அடைஞ்சு கிடக்கிறா? இப்பவும் டிஸ்கோ அது இதுவெண்டு சுத்திறா தானே? பூமியின்ர துருவத்திற்கே வந்திட்டம். குளிராமல் வெக்கையா இருக்குமே?’ என்றேன்.

‘அப்ப வா டிஸ்கோ போவம்’ என்றான் அவன் மறுபடியும்.

‘உன்னத் திருத்தேலாதடா..’

அன்று இரவு முழுவதும் கப்பலில் உள்ள களியாட்ட நிலையத்தில் எங்கள் பொழுது கரைந்தது. காலம் தன் சக்கரத்திற் குறியாக, மனிதனின் வாழ்நாளையும், ஆயுளையும் விழுங்கி, அறுக்க முடியாத சங்கிலியில், ஓய முடியாத நாய் போலச் சுற்றியது. யாருக்கும் அது இரக்கம் காட்டுவதில்லை. ஆண்டியும் அரசனும் அதன் கண்முன் சமமே. புள்ளிகளுக்கு இடையே அசையும் அந்தக் காலத்தைப் பிடிக்க முடியாத மனிதத் தோல்வியின் தொடர்.

கப்பல் நோர்வேக்கு வந்த போது அதன் மின்சார வலையமைப்பின் சில பகுதிகளில் பழுது ஏற்பட்டது. அதனால் திருத்துவதற்காய் அது கரையொதுங்கியது. அது நாள் வரையும் கப்பலில் உள்ள களியாட்ட நிலையத்திற்குப் போன எங்களுக்கு இங்கே தரையில் போகும் வாய்ப்புக் கிடைத்தது. குமரேசன் வாய்ப்பை நழுவவிட விரும்பவில்லை. அன்று எங்கள் வேலைகளை முடித்துவிட்டு இரவு பத்து மணி போல் வெளிக்கிட்டு அங்கே சென்றோம்.

வெளியே இறங்கியதும் இனம் புரியாத சந்தோஷம் எங்களைத் தாக்கியது. எத்தனைதான் சுவர்க்கம் போன்ற கப்பலில் இருந்தாலும் பூமியில் அகலக் கால் பதிப்பதில் இருக்கும் சந்தோஷம் வருவதில்லை. தளும்பாது தரையில் நிலையாய் நிற்பது அற்புதம். பூமியில் நிலையாய் நிற்பதற்குச் சந்தோஷப்பட்டாலும் துருவத்தின் குளிர் நடுங்க வைத்தது. முதன் முதல் இந்தச் சிறிய நகரத்திற்குள் நான் வந்திருந்தேன். அந்த நகரைப் பார்க்க வியப்பாகிற்று. உலகத்தின் உச்சி முடிவிலும் இப்படி ஒரு நகரம், இவ்வளவு வசதிகளோடு இருப்பது எனக்கு வியப்பைத் தந்தது. இது பெரிய நகரம் இல்லை. இருந்தும் அதன் அமைப்பும், வசதிகளும், துப்பரவும், என்னைச் சொர்க்க வைத்தன. அழகான குட்டித் தீவு. இவர்கள் அதிக வசதிபடைத்தவர்கள் என்பதிற்கு இந்தச் சிறிய நகரத்தின் வாகனப் போக்குவரத்துச் சான்று பகிர்வதாயிற்று. தலைக்கொரு வாகனம் இருக்கலாம் என்பது என் கணிப்பு. இது எங்கள் நாட்டிற்குக் கற்பனை செய்ய முடியாத வசதி. நாங்கள் கப்பலை விட்டு இறங்கவே மீன் வாடை குப்பென அடித்தது. அந்த வாடை அருகில் இருந்த கட்டடத்தில் இருந்து வந்தது. அது ஒரு மீன் தொழிற்சாலை. இவர்களது பொருளாதாரம் ஒரு காலத்தில் மீன் ஏற்றுமதியில் தங்கியிருந்தது. கறுத்தத் தங்கம் வந்த பின்பு அதன் முக்கியத்துவம் குறைந்துவிட்டது.

கறுத்தத் தங்கத்தின் ஏற்றுமதி நிறையவே அள்ளித் தருகிறது. அந்த வசதி நகரங்களின் வனப்பாக மிளிர்கிறது. இன்றும் மாட்டு வண்டிலை நம்பியிருக்கும் எங்களுக்கு இங்கே காண்பது வியப்பைத் தந்தது. நாங்கள் சிறிது தூரம் நடந்து சென்றோம். மரத்தால் அமைக்கப்பட்ட அழகான பல வர்ண வீடுகள், அதற்குக் கறுப்பான கூரைகள், பல கடைகள், விடுதிகள், சில மாடிக் கட்டிடங்கள், அழகான தெருக்கள், கரையொதுங்கி நிற்கும் எண்ணற்ற மீன்பிடிப் படகுகள், எங்கும் ஒளி வீசும் கட்டிடங்கள், தெருவில் இறுமிச் செல்லும் வாகனங்கள், நாயுடன் நடந்து செல்லும் சில மனிதர்கள் என்பதாக எங்களை வாய்பிளக்க வைத்த அந்த நகரத்தின் செழிப்பும், காட்சியும்.

போகும் வழியில் விடுதி ஒன்று இருந்தது. அதற்கு முன்பு சிலர் கதைத்துக் கொண்டு நின்றனர். அவர்கள் எங்களைப் பார்த்த பார்வையில் இதுவரை பார்க்காத ஒன்றைப் பார்க்கும் அதிசயம். துருவம் என்பதால் வேற்று நிறத்தில் மனிதர்கள் வருவது குறைவாக இருக்கலாம். அதுவும் ஆபிரிக்கா அல்லது ஆசியாவில் இருந்து இங்கு வருவதற்கு நிறையக் காரணங்கள் இருந்திருக்காது. நாங்கள் ஊரில் ஐரோப்பியரைப் பல நூற்றாண்டு ஆண்ட பின்பும் இப்படித்தானே பார்ப்பதுண்டு. எங்களுக்கு வெள்ளைக்காரர் என்றால் விசித்திரம். இவர்களுக்குக் கறுப்பர் என்றால் விசித்திரம். மொத்தத்தில் மனிதனுக்கு மனிதனே விசித்திரம்.

குமரேசன் அவர்களிடம் போய் களியாட்ட நிலையம் எங்கிருக்கிறதெனக் கேட்டான். அவர்கள் அவனை ஒரு மாதிரிப் பார்த்து விட்டுப் பின்பு நில மட்டத்திற்குக் கீழே இருக்கும் ஒரு கதவைக் காட்டி அங்கே போகுமாறு கூறினார்கள். அவர்களுக்கு நன்றி கூறிவிட்டு நாங்கள் இருவரும் அவர்கள் கூறிய இடத்திற்குச் சென்றோம். குமரேசன் தயங்காது சென்று கதவைத் திறந்தான். உள்ளே காவலர்கள் நின்றார்கள். அவர்களிடம் பணம் கொடுத்து உள்ளே செல்வதற்கான அனுமதி பெற்றோம். பின்பு மேலங்கியைக் கொடுத்து அவர்கள் தந்த எண்ணை வாங்கிக் கொண்டு நாங்கள் அந்தக் களியாட்ட நிலையத்திற்குள் சென்றோம்.

உள்ளே சென்றதும் இருவருக்கும் குமரேசன் வியர் வாங்கச் செல்ல நான் காலியாக இருந்த ஓர் இடத்தில் போய் இருந்தேன்.

குமரேசன் சிறிது நேரத்தில் வியர்ப் போத்தல்களோடு வந்தான். உள்ளே இருந்தவர்களின் புருவங்கள் ஏறியிறங்கின. எங்களுக்கு இது கன்னி அனுபவம். கப்பலில் அடிபட்ட துணிச்சலிற் குமரேசன் எந்தப் பயமும், தயக்கமும் இன்றி அந்த அன்னிய மனிதர்களுக்குள் ஊடுருவினான். நானும் பதற்றத்தைக் காட்டாது அமைதியாக இருந்தேன். அவர்களைப் பார்த்துச் சிரித்தேன்.

'டே வடிவான குட்டியள் எல்லே...? ' என்று கூறிய வண்ணம் வியர்ப் போத்தலை மேசையில் வைத்துவிட்டு என்னைப் பார்த்தான்.

'அதுக்கு?'

'வாவன் போய் அவையோட ஆடுவம்?' என்று கேட்டான்.

'எனக்கு ஆட்டம் சரியா வருகுதில்லை'

'வராட்டி என்ன? உந்த லையிற்றுக்கு காலக் கையை சும்மா ஆட்டினாலே டான்ஸ் மாதிரி இருக்கும்' என்றான். அவர்கள் அந்த அரங்கத்திற்கு அப்படியான மின்னொளியே கொடுத்தார்கள். விட்டு விட்டு வரும் பல வண்ண வெளிச்சத்தில் நாங்கள் சும்மா காலைக் கையை ஆட்டினாற்கூட அது அழகான நடனம் போலவே இருக்கும்.

'என்ன யோசிக்கிறா?' என்று அவன் மீண்டும் கேட்டான்.

'நான் இப்ப வரேல்ல' என்றேன்.

'அப்ப?'

'நீ வேணுமெண்டாப் போய் ஆடு' என்றேன்.

'நீ.. இப்பிடித்தாண்டா ஒண்டுக்கும் வரமாட்டா. டே அங்க பாரடா இரண்டு குட்டியள். சோக்கா இருக்கிறாளவை' என்றான்.

அவன் காட்டிய திசையில் தேவதைகள் போன்ற இரு அழகிகள் வியர் வாங்குவதற்கு நின்றார்கள். அவர்கள் இப்போதுதான் உள்ளே வந்திருக்க வேண்டும். என்னுள்ளும் அவர்களைத் தொடர்ந்து பார்க்க வேண்டும் போல் ஓர்

உந்தல். நான் அவர்களைப் பார்த்தேன். அவர்கள் வியர் வாங்கிய பின்பு இருப்பதற்குச் சொல்லி வைத்தாற் போன்று எங்கள் இருப்பிடத்தை நோக்கி வந்தார்கள். எதிர்பார்க்காத அந்த அதிர்ச்சியின் விளைவாக உடம்பால் அனல் பறந்தது. இதை நான் நிச்சயம் எதிர்பார்க்கவில்லை. அவர்கள் இருவரும் கறுப்பு நிறத்தில் தொடையளவிற்கு கட்டையாக அழகிய கவுண் அணிந்து செதுக்கிய சிலைகளுக்கு உயிரூட்டியது போல இருந்தார்கள். அப்படி யாழ்ப்பாணத்தில் பெண்கள் ஒட்டிய ஆடை அணிவதில்லை. அணிந்தாலும் அவர்கள் நிறத்திற்கு அது எடுப்பாய் இருக்காது என்று நான் நினைத்தேன். ஆடைக்காக அவர்களா அல்லது அவர்களுக்காக ஆடையா என்பதாக வெள்ளைக்கும் கறுப்புக்குமான பொருத்தம் அதில் திமிரோடு துள்ளியது. அவர்களைப் பார்த்த எனக்கு மது இனி வெறிக்காது என்று தோன்றியது. அந்த மோகத்தில் நான் பார்வையால் அவர்களைப் பருகினேன். மது பரிதாபமாக என்னைப் பார்த்தது.

குமரேசனின் நிலையைச் சொல்ல வேண்டியது இல்லை. அவன் முகத்தில் புன்னகையும், மோகமும் மடை திறந்த ஊற்றாகப் பொங்கி வழிந்தன. என் பார்வையின் உக்கிரத்தை மறைக்கப் புன்னகை புரிந்து புருவத்தை நெளித்தேன். அவர்கள் எங்கள் மேசைக்கு வந்தார்கள். கருமை படர்ந்த தலை முடியைக் கொண்ட பெண்ணே முதலில் கதைத்தாள். அவர்கள் இருவரையும் அப்போது என்னால் அந்த முடியின் நிறத்தை வைத்தே பிரித்து அறிய முடிந்தது. மற்றைய பெண்ணுக்குப் பொன்னாகத் தக தகக்கும் கேசம். கருமை படர்ந்த தலை முடியுள்ள பெண் எங்கள் அருகே வந்து 'நாங்கள் இங்கு இருக்க முடியுமா?' என்று அனுமதி கேட்டாள். இருப்பவரைத் தள்ளிவிட்டு அல்லது இல்லாதவருக்காய்த் துண்டைப் போடும் கலாச்சாரமா இது? அந்தப் பண்பு என்னை மயக்கியது. இது ஐரோப்பியரிடம் உள்ள தனிப் பண்பல்லவா என்கின்ற பிரமை உண்டாகியது. தேர்முட்டி கலாச்சாரத்தில் நாங்கள் கேட்டுவிட்டு மற்றவர்களுக்குப் பக்கத்தில் இருப்பதில்லை. கேளாமல் தெருவில் போகின்றவர்களை வம்புக்கு இழுப்பது உண்டு.

அவளைப் பார்க்கப் பார்க்க எனக்கு மனதில் இனம் புரியாத அலை மோதல். எங்கோ இழுத்துச் செல்லும் அவள் பார்வை. தேவதைகளோடு பூவுலகில் கூடியிருக்கும் மன்மதப் பிரமை. நான் பேச முடியாது திகைத்துப் போய் இருந்த போது குமரேசன் இருவருக்குமாய்க் குரல் கொடுத்தான். 'தாராளமாக இருக்கலாமே' என்றான். அவனுக்கு நன்றி கூறியவள் என்னைக் கடைக் கண்ணால் பார்த்தாள். நானும் அவளைப் பார்த்தேன். அண்ணலும் நோக்க அவளும் நோக்கியதான அற்புதம் அங்கே நடந்ததான நினைப்பு எனக்கு முதலில் வந்தது. அண்ணலும் நோக்க அவளும் நோக்குதல் ஐரோப்பியருக்குப் புரியுமா? நெஞ்சிற்குள் திக்கென்றது. எங்கோ இவளோடு ஒன்றி இருந்தது போல உணர்வு ஏற்பட்டது. இவளுக்கும் எனக்கும் ஏதோ பாரிய தொடர்பிருந்ததாய் மூளையில் திடீரென முற்பிறவி எண்ணம் தோன்றியது. என் பிறவியை எண்ணி நான் சிரித்தேன். அதனால் அவளும் சிரித்தாள். அவள் என்னைப் பார்த்தாள். நான் அவளைப் பார்த்தேன். என்னால் அவளிடம் இருந்து என் பார்வையைப் பிரிக்க முடியவில்லை. அவளால் என்னிடம் இருந்து அவள் பார்வையைப் பிரிக்க முடியவில்லை என்பது போல் எனக்குத் தோன்றியது. நாங்கள் ஆளையாள் பார்த்துக் கொண்டு இருந்ததில் எங்களைச் சுற்றி இருந்த சூழ்நிலையை மறந்தோம். என்னையும் அவளையும் பார்த்துக் குமரேசன் சிரித்தான். அப்போதுதான் என்னால் சுயநினைவுக்கு வர முடிந்தது. இங்கும் கம்பனின் கற்பனையா? அவள் முதலில் சமாளித்துக் கொண்டாள். சிரித்த வண்ணமே கையை நீட்டி 'மூனா' என்றாள். நான் வழிந்த வண்ணம் 'அக்கினிபுத்திரன்' என்றேன். கையைவிட மனதில்லாமல் அதை இறுகப் பற்றிய வண்ணம் மாறி மாறிக் குலுக்குவது தொடர்ந்தது. பின்பு அதை உணர்ந்து சட்டென நிறுத்தினோம். சீ நிறுத்தினாள் என்பதுதான் நடந்த உண்மை.

நாங்கள் ஆளையாள் அறிமுகம் செய்து கொண்டோம். என்னோடு மூனா அதிக அக்கறையோடும் விருப்பத்தோடும் கதைத்தாள். நானும் அவளில் அதிக ஈடுபாடு காட்டினேன். ஏன் என்பது எனக்குப் புரியவில்லை. அவளோடு இருக்க வேண்டும் என்பது மட்டும் எனக்குப் புரிந்தது. சில செயல்கள் இயற்கையின் தேவைக்கான ஆழ்மனதின் கட்டளைப்படி நடக்கிறது. நான் அவள் முகத்தைத் தொடர்ந்தும் ஆவலோடு பார்த்தேன். அவளும் அப்படியே. மீண்டும் நாங்கள் எங்கோ இழுத்துச் செல்லப்பட்டோம்.

அந்த அவஸ்தைக்கு விடை தருவதாக அவளாகவே முதலிற் கதைக்கத் தொடங்கினாள்.

'நீங்கள் எந்த நாட்டில் இருந்து வருகிறீர்கள்?' என்றாள்.

‘சிலோன்?’ என்றேன். அப்படிச் சொன்னால்தான் அவர்களுக்குப் புரியும் என்பது எனக்குத் தெரியும்.

‘ஓ வடிவான நாடு இல்லையா? அங்க வெக்கையா இருக்குமென்று கேள்விப்பட்டேன்’ என்றாள் அவள்.

‘ஓமோம்... வருசம் முழுமையும் வெக்கையா இருக்கும்’ என்றேன்.

‘சினோ எப்போது வரும்?’ என்றாள்.

‘நான் அதை வாழ்நாளில் அங்கே கண்டதில்லை’ என்றேன்.

‘ஒரு போதும் கண்டதில்லையா?’ என்றாள் அவள். அவள் கேள்வியில் ஆச்சரியம் இருந்தது. இவள் பூமி சாஸ்திரத்தில் மட்டம் என்று நான் எண்ணிக் கொண்டேன்.

‘இல்லை. சினோவே அங்கு கிடையாது’ என்றேன்.

‘அப்ப வின்ரரில என்ன நடக்கும்?’ என்று கேட்டாள்.

ஆடும் மாடும் நடந்து புல் மேயும் என்று சொல்ல வேண்டும் போல் இருந்தது. அடக்கிக் கொண்டேன். எனக்கு அவள் கேள்வி சிரிப்பை உண்டுபண்ணியது.

‘அங்க வின்ரரே இல்லை’ என்று மீண்டும் கூறினேன்.

‘அப்ப?’ அவள் சந்தேகம் தீரவில்லை.

‘மழைக்காலம் இருக்குது. அப்ப மழை மட்டும் பெய்யும். சினோக் கொட்டாது. குளிராக இருக்கும்’ என்றேன்.

‘நீங்க அதிஸ்ரமுள்ள நாட்டுக்காரர்’ என்றாள் அவள். அதில் மெல்லிய பொறாமை அவளுக்கு. நாங்கள் பிச்சைக்கார நாட்டுக்காரரும்கூட என்பது பற்றி நான் பிரஸ்தாபிக்காது,

‘தாங்ஸ்’ என்றேன்.

‘உங்கட நாட்டுக்கு நான் கட்டாயம் வரோணும்’ என்றாள். வந்தால் பேப்பர் கிடையாது. என்னைப் போன்றவர்களைக் காதலிக்க நினைக்கமாட்டாய் என்று எண்ணினேன்.

‘தாராளமாக. உங்களுக்கு அந்த நாடு நிச்சயமாகப் பிடிக்கும்’ என்றேன். வார்த்தைகளில்தான் எத்தனை வளைவு சுளிவு?

‘நான் ஒரு கேள்வி கேட்கலாமா?’ என்றாள்.

‘நீ ஆயிரம் கேள்வியே கேட்கலாம்’ என்றேன். அவள் சிரித்துவிட்டு,

‘நீங்க திருமணமானவரா அல்லது உங்களுக்கெண்டு யாராவது பாட்னர் உண்டா?’ என்றாள்.

‘பாட்னர்?’ என்றேன். அவள் என்னைப் பார்த்து... என் அறியாமையைப் பார்த்துச் சிரித்தாள். பின்பு,

‘கலியாணம் கட்டாமலே சேர்ந்து வாழுறது’ என்றாள்.

‘ஓ அப்படியா விஷயம். இல்லை. நான் திருமணம் செய்யவில்லை. எங்கள் நாட்டில் கலியாணம் கட்டாமல் தொட்டால் கொலைக் குற்றம்’ என்றேன். தேவதாசிகள் பற்றியெல்லாம் அவளுக்கு விளங்கப் போவதில்லை.

‘ஊவ்..’ என்றாள். அதற்கு அப்போது என்ன அர்த்தம் என்று புரியவில்லை. பாவப்படுவது போல இருந்தது. தொடர்ந்து அவள் அதிர்ச்சி காட்டினாள். பின்பு,

‘எனக்கு இது புதுமையாக இருக்கிறது’ என்றாள்.

‘எங்கள் கலாச்சாரம் பழமையானது’ என்றேன்.

‘உங்களால எப்படி இருக்க முடிகிறது?’ என்றாள். யார் இருக்கிறார்கள்? எங்கள் சோதனை எங்களுக்கல்லவா தெரியும். இங்கு இலவசமாகக் கிடைப்பதற்கு அங்கு பணம் தேவைப்படும். அதற்கு இடமும் இருக்கிறது. இருந்தாலும்... விழுந்தாலும் மீசையில் மண்ணொட்டவில்லை என்பதை விடப் போவதில்லை நாங்கள்.

‘அது எங்கட கலாச்சாரம். அதற்கான கட்டுப்பாடு..’ என்றேன்.

‘நீங்க இங்கும் அப்பிடிதான் இருப்பியளா?’ என்றாள். நாங்கள் அங்கேயே அப்படி இருக்க விரும்பவில்லை. சொல்ல நினைப்பதை எல்லாம் சொல்ல முடியாதது எங்கள் கலாச்சாரம்.

‘உங்களைப் பார்க்காவிட்டால் அப்பிடி இருந்திருப்பன்’ நான் சட்டென்று சொல்லிவிட்டேன்.

அவள் அநியாயமாக வெட்கப்படுவது போல எனக்குத் தோன்றியது. நான் அப்படிக் கூறியது தப்பு என்பதும் உடனே புரிந்தது.

குமரேசன் மற்றைய பெண்ணோடு கதைத்துக் கதைத்து ஐக்கியமாகிவிட்டான். அவன் கை அவள் கழுத்தைச் சுற்றியிருந்தது. காய்ந்த மாடு கம்பங் கொல்லையில் விழுந்தது போல இன்று அவன் எதுவரை செல்வான் என்பது யாருக்கும் தெரியாது. நான் அவளைப் பார்த்துவிட்டு,

'அவள் உனக்கு பிரண்டா? ' என்று கேட்டேன்.

'உங்களுக்கு அவளில விருப்பமா? ' என்று இவள் என்னைத் திருப்பிக் கேட்க, அந்தப் பெண் வெட்கப்பட்டாள். எனக்கு அவளைவிட அது வெட்கமாகிவிட்டது. சமாளித்துக் கொண்டு,

'எனக்கு உன்னைப் பிடித்திருக்கிறது. அவளைப் பற்றியும் அறிய வேண்டும் என்று கேட்டேன்' என்றேன். உள்ளத்தின் உண்மை அது என்பதை அவள் அறிந்தாளோ தெரியவில்லை.

'அவளும் நானும் ஒண்டாத்தான் இருக்கிறம். எங்கட வீட்ட உங்களுக்கு வர விருப்பமா?' என்றாள் இவள்.

'ஏன் இல்லை? நிச்சயமாக வரவேண்டும் என்று விரும்புகிறேன்' என்றேன்.

பின்பு பல விடயங்களைப் பற்றிக் கதைத்தோம். தேவதைகளின் பிரசன்னத்தில் நேரம் கானல் நீராகிற்று. இரவு பன்னிரண்டு மணி போல மூனா புறப்படுவோம் என்றாள். அவள் என்னைப் பார்த்தே இதைச் சொன்னாள்.

நான் இதை எதிர்பார்த்தாலும் முழுமையான நம்பிக்கை இல்லாது இருந்தேன். நிஜமான போது திகைத்துப் போய் விட்டேன். அதில் இருந்து மீண்டும் நான் அவளோடு புறப்படத் தயாரானேன். மனதில் ஆயிரம் ஆனந்த நடனங்கள். இன்று மீண்டும் காமத்தின் கழிவுகள் என்கின்ற நினைப்பு. நாங்கள் கதைப்பதைக் கிரகிக்க முடியாதவர்களாக குமரேசனும் கதரீனாவும் இருந்தனர். இதைப் பார்த்த மூனா,

'என்ன வாறியளா?' என்று மீண்டும் கேட்டாள்.

'யா யா..'

அவள் துடித்துப் பதைத்து எழுந்தாள். பின்பு குமரேசனைப் பார்த்து,

'நீங்களும் என்னோட வருவியள் தானே? ' என்றாள்.

'நான் தனிய இருக்க விரும்புறேல்லை' என்றான் அவன்.

எல்லோரும் சிரித்துக் கொண்டே புறப்பட்டோம். அங்கிருந்த ஆண்கள் எங்களை ஒருமாதிரியாகப் பார்ப்பதாக எனக்குத் தோன்றியது.

அவர்கள் ஒரு வாடகை வண்டியைப் பிடித்தார்கள். குறிப்பிட்ட அவர்கள் வீட்டின் முன்னே வாடகை வண்டி நிற்கவும் நாங்கள் அதிலிருந்து இறங்கினோம்.

நான் முதன் முதல் ஒரு ஐரோப்பியரின் வீட்டிற்குள்ளே சென்றது இங்குதான். வீடு என்று நாங்கள் பார்த்தவற்றிற்கும் இதற்கும் நிறையவே வித்தியாசங்கள். மலைப்பு மலைப் பாம்பாக என்னை உயிரோடு விழுங்கியது. வீட்டிற்குள்ளே சென்றதும் முகத்தில் அடித்த வெப்பம் குளிர் நாடு என்பதை மறக்கடிக்கும் இதம் தந்தது. இயற்கையிடம் இருந்து மின்சாரத்தைக் கறக்கும் நாடு இது. வீட்டினுள்ளே வெப்பம் மாத்திரம் இருக்கவில்லை. நான் அந்த வீட்டைப் பார்த்து எந்த உலகத்தில் நான் என்று தடுமாறினேன். இவ்வளவு வசதிகள் இருக்குமென நான் அந்த வீட்டிற்குள் போகும் முன்பு நினைத்திருக்கவில்லை. வசதிகள் மட்டுமல்ல வீடு மனதைக் கவரும் அழகோடும், உயர் தரமாகவும் இருந்தது. ஐந்து நட்சத்திர விடுதியில் ஒவ்வொரு நாளும் வாழும் அனுபவம். சுவரை எழுப்பி ஓட்டைப் போட்டுவிட்டு வீடு என்று திருப்திப்பட்டவர்கள் நாங்கள். அரசர் பெயரில் ஆளும் இராட்ச்சியத்தில் அரச குமாரர்களாக வாழும் குடிமக்கள் இங்கே.

மரத்தால் உருவாக்கப் பெற்ற மேன்மையான தரம் கொண்ட வீடு அது. அதற்கான தளபாடங்கள். சோடனைகள். பொருத்தமான வண்ணங்கள். ஓவியங்கள். சிற்பங்கள். இசைக் கருவிகள். மன்னர் அரண்மனைகள் மண்டியிட

வேண்டியிருந்த உள் அழகு. வீடு என்று ஒன்று இருந்தால் இப்படி இருக்க வேண்டும் என்பதாக எனக்கு எண்ணத் தோன்றியது. நான் அப்படியே பிரமித்துப் போய் நிற்பதை மூனா பார்த்தாள்.

'என்ன பாக்கிறியள்?' என்றாள் அவள்.

'இல்ல இவ்வளவு அழகான வீட்டை நான் இதுக்கு முதல் பார்த்தது இல்லை' என்றேன்.

'இங்க எல்லாரும் இப்பிடிதானே இருக்கிறம்' என்றாள் அவள்.

'உண்மையாக... குடுத்து வைச்ச நீங்க'

'ஏன்? நாங்க உழைக்கிறம். அதைச் செலவு செய்யிறம். வரியும் கட்டுகிறம்'

'ஆகாக..'

'ஏன் சிரிக்கிறியள்?'

'இல்ல சிலோனில சாதாரணமாய் ஒரு ஆள் உழைச்சு இப்பிடி வசதியா இருக்கேலாது'

'ஏன்?'

'சம்பளம் அப்பிடி?' என்றேன். கிம்பளத்தில் மன்னராய் இருந்தால்தான் வேலை செய்து வசதியான வீடு கட்டலாம் என்று நான் சொல்லவில்லை.

'சரி ஏதாவது குடிப்பமா?' என்று அவள் கதையை மாற்றினாள். அதற்குத்தானே வந்திருக்கிறோம் என்று சொல்லத் தோன்றியது. தவிர்த்துக் கொண்டேன்.

'அவை இரண்டுபேரும் எங்க?' அவள் என்னைத் திடீரென்று கேட்டாள்.

'அறைக்குள்' என்றேன்.

'ம்...?' என்று என்னைப் பார்த்துக் கண்ணடித்தாள்.

ஆண் பெண் என்கின்ற பாகுபாட்டை அதிக விடயங்களில் கைவிட்ட நாடு இது. நாங்கள் இருவரும் பின்பும் ஒரு 'பெக்' விஸ்கி குடித்தோம். அது குடித்து முடியும் போது இரவு ஒரு மணி ஆகிவிட்டது. மூனாவின் கண்கள் சிவந்து போய் இருந்தன. நீலக் கண்களில் சிவப்பு அழகாய் மின்னியது. அவள் என்னை ஆசையோடு பார்த்தாள். அதற்கு உள்ளே போனது மேலும் உதவி செய்தது. நானும் அப்படியே பார்த்தேன். அவளை நெருங்கி அவள் கையை முதலில் பிடித்தேன். அது வெள்ளையாக... வழுவழுப்பாக... மென்மையாகச்... சூடாக... கொள்ளை அழகாக... இருந்தது. நான் அதற்கு ஒரு முத்தம் வைத்தேன். அவளது மார்புகள் நிமிர்ந்து நிற்பது அவளது உள்ளாடையை கிழிப்பதாகத் தெரிந்தது. அவளும் தனது பாம்புக் கரத்தால் என்னை வளைத்தாள். அவள் இதழை நோக்கி எனது இதழ்களை நகர்த்துவதா விடுவதா என்று தயங்கினேன். அவள் தன் இதழ்களை என்னை நோக்கி நகர்த்தினாள். கண்ணை மூடினாள்... அதன் பின்பு கட்டு மீறிய காமத்தில் நடந்தவை புரியாத கணங்கள். சிறிது நேரத்தில் அவளை நான் அள்ளினேன். நோர்வே நாட்டுப் பெண்கள் பெரிய ஆட்களாய் இருப்பார்கள். இலேசாய்த் தூக்க முடியாது. இவள் அப்படி இருக்கவில்லை. இவள் கட்டழகான மெல்லிய சிறிய உடலை உடையவள். அவள் பாவைப்பிள்ளை போல கைக்குள் அடங்கினாள். கைக்குள் அகப்பட்டவள் கண்களால் தனது அறையைக் காட்டினாள். நான் அவளை ஏந்திய வண்ணம் கதவின் கிட்டே செல்ல அவள் தனது கரங்களால் அந்தக் கதவின் பூட்டைத் திறந்தாள். உள்ளே சென்றதும் கதவை மீண்டும் அவளே அடைத்தாள். தனது மனம் இப்பிடி ஒரு நாளும் கதவை அடையாது எனச் சத்தியம் பண்ணுவது போல எனக்கு அது இருந்தது. அறை 'பிங்'நிறத்தில் மிகவும் பெண்மை பேசியது. அதில் அழகிய படுக்கை மையமாகியது. இரவு மயக்கத்துக்கு ஏற்ற ஒளி. நான் அவளை அந்தப் படுக்கை மீது வளர்த்தினேன். என் முன்னே எனக்காக அந்த அழகு படைக்கப்பட்டது. தேவதைகள் படுக்கைக்கு வருவதுண்டா? இங்கு எனக்காக வந்திருந்தது. பசியோடு இருந்த எனக்கு விருந்துண்ண வெறுக்குமா? நான் வெறியோடு பாய நினைத்ததைத் திருத்தி அவள்மேல் மெதுவாகப் படர்ந்தேன்.

அந்த நாள் நினைவுகளை அசை போடும் போது இப்போதும் உடம்பு சூடாவதாய் ஒரு பிரமை. அது பிரமைதான் என்பதை நம்ப முடியவில்லை. உடலில் இன்னும் சில ஆசைகள் சாகாது இருக்கின்றன. மனதில் நிறைந்து விட்ட அந்த இன்ப நினைவுகளை மறப்பது கடினம் என்பது எனக்கு இப்போது புரிகிறது. இந்தத் தள்ளாத வயதிலும் அந்தக் காலத்தில் ஆடிய ஆட்டத்தை ஆட வேண்டும் என்கின்ற ஆசை எழுகின்றது. நான் சிறிது நேரம் எதையும் சிந்திக்காது இருக்க முயன்றேன். தோல்வியோடு மீண்டும் பழைய நினைவுகளில் மூழ்கிப் போனேன்.

அன்று நாம் ஆளையாள் மறந்து காமத்தின் சுகத்தை அனுபவித்துக் களைத்து அப்படியே உறங்கினோம். மதுவின் அமத்தலோடு உடல் அலுப்பும் சேர நான் மூன்று மணித்தியாலங்கள் விழிக்காது நித்திரையில். திடீரென எனக்கு விழிப்பு வந்தது. துடித்துப் பதைத்து எழுந்திருக்க மூனாவும் எழுந்தாள். நான் நேரத்தைப் பார்த்துவிட்டுப் படுக்கையை விட்டுக் குதித்தேன்.

'இப்பவே போறியளா?' என்றாள்.

'ஆறுமணிக்கு வேலையில நிக்கோணும்' நின்று நிதானித்துப் பதில் சொல்ல முடியாத அவசரத்தில் நான்.

'ஓ... இரவைக்கு வருவியளா?' என்றாள்.

'இண்டைக்கும்?'

'ம்...ம்...?' ஆசையாக என்னைப் பார்த்துத் தலையை ஆட்டினாள். பின்பு வெட்கப் பட்டாள்.

'நிச்சயமாக' என்றேன்.

கரும்பு தின்னக் கட்டெறும்பு கூலி கேட்குமா?

'நான் பத்து மணி போல உங்களைக் கூட்டக் கப்பலுக்கு வாறன்' என்றாள்.

'தாங்ஸ்' என்று எனது நன்றியைத் தெரிவித்தேன்.

நான் அவளுக்கு ஆசையோடு சில முத்தங்கள் கொடுத்த பின்பு, அவசரமாக வெளியேறினேன். அவளும் என் பின்னால் எழுந்து வந்தாள். குமரேசனையும் தட்டி எழுப்பி வாடகைக் காரில் கப்பலுக்குத் திரும்பும் போது ஐந்து ஐம்பது இருக்கும்.

★

அவர்கள் இருவரும் அன்று பிற்பகல் சொல்லி வைத்தது போலக் காரோடு கப்பலுக்கு வந்தார்கள். எங்கள் சல்லாபம் தொடர்ந்தது. பத்து நாட்கள் அது நீடித்தது. எங்கள் கப்பலை வைத்திருந்த நிறுவனத்திற்கு ஏகப்பட்ட நஷ்டம். ஓடாத கப்பலும், பறக்காத விமானமும் அதன் சொந்தக்காரனையே விழுங்கிவிடும். எங்கள் கப்பலில் வேலை செய்த பலரை அங்கே உள்ள விடுதியில் தங்க வைக்க வேண்டி வந்தது. பத்து நாட்கள் நஸ்ரப்பட்ட கப்பல் பதினோராவது நாள் பயணத்திற்குத் தயாராகியது.

எங்கள் இதயம் ஆறாக் காதலில் வீறாக வலித்தது. உடல் சுகம் எப்படி உள்ளத்தைப் பாதித்தது? அவர்களுக்கு நாங்கள் போன் பண்ணி விஷயத்தைக் கூறினோம். இருவரும் சில நிமிடத்திற்குள் கப்பலுக்கு வந்தார்கள். எங்கள் அறைக்கு அழைத்துச் சென்று கடைசி முறையாகக் காதல் செய்தோம். மூனா மிகவும் கவலைப்பட்டாள். தன்னுடனே தங்கிவிடும்படி கூறினாள். எப்படித் தங்குவது என்பதற்கு அவளிடம் பதில் இருக்கவில்லை. விழித்தாள். எதற்கும் யோசித்து ஒரு வழி கண்டு பிடித்ததும் எனக்கு எழுதுமாறு விலாசத்தைக் கொடுத்தேன். அவள் அன்று பிரிய முடியாது பிரிந்து சென்ற சோகம் இன்றும் என் மனதைப் பிழிகிறது. உடலில் தொடங்கிய உறவு உள்ளத்தை ஆட்கொண்ட வேதனை என்னை நடைப் பிணமாக்கியது.

# 4

நோர்வேயின் அரச தொலைக்காட்சியில் ஏழுமணிக்குச் செய்தி போகும். அது முடிந்ததும் கடமை என்னைத் தன்னிடம் அழைக்கும். ஒரு நாளைக்கு ஒரு பக்கமாவது எழுத வேண்டும் என்பது என் சபதம். சபதங்கள் சலனங்களிடம் தோற்றுப் போவதும் உண்டு. எழுதக் குந்தினால் எழுத முடிவதில்லை. பழைய நினைவுகள் என்னை அப்படியே ஸ்தம்பிக்கச் செய்து விடுகின்றன. பின்னோக்கும் என் நினைவுகளுக்கு என்னால் அணைபோட முடியவில்லை. அந்த நினைவுகளை மீண்டும் மீண்டும் மீட்பது ஒருவித சுகமாகவே இருக்கிறது. மனதில் அந்த

நினைவுகள் ஒருவித இன்பத்தைச் சுரந்து தள்ள நான் அதற்குள் மூழ்கிப்போனேன். அனுபவிக்காதவரைப் பிரிவின் வலிமை புரிவதில்லை. நான் மூனாவைப் பிரிந்த போதுதான் அதன் வலிமையும், வரைபிலக்கணமும் கொடுமையான வலியாகத் திருகியது. உள்ளம் தக தகவெனத் தவித்தது. உலகு வெறுத்தது. இதயம் கருகிப் போகும் வேதனை எப்படி இருக்கும் என்று புரிந்தது. அது உயிரைக் குடித்தது. ஆணுக்கும், பெண்ணுக்குமான அன்பில் விளைந்த உறவில் பிரிவு என்பது எவ்வளவு கொடுமையானது? ஒரு தாய்க்கும் பிள்ளைக்கும் இருக்கும் உறவு பாசத்தின் இறுக்கமானது. பிரிவு இடைக்கிடை நினைவில் வந்து போகும். பாசத்தின் ஊற்றுக்கண்ணாய் கவலை சுரக்கும். ஒரு ஆணுக்கும் பெண்ணுக்குமான உறவு இரண்டறக் கலக்கும் இரத்தங்களின் உறவு. மற்றைய உறவுகளைவிட இன்பமும் துன்பமும் இதில் மிகுதியாகும். பாம்பை இரண்டாக அறுத்தால் இரண்டு பாகமும் துடிப்பது போல் இருக்கும். சேரும் போது அன்பும் காமமும் பிறக்கும். பிரியும் போது ஆத்மா சுருங்கிப் போகும். உலகில் கூடு மட்டும் சவமாக உலாவும்.

அம்மாவிற்கு அடுத்தது என்கின்ற நினைப்பே அதுவரை எனக்கு வந்தது இல்லை. அந்த நினைப்பைத் தலை கீழாக மாற்றினாள். மூனா அம்மாவைப் பின் தள்ளி முன்னே வந்து நின்றாள். தாய்க்குப் பின் தாரம் என்பார்கள். அது எனக்குப் பிழையாகத் தோன்றியது. தாரம் வந்து விட்டால் தாய் பின்னே மறைந்து போகிறாள். தாய் தனது சுகத்தின் பக்க விளைவாய் எமக்கு உயிர் தந்தாள். இவளோ எனக்குச் சுகம் தந்து தனக்குள் உயிர் வளர்க்கிறாள். அத்தால் தாரம் ஒருபடி மேலாக எனக்குத் தோன்றினாள்.

அவள் எப்படி இதை எடுத்துக் கொள்வாள் என்பது எனக்குச் சரியாக விளங்கவில்லை. ஐரோப்பியர் உறவை மதிக்கும் முறையில் எனக்குத் திருப்தி இல்லை. மூனா என்ன செய்வாள்? கப்பல் வேலையையும் உறவையும் எண்ணும் போது எனக்கு ஒன்று புரிந்தது. கப்பலில் வேலை செய்தால் எந்த உறவின் இன்பத்தையும் முழுமையாக அனுபவிக்க முடியாது என்பது புரிந்திற்று. கப்பல் எங்கே நிற்கும், எங்கே போகும் என்பது தெரியாது. அதில் நிரந்தர முகவரியைத் தொலைத்து பணத்தை மட்டும் சம்பாதிக்க முடிந்தது.

பணத்தை மட்டும் சம்பாதித்து? அது மட்டும் வாழ்க்கையாக எனக்குத் தோன்றவில்லை. கஞ்சி குடித்தாலும் கால் அகல வைத்துக் குடிக்க வேண்டுமெனத் தோன்றியது. முதலில் கப்பலை விட்டு இறங்க வேண்டும். பின்பு ஒரு நாட்டில் நிலையாக வேலை செய்ய வேண்டும். இரண்டு வருடத்தில் மீண்டும் இலங்கைக்கே போக வேண்டும்.

கற்பனைகள் நிறையவே எனது மனதில் இருந்தன. காலம் எப்படி வழிவிடும் என்பது எனக்கு அப்போது தெரியாது. வாழ்க்கையை விதியிடம் ஒப்படைக்கும் காலத்தின் சூட்சுமம் யாருக்கும் புரியாது.

விதி என்கின்ற காலத்தின் சூட்சுமத்தைக் கடவுள்கூட மாற்ற முடியாது. மாற்ற முடியாத விதியிடம் மாட்டுப்பட்டு மாண்ட மனிதர்களைக் காக்க முடியாது கடவுளைக்கூடக் கட்டிப்போட்டது எது? விதியின் வசம் கடவுள் நடனம் என்றால் விட்டில் பூச்சியான மனிதனின் அவலம்...?

மூனாவை விட்டுப் பிரிய மனமில்லாது பிரிந்து கப்பலில் என்னால் அதிக காலம் வேலை செய்ய முடியவில்லை. குமரேசனும் அதையே விரும்பினான். அவனுக்குக் கப்பலில் வேலை செய்வது சிறைக்குள் இருப்பதான வேதனை என்று கூறினான். எவ்வளவு விரைவில் அதைவிட்டு இறங்க முடியுமோ அவ்வளவு விரைவில் இறங்க வேண்டும் எனத் திட்டமிட்டான்.

நான் எமது திட்டத்தை மூனாவுக்குச் சுருக்கமாக எழுதிப் போட்டேன். பதில் போட வேண்டிய எங்கள் கொழும்பு மாமா வீட்டு முகவரியையும் எழுதி அனுப்பி வைத்தேன். எங்கள் திட்டம் நிறைவேறியது. நாங்கள் ஜெர்மனியில் கப்பலை விட்டு இறங்கினோம். அங்கிருந்து வேறு எங்கும் போகாதவாறு பத்திரமாகக் கொழும்பிற்கு எங்களைத் திருப்பி அனுப்பி வைத்தார்கள். கொழும்பில் மாமா வீட்டில் இருவரும் தங்கினோம். அங்கிருந்து குமரேசனும் நானும் சிங்கப்பூர் போகலாமெனத் திட்டம் தீட்டினோம். அதற்கான அலுவல்களில் ஈடுபடும் போது மூனாவிடம் இருந்து அந்தக் கடிதம் வந்தது. எனக்குத் தலைகால் புரியாத இன்ப அதிர்ச்சி. என்னால் அதைச் சில கணங்கள் நம்ப முடியவில்லை. அவள் இவ்வளவு அக்கறையாகக் கடிதம் போடுவாளென நான் எதிர்பார்க்க வில்லை. கடிதத்தையே சிறிது நேரம் பார்த்த வண்ணம் நின்றேன். அதைத் தடவிக் கொடுத்து இரசித்தேன். அவளைத் தொடுவதான இன்பம் எனக்கு அதில்.

கடிதத்தைத் திறந்து அதைக் காயப்படுத்துவது எனக்குப் பிடிக்கவில்லை. என் தத்தளிப்பு எனக்குச் சிரிப்பை வரவழைத்தது. நான் திடீரென வாய்விட்டுச் சிரித்தேன்.

'என்னடா லெற்றரைக் கையில வைச்சுக் கொண்டு விசரனாட்டம் சிரிக்கிறா?' என்றான் குமரேசன்.

'மூனாட்ட இருந்து லெற்றரடா'

'அப்ப விசர் வரும்தான். சரி பிரிச்சு வாசி' என்று அவன் ஊக்கப்படுத்தினான்.

'பிரித்தால் காயப்படும். அதைக் காயப்படுத்தாமல் பார்த்துக் கொண்டே இருக்கோனும் போல இருக்குது' என்றேன் பித்தனாக.

'மந்திகை கேசா நீ? இதை யாரும் கேட்டா விழுந்து விழுந்து சிரிப்பினம்' என்றான்.

'நானும் அதை நினைச்சுத்தான் சிரிச்சன்' என்றேன்.

'சரி... அப்ப வாசி' என்றான் மீண்டும்.

நான் கடிதத்தை மெதுவாகப் பிரித்தேன். அந்தக் கடிதம் அவ்வளவு நீளமாய் இருக்குமென நான் எதிர்பார்க்கவில்லை. ஆவலோடு அதைப் படிக்கத் தொடங்கினேன்.

'எனக்கும் கேக்கிற மாதிரிப் படியடா' என்கின்ற குமரேசனின் விருப்பத்தையும் நிறைவேற்றத் தொடங்கினேன்.

வார்டோ *08.10.1982*

எனது காதலுக்குரிய புத்திரனுக்கு!

நாங்கள் நலமே உள்ளோம். தாங்களும் நலமுடன் வாழ எல்லாம் வல்ல யேசு கிறிஸ்துவை இறைஞ்சுகிறேன். எனது மத நம்பிக்கைதான் உங்கள் மீது அதிக ஈடுபாட்டை ஏற்படுத்தியது என்று சொல்லலாம். கடவுள் அனைத்து மனிதர்களையுமே சமமாகப் பாவிக்கச் சொல்லுகிறார். என்னால் அப்படி நடக்க முடியவில்லை. நான் மற்றைய மனிதர்களைவிடத் தங்களை உயர்வாக மதிக்கிறேன். இது வேதத்தின் கோட்பாட்டுக்குப் பிழையாக இருந்தாலும் எனது காதற் கோட்பாட்டிற்குச் சரியானதே. உயர்வாக உள்ளது சிலவேளை பிழையாக இருக்கலாம். சரியாகச் சொல்லுவது என்றால் மற்றைய மனிதர்களைவிடத் தங்களில் அதிக விருப்பமாக இருக்கிறேன் என்பது பொருந்துமென எண்ணுகிறேன். அப்பாவும் அம்மாவும் சுகமாக உள்ளார்கள். அவர்கள் உங்களைப் பற்றி அறிய மிகவும் ஆவலோடு இருப்பதோடு, நீங்கள் என்னோடு இங்கு வந்து சேர்வதை மகிழ்வோடு வரவேற்கிறார்கள். நான் உங்களோடு சேர்ந்திருந்த நாட்களைக் கூறவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. அப்போது அவர்களுக்கு எல்லாவற்றையும் கூறிவிட்டேன். அவர்களுக்கு எங்கள் இணைவில் மிக்க மகிழ்ச்சியே. எல்லோரும் கடவுளின் பிள்ளைகள் என்பதில் அவர்களுக்கு அதிக நம்பிக்கை உண்டு. அதனால் அவர்கள் இனம், நிறம் போன்ற வேறுபாடுகளைப் பொருட்டாக எடுத்துக் கொள்வதில்லை.

என்ன காரணத்தினால் நான் அம்மா அப்பாவிடம் எங்கள் தொடர்பைக் கூறினேன் என்று நீங்கள் குழம்புவது எனக்குப் புரிகிறது. நான் சொல்லப் போவதை இட்டு நீங்கள் என்ன மன நிலையை அடைவீர்கள் என்றும் எனக்குத் தெரியவில்லை? இதை வாசித்து நீங்கள் நிச்சயம் மகிழ்ச்சி அடைவீர்கள் என்றுதான் நான் எண்ணுகிறேன். உங்கள் மீது நான் வைத்திருக்கும் அன்புக்கு நீங்களும் என் மீது பதில் அன்பு வைத்திருப்பீர்கள் என்பதே என்னுடைய எண்ணம். சரி நான் சொல்ல வந்ததைச் சொல்லாமல் வேறு எங்கோ செல்வதாய் எண்ண வேண்டாம். அந்த மகிழ்ச்சியான செய்தி என்னவென்றால், நான் கர்ப்பமாக உள்ளேன் என்பதே ஆகும். அதன் அப்பா நீங்கள். நீங்கள் தற்போது சந்தோஷம் அடைவீர்கள் என்று எண்ணுகிறேன்.

'வாவ்'

குமரேசன் துள்ளிக் குதித்தான். எனக்கும் மட்டற்ற மகிழ்ச்சி. ஆனால் அம்மா கேள்விப்பட்டால்? இப்போதைக்கு அம்மாவுக்கு எக்காரணம் கொண்டும் தெரியக்கூடாது என்று எண்ணினேன்.

'தொடர்ந்து வாசியடா' என்றான் குமரேசன். நான் வாசிக்கத் தொடங்கினேன்.

'மேலும் உங்களை அடிக்கடி பார்க்க வேண்டும், உங்களோடு சேர்ந்திருக்க வேண்டுமென ஆசையாக உள்ளது. உங்களால் அதைத் தீர்த்து வைக்க முடியுமா? நீங்கள் இந்த நாட்டிற்கு வருவதென்றால் எங்களால் ஒழுங்கு செய்யமுடியும். அதற்கு முதல் அதில் உங்களுக்குப் பூரண சம்மதம் இருக்க வேண்டும். அப்படிப் பூரண சம்மதம் இருந்தால் அந்த ஒழுங்குகளை எனது பெற்றோர் செய்யத் தயாராக உள்ளார்கள். எனது மாமியார் ஒருவர் 'பொல்கைஸ்கூலின்' தலைமை ஆசிரியராக இருக்கிறார். அவர் நினைத்தால் உங்களுக்கு அங்கே படிப்பதற்கான இடம் தரமுடியும். நீங்கள் அதற்கு பதிணெண்ணாயிரம் குரோணர்கள் பாடசாலைக் கட்டணமாகச் செலுத்த வேண்டும். முழுத் தொகையையும் உங்களாற் கட்டமுடியாவிட்டால் நாங்களும் உதவி செய்கிறோம் என்று எனது பெற்றோர்கள் கூறுகிறார்கள். பின்பு கடன் எடுத்துச் சமாளித்துக் கொள்ளலாம். நீங்கள் இங்கு வந்தால் என் உயிரை மீண்டும் பெறுவதான பாக்கியமாக இருக்கும். உங்கள் நண்பர் எப்படி உள்ளார்? அவரும் இங்கே வர விரும்புவாரா? அப்படி என்றால் நாங்கள் அதற்கும் உதவி செய்யலாம். கதரீனா இப்போது இங்கு இல்லை. அவள் ஒஸ்லோவில் சர்வகலாசாலையில் பயின்று கொண்டிருக்கிறாள். இங்கு தற்போது பனி கரையத் தொடங்கிவிட்டது. நீங்கள் அடுத்த பாடசாலை தொடங்கும் போது இங்கு வருவீர்கள் என்று எண்ணுகிறேன். எல்லாவற்றிற்கும் உங்கள் விருப்பமே முக்கியமானது. உங்களுக்கு விருப்பமாய் இருந்தால் நான் மிக விரைவிலேயே உங்களுடன் தொலைபேசியிற் தொடர்புகொள்ள விரும்புகிறேன். அதற்கு ஒரு தொலைபேசி எண்ணை அனுப்பி வைக்கவும். மேற்கொண்டு தங்கள் கடிதம் கிடைத்ததும் தொடர்பு கொள்கிறேன்.

இப்படிக்கு<br>அன்பின்<br>மூனா'

கடிதத்தைப் படித்து முடித்த போது எனக்கு ஆனந்தக் கண்ணீர் கண்களின் கரையில் வெள்ளித் துளிகளாகச் சட்டென உருண்டது. அதே நேரம் மேளதாளத்தோடு என் கலியாண ஊர்வலத்தைப் பார்க்க நினைத்து இருந்த அம்மாவின் நெடுங்காலக் கனவு என் மனச்சாட்சியை ஈட்டி முனையாக உறுத்தியது.

'சீ எல்லாம் நடந்து முடிந்த பின் இதில் என்ன தயக்கம்? அவளை நான் சந்திக்க வேண்டும். எனது பிள்ளையைப் பார்த்தாக வேண்டும்' என்கின்ற ஆசை நுரையோடு பொங்கும் பாலாகியது. எவ்வளவு கெதியாகப் பார்க்க முடியுமோ அவ்வளவு கெதியாக அவளைப் பார்க்க வேண்டுமென எண்ணினேன்.

'என்னடா பேசாமல் இருக்கிறா?' என்றான் குமரேசன்.

'என்ன செய்யிறது?'

'டேய் வெளிக்கிடுகிற வழியப் பார்' என்று அவன் அவசரப் படுத்தினான்.

'அப்ப நீ...?'

'ச்... எல்லோருக்கும் குடுத்து வைக்கிறேல்லை. எனக்கு அதைவிடத் தேர்முட்டி பிடிக்கும்' என்றான்.

'எங்களிட்டயே ஒரு அளவுக்குக் காணுமான காசிருக்குது. அவை வேற உதவி செய்வினமாம். பிறகேன் பயப்பிர்றாய்? நீயும் வாறதெண்டாத்தான் நான் வெளிக்கிடுகிறதா இருக்கிறன்' என்றேன்.

'சரி வாறன். வந்தா அந்தக் குட்டியையும் பார்க்கலாம்'

'அதுதான் அவள் ஒஸ்லோவில எண்டு எழுதியிருக்கிறாளே?'

'அதுக்கென்ன எப்பிடியாவது தேடிப் பிடிச்சிடலாம். கொஞ்சக் காலம் படிச்சிட்டு பிறகு உழைக்கலாமெண்டு நினைக்கிறன்'

'அங்க நல்ல உழைப்பு எண்டு தானே நாங்கள் போய் நிக்கேக்க சொன்னவள். அப்ப உழைப்போட வாழ்க்கையையும் அனுபவிக்க வேண்டியதுதான்' என்றேன்.

'இது அனுபவிப்பு இல்லையடா.... உன்ர கடமை' என்றான்.

‘உண்மைதான்ரா. எனக்கு மூனாவை நினைக்கப் பைத்தியமாத்தான் இருந்திச்சு. என்னால என்ன செய்ய முடியுமெண்டு மனதுக்க புழுங்கினனான். இப்ப ஒரு வழி பிறந்த மாதிரி இருக்குது. நான் அவளில அவ்வளவு அன்பு வைச்சிருக்கிறன்ரா. ஆனா, அம்மாவை நினைக்கத்தான் பாவமாக இருக்குது’ என்றேன்.
‘அவ பாவம்தான். அதுக்கு என்ன செய்யமுடியும்? நாங்கள் அவைக்குப் பிறந்தாலும் அவைக்காகவா பிறந்து இருக்கிறம்?’ என்றான் குமரேசன்.

அதன் பின்பு நான் அவனோடு கதைக்கவில்லை. நான் மூனாவுக்குக் கடிதம் எழுதத் தொடங்கினேன்.

***20-10-82***
கொழும்பு.

அன்பின் மூனா அறிவது! நானும் எனது நண்பனும் நல்ல சுகமே உள்ளோம். அதுபோல் நீரும் உனது நண்பியும், குடும்பமும், குறிப்பாக வயிற்றில் இருக்கும் எமது சிசுவும் நலமுடன் இருக்க எல்லாம் வல்ல இறைவனைப் பிராத்தித்துக் கொள்கிறேன்.

மேலும் உனது கடிதம் வாசித்து சகலதும் அறிந்தேன். கதரீனா எப்படிச் சுகமாக உள்ளாளா? இங்கு குமரேசன் விசாரித்ததாக மறந்து விடாது சொல்லவும். அத்தோடு உமது அப்பா அம்மா சுகமாக உள்ளார்களா? நலமாக இருப்பார்களென்றே நம்புகிறேன். எனக்கு உனது கடிதத்தைக் கண்டதும் மட்டுக் கொள்ள முடியாத மகிழ்ச்சி. என்மீது நீ இவ்வளவு அன்பு வைத்திருப்பாயென நான் கனவிலும் எண்ணவில்லை. என் மனதில் உன் நினைவு இடைவிடாது உழன்று கொண்டே இருந்தது. எங்கள் உறவை நீ எவ்வளவிற்கு மதிக்கிறாய் என்பது புரியாது திகைத்தேன். அந்தத் திகைப்பு இப்போது நீங்கிவிட்டது. உன்னை எப்போது பார்ப்பேன் என்கின்ற நிலையில் நான் கணமும் தத்தளிக்கிறேன்.

நீ கேட்டபடியே நான் உங்கே வருவதற்குச் சித்தமாக உள்ளேன். அதே வேளை எனது நண்பனைப் பிரிந்து வருவதையும் என்னால் நினைத்துப் பார்க்க முடியவில்லை. தயவு செய்து அவனும் வருவதற்கான ஏற்பாட்டைச் செய்து தரவும். எங்களிடம் கணிசமான தொகை கையில் இப்போது இருப்பதால் எங்கள் செலவை நாங்கள் பார்த்துக் கொள்ள முடியும்.

என்னோடு தொலைபேசியிற் தொடர்பு கொள்வதாய் எழுதி உள்ளாய். நான் அதை எதிர்பார்த்துக் காத்திருக்கிறேன். உனது குரலைக் கேட்பது எனக்குப் பரம சந்தோசம் அளிக்கும் என்பதில் ஐயம் இல்லை. என்னோடு கதைப்பதற்கு இந்த எண்ணுக்குத் தொடர்பு கொள்ளவும். மேலும் நான் பெண்மை என்பதை உன்னிடமே முழுமையாக உணர்தேன் என்பதை மறந்துவிட வேண்டாம். என் நெஞ்சில் உன் நினைவுகள் என்றும் நீங்காத கல்வெட்டாக.

எனக்குக் காதல் என்றால் என்ன… பெண் என்றால் என்ன… அன்பு என்றால் என்ன… என்பதைப் போதித்தமைக்கு மிக்க நன்றி. என்னால் அதிகம் எழுத முடியாமைக்கு மன்னித்துக் கொள்ளவும். வேறு அதிக புதினம் இல்லை.

இப்படிக்கு
அன்பின்
புத்திரன்.

‘தாடா’

எழுதி முடியவும் குமரேசன் எங்கிருந்தோ வந்து கடிதத்தைப் பறித்தான். கடிதத்தைப் பறித்தவன் அவசரமாக அதை வாசித்தான். அவன் இப்படிச் செய்வது எனக்குப் புதுமையில்லை. அப்படியான நட்பே எங்களின் நட்பாய் இருந்தது.

அவன் கடிதத்தை வாசித்துவிட்டுச் சிரித்தான். நான் புரியாது,

'என்னடா சிரிக்கிறாய்?' என்றேன்.

'நீ இப்ப நல்லா எழுதப் பளகீட்டாய்' என்றான்.

'ஒரு எழுத்தாளனா வரோணும் எண்டதுதான் என்ர ஆசை' என்றேன்.

'கிளிச்சா..' என்னை உசுப்பி விடவே அவன் அப்படிச் சொன்னான்.

'சாகிறத்துக்குள்ள நான் இதைச் செய்து காட்டுறனா இல்லையா பார்' எனச் சவால் விட்டேன்.

எனது சிந்தனை இடை அறுந்தது. அந்த வசனம் மீண்டும் என் மனதில் வந்து மோதியது. எனது உயிர் பிரிவதற்குள் இதை எழுதி முடிக்க வேண்டும். என்னாலும் சிலதைப் படைக்க முடியும் என்பதை நிரூபிக்க வேண்டும். இந்தப் பிண்டம் போன பின்பு மிஞ்சுவது? நான் எழுதப்போவதாய் மட்டும் இருக்கட்டும். அண்டங்கள் அழியும்போது அல்லது இந்தப் பூமி அழியும்போது அதுவும் மிஞ்சாது. மனிதன் வேறு 'கலக்சியில்' அல்லது சூரிய குடும்பத்தில் குடியேறும்வரை எல்லாம் தற்காலிகமே. அதன் பின்பும் இருப்பு என்பதன் தற்காலிகம் நிரந்தரம் ஆகும் என்பதற்கு உத்தரவாதம் இல்லை. பேரோசையுடன் இந்தப் பிரபஞ்சம் உருவாகி இருந்தால் பேரோசையுடன் இந்தப் பிரபஞ்சம் முடியாது என்பதற்கும் உத்தரவாதம் கிடையாது.

நினைவுகள் என்னை மீண்டும் இறந்த காலத்திற்கு இழுத்துச் சென்றன. மூனாவிற்குக் கடிதம் எழுதிப் பத்து நாட்கள் கழிந்து விட்டன. போன் எப்போதும் வரலாமென நான் எதிர்பார்த்தேன். அதற்காக வீட்டினிற் சிறையிருப்பதும் தோதாகத் தோன்றவில்லை. நாங்கள் வெளியே புறப்பட்டுச் சென்றோம். எங்கே சென்றால் என்ன? அவள் நினைவு எங்கும் என்னை இடைவிடாது பழ ஈ போலத் துரத்தியது. இந்த நினைவின் தொந்தரவை என்னவென்று சொல்வது? காமமா? பாசமா? காதலா? காதல் என்று எண்ண எனக்குப் பிடித்தது.

கொழும்பின் கேளிக்கைகள் சில கணங்கள் அவள் நினைவில் இருந்து எனக்கு விடுதலை தந்தன. அவை சாகாவரம் பெற்றவையல்ல. மீண்டும் அவள் நினைவு பெட்டைக் கோழியைக் கண்ட சேவலாக ஏறி மிதிக்கும். அன்று வெளியே சுற்றிவிட்டு ஒன்பது மணிக்கு நானும் குமரேசனும் வீட்டிற்கு வந்தோம். வீட்டுக்குள் வந்ததும் என்னையறியாது நான் தன்னிச்சையாகத் தொலை பேசியைப் பார்த்தேன். இதைக் குமரேசன் கவனித்துவிட்டான்.

'என்ன போனப் பாக்கிறா? ' என்றான். அவனுக்கு அது பரிகாசம் என்பது எனக்குப் புரிந்தது. எல்லாவற்றையும் அவன் விளையாட்டாக எடுத்துக் கொள்வான்.

'மூனா இன்னும் போனெடுக்கேல்லை. சே... ஏனெண்டும் தெரியேல்லை' என்றேன்.

'தம்பிமாரே சாப்பிட வாங்கோ' என்கின்ற மாமியின் குரல் எங்களை இடை வெட்டியது. நாங்கள் சாப்பிடச் சென்றோம். மஞ்சள் நிலவு போன்ற ஓட்டை நிறைய விழுந்த பூப்போன்ற தோசையோடு மாசிச் சம்பலும் செய்து வைத்திருந்தா. ஒரு வெட்டு வெட்டிவிட்டு வரும் போது சொல்லி வைத்தது போல் போன் அடித்தது. நான் என்னைக் கட்டுப்படுத்த முடியாது ஓடிச் சென்று போனை எடுத்தேன்.

'கலோ இது மூனா, நோர்வேயில இருந்து கதைக்கிறன்... புத்திரனோட கதைக்கலாமோ?' என்று மூனா மறுமுனையில் பேசினாள்.

'நான் புத்திரன்தான் கதைக்கிறன்' என்றேன்.

'யா... எப்பிடிச் சுகமாக இருக்கிறியளா?'

'ஓம். நீ சுகமாக இருக்கிறியா? அப்பா அம்மா எப்பிடி? உன்ர பிரண்ஸ் எப்பிடி?'

'எல்லாரும் நல்ல சுகமாக இருக்கினம்' என்றாள்.

'வேற என்ன புதினம்?'

‘அன்ரியோட கதைச்சு உங்களுக்கும் உங்கட பிரண்டிற்கும் இடம் எடுத்தாச்சு. நான் போமோட விபரங்களும் உங்களுக்கு அனுப்பி வைக்கிறன். நீங்கள் கெதியா அதை நிரப்பி அனுப்பி வையுங்க’ என்றாள் அவள்.

‘தாங்ஸ் மூனா’

‘இதுக்கு நன்றி தேவையில்ல. நான் உங்களைப் பாக்கோணும் எண்டுற ஆசையில இருக்கிறன்’ என்றாள்.

‘நீ எப்பிடி இருக்கிறாய்? கஸ்ரமா இருக்கா?’

‘பெம்பிளையாக இருந்தாத்தான் அதைப் பற்றித் தெரியும்’ என்றாள்.

‘இரண்டு பேரும் பெம்பிளையா இருந்தால் நல்லாவா இருக்கும்?’

‘ம் நல்ல கற்பனைதான்’ என்றாள்.

‘அலுவல் சரி வந்தவுடன நீங்கள் வருவியள்தானே? இதில எந்த மாற்றமும் இல்லையே?’

‘நிச்சயமாக இல்ல. நான் எங்கயெண்டு ஏங்கிச் சாகிறன்’

‘உங்கட பிரண்ஸ் எப்பிடி இருக்கிறார்?’

‘நல்லாய் இருக்கிறார்’

‘உங்கட அப்பா, அம்மா எங்க?’

‘இரண்டுபேரும் எங்கட சொந்த ஊரில இருக்கினம். இங்க இருந்து முந்நூறு கிலோமீற்றர் இருக்கும். சிலவேளை இங்கிருந்து பணம் அனுப்புறதில சிக்கல் இருக்கலாம். அப்பிடிச் சிக்கலெண்டா நீங்கள் பணத்தைக் கட்டேலுமா?’

‘தாராளமாகச் செய்யலாம். ஆனா திருப்பி அப்பா அம்மாவுக்குக் குடுக்கோணும். என்னிட்டச் சொந்தமாகப் பணம் இல்லை. அப்பா அம்மாவிட்ட வாங்கித்தான் செய்யோணும். நீங்கள் படிக்க இங்க கடன் எடுக்கலாம்’

‘அதில பிரச்சன இல்லை. நாங்க கட்டாயம் திருப்பித் தருவம்’

‘அது நல்லது’

‘வேற என்ன புதினம்?’

‘உங்களைப் பார்க்கோணும் போல இருக்குது’ என்றாள் மீண்டும்.

‘கற்பமான காலத்தில பெம்பிளையளுக்கு நிறைய ஆசை வருமாம். அது இப்பதான் தெரியுது’ என்றேன்.

‘நீங்க எவ்வளவு கெதியா வரேலுமோ அவ்வளவு கெதியா இங்க வரோணும். இப்ப பொழுதே போறேல்ல. முன்னமெண்டாப் பின்னேரத்தில ‘றண்ணிங்’ போயிட்டு வருவன். இப்ப அப்பிடிப் போக முடியேல்ல. இடைக்கிடை கொஞ்சத் தூரம் வெளியால நடந்து போட்டு வருவன். நீங்களும் வந்தா இரண்டுபேரும் சேர்ந்து போகலாம். சேர்ந்தும் சல்லாபிக்கலாம்’

‘எனக்கு உன்னுடைய மனசு விளங்குது. நாங்கள் எவ்வளவு கெதியா வரமுடியுமோ அவ்வளவு கெதியா உங்க வந்து சேருவம்’

‘நீங்கள் விட்டிட்டுப் போன பிறகு கொஞ்ச நாள் உலகமே வெறுத்தது போல இருந்திச்சு. எனக்கு ஏனோ டிஸ்கோவுக்குகூடப் போக மனம் வரேல்ல. கதரீனா போனாள்’ என்றாள்.

‘எனக்கும் அப்பிடித்தான். அதுதான் நான் இவ்வளவு கெதியாக் கப்பலைவிட்டு இறங்கீட்டன். இல்லாட்டி இன்னும் கனகாலம் வேலை செய்திருக்கலாம்’

‘எனக்கு விளங்குது புத்திரன்’

‘இங்க பொழுது போக்கிற்குப் பஞ்சம் இல்லாட்டியும் ஆசைப்பட்டவளோட இருக்கிற சுகத்துக்கு அதெல்லாம் ஈடாகாது’

‘அப்பிடியா?’ என்றாள்.

‘உண்மையாகத்தான் சொல்லுறன். கர்த்தர்மேல் சத்தியம் பண்ணவா?’

‘வேண்டாம்… வேண்டாம்… நான் நம்புறன். அப்ப வைக்கட்டே?’

‘ஓ கே வாய்’

‘ வாய்’

★

உலக இருப்பிற்கும் உலக மறுப்பிற்கும் இடையில் ஓயாத போராட்டம். இறுதியில் உலக இருப்பு வெல்லும். அல்லது பைத்தியம் என்று பெயர் வரும். நானும் அந்த விதிக்குக் கட்டுப்பட்ட ஜடமே. நீனா என்கின்ற பெயருடைய புதிய தாதி எமது முதியோர் இல்லத்திற்கு வந்திருக்கிறாள். அவளுக்கு நேரத்திற்குப் படுக்காது இருப்பது பிடிப்பதில்லை. அவள் இப்படித் திடுமென வந்து நிற்பாளென நான் எதிர்பார்க்கவில்லை. அவளின் பார்வையின் அர்த்தம் புரிந்தது. நான் என்ன செய்வது என்பது புரியாது அப்படியே இருந்தேன். அவள் மெதுவாக என்னைக் கண்டிக்கத் தொடங்குவாள் என்பது எனக்குத் தெரியும். நான் நினைத்ததை அவள் பொய்யாக்கவில்லை.

'நேரமாச்சுது, போய்ப் படுக்கலாமே?' என்றாள்.

நான் கேள்வியாய் புருவத்தை உயர்த்தினேன். பின்பு இவளோடு ஏன் வீண் விவாதமென எண்ணியவாறு,

'நான் படுக்க றெடி' என்றேன்.
பின்பு கனினியை அணைத்துவிட்டு, எனது கட்டிலில் வந்து படுத்து டீனரால் என்னை மூடிக்கொள்ள, அவள் அறை விளக்கை அணைக்க ஆயுத்தமானாள்.
'கூநாத்' (இரவு வணக்கம்)
'கூநாத்'

அவள் அறை விளக்கை அணைத்துவிட்டு வெளியே சென்றாள். அவள் பின்னால் நித்திரையும் போனதாக நான் அவஸ்தைப்பட்டேன். நித்திரை கோபிக்க பழைய நினைவுகள் கோர்வையாக மூளையில் விரியத் தொடங்கின.

★

மூனா போனெடுத்துக் கதைத்த சில நாட்களிலேயே அனைத்துப் படிவங்களும் வந்து சேர்ந்தன. கொழும்பில் உள்ள நோர்வேத் தூதரகத்தில் விசாவிற்கு விண்ணப்பித்தோம். இப்போது இருக்கும் கெடுபிடிகள் அந்தக் காலத்தில் இருந்ததில்லை. ஐரோப்பாவில் எண்ணக்கூடிய இலங்கையரே வசித்து வந்த காலம். எங்கள் நாட்டுக் கறுப்புக் கடவுச்சீட்டையும் கடவுச்சீட்டாய் மதித்த காலம்.

எங்கள் அலுவல்கள் இலகுவாக முடிந்தன. பயண அலுவல்கள் முடிந்ததும் வீட்டிற்குச் செல்ல வேண்டும் என்கின்ற கடமையும் பாசமும் உந்தித் தள்ளியது.

வீட்டிற்குச் சென்று அம்மாவிடம் விடயத்தைச் சொல்ல அம்மா அழத் தொடங்கிவிட்டார். 'சொத்து மட்டும் இருந்து என்ன செய்யிறது? உனக்குத் தேவையானது எங்களிட்ட இருக்குதுதானே? பிறகு யாருக்கு உழைக்கப் போறாய்? நீ வெளிநாடு போகத் தேவையில்லை. உன்ன என்னால போகவிட முடியாது' என்பதாக அம்மா அழுது புலம்பினார். விடாப் பிடியாக விம்மியபடி நின்றா. அம்மாவைச் சமாதானப்படுத்திவிட்டு வருவது பெரும்பாடாகிற்று. குமரேசன் வீட்டில் அந்த நிலைமை இல்லை. ஓடு நாயே என்று சொல்லாத குறை. அதைவிட நோர்வையில் படிக்கும் போதே உழைக்கலாம் என்பதில் அவர்களுக்கு ஏகப்பட்ட சந்தோஷம்.

★

நாங்கள் ஒஸ்லோ வந்த போது மூனா எங்களை அழைத்துச் செல்ல அங்கே வந்தாள். அவள் எங்களுக்காக விமான நிலையத்தில் அதிக நேரம் காத்திருந்திருக்க வேண்டும். முகத்தில் சோர்வு இழையோடியது. அவள் உடம்பு பெருத்து இரண்டு பிள்ளை இருப்பது போல வயிறு முனை போல முன்னே துருத்தியது. அவளின் அந்தக் கோலத்திலும் என்னால் ஒரு அழகைப் பார்க்க முடிந்தது. கற்பம் பெண்களுக்கு அழகேன நான் எண்ணினேன்.

விமான நிலையத்தில் என்னைக் கண்டவுடன் துருத்துகின்ற அந்த வயிற்றோடு மூனா என்னை நோக்கி எட்டி நடந்து வந்தாள். வந்த வேகத்தில் கட்டிப் பிடித்து உதட்டில் பல முத்தம் தந்தாள். மற்றவர்கள் இருக்கிறார்கள் என்பதற்காய் இருட்டில் முத்தம் தருவது இவர்கள் வழக்கமல்ல. அது எனக்குப் புரிந்ததால் நானும் ஆசையோடு அவளை முத்தமிட்டேன். அவளது கைகளைப் பிடித்து ஆசையோடு என்கைக்குள் சிறை வைத்தேன். அந்தக் கையை இனி விட்டுவிடக்கூடாது என்பதாகச் சபதமெடுத்தேன்.

இன்னும் ஒரு மாதம் சென்றால் அவளை விமானத்தில் பயணிக்க விடமாட்டார்களாம். அதற்கு முன்பு வந்ததால்தான் அவள் இங்கு வரமுடிந்ததாம்.
எங்கள் முத்தப் படலம் முடியக் குமரேசன் மெதுவாகப் பேசத் தொடங்கினான்.

'எங்க... கதரீனாவைக் காணேல்லை? ' என்றான் அங்கும் இங்கும் பார்த்த வண்ணம். அவனது ஏக்கம் அவனுக்கு.
'ஓ மன்னிக்கோணும்... அவளுக்கு இப்ப புதுக் காதலன் கிடைச்சிட்டான்' என்றாள் மூனா.
'என்ன?'
'அதான் உண்மை. கவலைப்படாதீங்க..'

குமரேசன் வதனம் தொட்டாற்சிணுங்கியாகச் சுருங்கிப் போயிற்று. அவன் அதைச் சற்றும் எதிர்பார்க்கவில்லை என்பது அப்பட்டமாய்த் தெரிந்தது. மூனா அவனைச் சமாதானப்படுத்த முயற்சித்தாள்.

'இது இங்க வழமையான ஒண்டுதானே? கவலைப்படாதேங்க' என்றாள்.
'எது வழமையான ஒண்டு?'
'காதலனை மாத்துறது'
'இப்பிடியா?' என்றான் குமரேசன். அவன் அதிர்ச்சியிலிருந்து விடுபடவில்லை. உள்ளங்கையை அடிக்கடி சொறிந்தான். அங்கும் இங்கும் பார்த்தான்.
'அப்ப?' என்றாள் மூனா.
'நான் ஒரு விஷயம் கேட்டாக் குறை நினைக்க மாட்டியளே?'
'இல்ல'
'நீங்க ஏன் அப்பிடிச் செய்யேல்லை?'
'எல்லோரும் அப்பிடிச் செய்யமாட்டினம். சிலர் மாறுவினம். சிலர் தொடர்ந்து வாழுவினம். நல்லாப் பிடிச்சிருந்தா தொடர்ந்து வாழுறதும், உரசல் இருந்தாப் பிரிஞ்சு போறதும் இயற்கைதானே?' என்றாள் மூனா.
'அப்ப கதரீனா நண்பியா விலகீட்டா எண்டுறியள்?'
'நிச்சயமாக...'
'அப்ப நான் இனி என்ன செய்யிறது?' குமரேசன் புரியாது கேட்டான்.
'புதுசா ஒருத்தியைப் பாருங்க'

மூனா இங்குள்ள நடைமுறையை இயம்பினாள்.

சுருங்கியிருந்த குமரேசனின் முகம் திடீரென தாமரையாக மலர்ந்தது. அவன் எல்லாவற்றையும் வாய்ப்பாக எடுத்துக் கொள்பவன். அதைப் பார்க்க எனக்கு ஆறுதலாகிற்று. நான் மூனாவை அர்த்தத்தோடு பார்க்க அவள் என்னைப் பார்த்துச் சிரித்தாள். அந்தச் சிரிப்பு குமரேசன் தேறிவிடுவான் என்பது போல இருந்தது. காதலனை அல்லது

காதலியை மாற்றிக் கொள்வது வேதனையானாலும் இங்கு அது வழமையான ஒன்று என்பது காலப்போக்கில் புரிந்திற்று.

நாங்கள் ஒஸ்லோவில் இரண்டு நாட்கள் தங்கினோம். அதுவும் கதரீனாவின் வீட்டில் தங்கவேண்டி வந்தது குமரேசனுக்குப் பெரும் சங்கடமாகிற்று. வீட்டிற்குச் சென்றவுடன் ஆளையாள் முகம் கொடுக்க முடியாது தவித்தார்கள். பின்பு குமரேசனும் கதரீனாவும் சங்கடத்தோடு கதைக்கத் தொடங்கினார்கள். அவர்கள் பழைய நினைவுகளை அசை போட்டார்கள். குமரேசன் கதரீனாவின் புது நட்பைச் சகிக்க முடியாது முதலில் தவித்தான். பின்பு சமாளிப்பதற்காய் வியர் குடித்தான்.

ஷமூனா அவனது அவஸ்தைகளை நோட்டமிட்ட வண்ணம் இருந்தாள். பின்பு கண்களால் அதை எனக்கு விளக்கினாள். இரவு கதரீனா தனது புதிய காதலனோடு படுக்கச் சென்றாள். அது இரண்டு படுக்கை அறைகள் கொண்ட வீடு. நானும் மூனாவும் மற்றைய அறைக்குட் புகுந்தோம். குமரேசன் கோலில் இருந்த சோபாவில் குறண்டியபடி படுத்தான். நிச்சயம் அவன் நிம்மதியாய்ப் படுத்திருக்கமாட்டான். என்றாலும் அவன் தேறிவிடுவான் என்கின்ற நம்பிக்கை துளிர் விட்டதால் கவலையின்றி மூனாவோடு நான்.

ஒஸ்லோவில் இருந்து மூனாவின் வீட்டிற்கு வருவதற்கு இரண்டு விமானங்கள் ஏற வேண்டியது ஆகிற்று. ஒஸ்லோவில் இருந்து ஒரு முறை ஐரோப்பாவைக் கடந்து செல்லும் தூரமாகும். அந்தத் தூரத்தை வடக்கு நோக்கிப் பயணிக்கும் பரிதாபம். நான் மூனாவிடம் அதைக் கேட்டேன்.

'உங்களுக்குத் தெற்கில நிறைய இடமிருக்கல்லவா? பிறகேன் இங்க இருக்கிறியள்?'

'பிறந்த இடம்... வேலை, உரிமை, வேற்று நாட்டான் புகுந்து விடுவான் என்கின்ற சந்தேகம். எண்ணெய் வளம் என நாங்கள் இருந்தாக வேண்டிய கட்டாயம்.'

'அப்பிடியா..'

'ஆனால் போக்குவரத்திற்கு நிறையச் செலவாகிறது. அது வடக்கின் பொருளாதாரத்தைப் பற்றி அடிக்கடி விவாதத்தை உருவாக்குகிறது' என்றாள்.

நான் பேசாது இருந்தேன்.

'புத்திரன்?'

'சொல்லும்...?'

'என்ன யோசிக்கிறியள்?'

'உங்கட பொருளாதாரத்தையும் சொவ்வியத்தின் பொருளாதாரத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தன்'

'எங்கட நாட்டுப் பொருளாதாரம் பற்றி உங்களுக்குத் தெரியுமா?'

'நான் கொஞ்சம் தெரிஞ்சு வைச்சிருக்கிறன்'

'ஓ... நீங்கள் கனவிஷயம் தெரிஞ்சு வைச்சிருக்கிறியள்'

'சீ... சீ... அப்பிடி எண்டில்ல... ஏதோ சிலது'

'எப்ப நீங்கள் நொஸ்க் (நோர்வேயில் பேசப்படும் மொழி) பழகுவியள்?'

'தெரியல்ல. ஏன்?'

'அப்ப நாங்கள் ஈசியாக நிறையக் கதைக்கலாம்... அதுதான்' என்றாள்.

'சொந்த மொழியில கதைக்கிறது தனிச் சுகம்தான்..'

'உண்மை. எனக்கு என்ன ஆசை தெரியுமா?' என்றாள்.

'தமிழ் கதைக்கோணும் எண்டா?'

'உங்களுக்குப் பேராசைதான்'

'மனைவி தன்ர மொழி கதைக்க வேணும் எண்டு ஆசைப்படுகிறது பிழையா?' என்றேன்.

அவள் பதில் சொல்லவில்லை. ஆசையாக என் இதழில் முத்தம் வைத்தாள். எனது கைக்குள் தனது கையைக் கோர்த்துக் கொண்டாள்.

இருவரும் ஆளையாள் பார்த்துச் சிரித்தோம். இரண்டு விமானங்கள் ஏறியிறங்கி எங்கள் நகரை வந்தடைய இரவு ஏழுமணி ஆகிவிட்டது. எங்களை வரவேற்க அந்தச் சிறிய விமான நிலையத்திற்கு மூனாவின் அம்மாவும், அப்பாவும் வந்தார்கள். எங்களைக் கண்டவுடன் ஓடிவந்து கை தந்தார்கள். எனக்கு மகிழ்ச்சி மட்டுக் கொள்ளவில்லை. அவர்களின் களங்கமற்ற அன்பு என்னைக் குளிர வைத்தது. நாங்கள் அவர்கள் காரிலேயே வீட்டிற்குச் சென்றோம்.

எங்களுக்கு ஐரோப்பியரின் உணவு இப்பொழுது பழகிப் போய்விட்டது. பின்னேரச் சாப்பாட்டிற்குப் பாணோடு ஏகப்பட்ட துணை உணவுகளை வைத்தார்கள். இருந்த பசிக்குப் பாலையும் குடித்து அவற்றை ஒரு பிடி பிடித்தோம். பின்பு பல கதைகள் கதைத்துவிட்டு நானும் மூனாவும் படுக்கச் சென்றோம்.

★

யுகங்களைக் கணங்களாக்கிய அண்டத்தின் அசைவுகளாகக் காலமென்னும் அளவுகோல்… அது கடந்து போகும் வேகத்தையும், வாழ்வின் நிரந்தரமற்ற பயணிப்பையும் காட்டிநிற்க, அதற்கு அடிமைப்பட்ட மனித இயக்கத்தின் காரணமாய்ப் பாடசாலைகள் ஆரம்பமாகியது. அது ஒரு வகையிற் குமரேசனுக்குச் சொர்க்கமாகியது. எனக்கு ஏக்கமான நரகமாகியது. அங்கே மூனாவின் நினைவு நித்தம் என்னை வாட்டலாகிற்று.

# 5

**இ**ளமையான எண்ணங்களோடு எப்போதும் உறவாடலாம். எனினும் இயற்கையின் நியதியை எம்மால் வென்றுவிட முடியாது. உடல் திடீரென மாற்றம் அடைவதாய் மனதின் பதைபதைப்பு எப்படியோ எழுந்து விடுகிறது. நாளையளவில் அது நம்மை முழுமையாக ஆட்கொண்டு விடுகிறது. பதைக்காதே… அதுதான் உண்மை என்பது புரிந்தவரின் வாதம். அசைக்கும் போது மூட்டுக்களில் ஊற்றுக் கண்ணாகப் பெருகும் வேதனை. மனது இளமையாக இருந்தாலும் மரித்துப் போகும் ஜடம் இயற்கையின் நியதியிடம் அடைக்கலமாகித் தோற்கும் பரிதாபம்.

உடம்பு வலுவிழந்து போவதை உணர்ந்து கொள்ளும் போது ஏற்படும் ஆற்றாமையும், அந்தரமும். இயலாமை உடல்மேல் எவ்வாறு சவாரி செய்யும் என்பதை என் முறையில் உணரும் தருணங்கள். நடமாடும் போதே செத்தவன் பற்றிய சுகமான சாவின் ஏக்கங்கள்.

இயற்கையின் விதி குமரேசனிடமும் விளையாடியது. அவன் வாடி வதங்கி வலுவிழந்து தோன்றினான். நடப்பது என்பது தீ மிதிப்பதான வேதனை ஆகிற்று. அரைக் குருடனாக அவதிப்படும் அவன் செய்கைகள். சில வேளைகளில் தாதி வந்து உடற்பயிற்சி செய்வதற்கு எங்களைத் தள்ளிக் கொண்டு போகிறாள். இந்த நிலைமையில் என்ன உடற்பயிற்சி செய்ய முடியுமென்று கேட்டால், இயன்றதைச் செய்யுங்கள் என்கிறாள். இயன்றது? இயல்வது? யாருக்கு? அசைவற்ற தசைகள் குறண்டிவிடும் என்கின்ற உண்மையும் பயமுறுத்துகிறது. இயலுமானவரை அதை அசைக்க வேண்டும்.

நித்திரை குறுகிவிட்டது. நினைவுகளும் ஏக்கங்களும் பெருகிவிட்டன. அதன் ஆக்கிரமிப்பில் படுக்கையில் படுத்துப் பக்கம் பக்கமாய்ப் புரளவேண்டிய அவஸ்தை தொடருகிறது. கடந்த காலங்களில் தாவும் மனதிற்குக் கடிவாளம் கிடையாது. இளமையில் ஆடிய ஆட்டம் இன்றும் பசுமையாக விரிகிறது. இன்னும் ஒருமுறை இளமை வேண்டும் என்பதாய் மனது துடிக்கிறது. மனது இளமையைக் கடவுளிடம் வரமாகப் பெற்று மீண்டும் இறக்கைகட்டிப் பறக்க ஆசைப்படுகிறது. கடவுளுக்கே மீண்டும் இளமையாகும் பாக்கியம் கிடைக்குமா? மனிதன் படைத்ததில் இருந்து அவர் அப்படியே. இயற்கையால் கட்டுண்ட மனிதனாகிய எனக்கு?

நரகம் என்று ஒன்று புதிதாகத் தேவையில்லை. நித்திரை இல்லாது போகும் போது அது தானாகச் சொந்தம் கொண்டாட வந்துவிடுகிறது. இளமையில் கிட்டிய நட்பை நினைத்து அந்த நரகத்திலும் இன்பம் கொள்கிறேன். இறப்பு பற்றி இப்போது அடிக்கடி நினைக்கத் தோன்றுகிறது. இத்தனையும் இனி எனக்கு இல்லையா என்கின்ற கேள்வி எழுகிறது. என் பிண்டம் அழிந்தபின் நான் எங்கே? செய்த வினைகளை விடப் பிண்டத்தை அதிகமாக ஞாபகம் வைத்திருக்கும் இவ்வுலகு. நான் என்பது என் பிண்டம்தானே? அழியும் அந்தப் பிண்டத்தைவிட என் நினைவாக எஞ்சப் போவது என்ன? பிள்ளையா? பேரப்பிள்ளையா? என்னால் கடத்தப்பட்ட என் முன்னோர்களின் நிறமுகூர்த்தங்களா? நான் ஒரு கடத்தி. உலகத்தில் தோன்றும் ஒவ்வொரு உயிரும் ஒரு கடத்தி. அதைவிட இயற்கைக்கு நாம் எதுவும் இல்லை. என் மகன் நானாக முடியுமா? இந்த உலகிற்கு என்னை அடையாளம் காட்டியது என்ன? நான் என்கின்ற என் பிண்டம் அல்லவா? அந்தப் பிண்டம் உருவாக்கிய வின்பம் அல்லவா. அது மறையப் போகிறது. அழியப் போகிறது. அது அழிந்த பின் நானும் அழிந்து விடுவேன். பிண்டமும் பிராணனும் விண்டு போகும் போது இந்த உலகில் இருந்த நானும் இல்லாது போய் விடுவேன். என் நினைவுகளும் சில காலத்தில் இல்லாது போய்விடும்.

பிறந்தவன் இறந்தாக வேண்டும். பின்பேன் இந்தக் கலக்கம்? அறியாமை… அவா… பிண்டமாகப் பிறந்து, பிண்டங்களைச் சுற்றி வாழ்ந்துவிட்ட பிணைப்பு. புரிந்தாலும் மீண்டும் மீண்டும் அறியாமையில் புரளும் சோகம். மாற்று மனிதனின் இறப்பைச் சடங்காகப் பார்க்கும் மனிதன் தனது சுற்றத்தின் அல்லது தனது இறப்பை மட்டும் சந்திக்கத் தயங்குகிறான். பிண்டம் அழிவது மட்டும் நிச்சயமற்ற இந்த உலகத்தில் நிச்சயமான ஒன்று. அதை எதிர்கொள்ளத் துணிவை வளர்த்துக் கொள்ள வேண்டும். துணிந்த பின் அந்தச் சுமையை மறந்து, இருக்கும் வரை என்ன செய்யலாம் என்பதை யோசிக்க வேண்டும். நாம் அவாக் கொண்டதை நடைமுறைப்படுத்த வேண்டும். ஓயாது ஒளியாது உழைக்க வேண்டும். கண்ணன் கீதையில் சொன்னது போல் எந்தப் பலனும் எதிர்பாராது உழைக்க வேண்டும். யாரும் பாராட்ட வேண்டும் என்கின்ற எண்ணம் துளியும் இல்லாது உழைக்க வேண்டும். என்னால் முடியுமா?

பாராட்டு, கௌரவம், புகழ்ச்சி, முகமன் போன்றவை பிண்டங்களிடம் இருந்து, பிண்டங்கள் எதிர்பார்க்கும் பொய்மையாகும். பிண்டம் அழிகின்ற போது அதைப் பற்றிய பேச்சும் ஒளிந்து போகிறது. பிண்டம் அழிந்த பின்னும் போற்றப்படுவோர் பெரும் பாக்கியசாலிகள். நாம்…? புகழ்ச்சியில் மயங்கி… இகழ்ச்சியில் மருண்டு, எதையும் செய்யாது… கோடி கோடியான அற்ப புழுக்களில் ஒருவராக…? பாரதி நினைத்ததிற்கு எதிராக…

உலகிற்காய் ஊனையுருக்கிய தியாகச்சுடர்கள் உண்டு. அதற்காகத் தங்கள் பிண்டத்தை முழுமையாக அர்ப்பணித்த ஆத்மாக்களும் உண்டு. பிண்டம் போன பின்பும் அவர்கள் புகழ் என்றும் நிலைத்தது என்பதும் உண்மை.

'சாதிக்கும் மனிதர்கள் நேசத்தைப் பெறுகிறார்கள்' அனேக மனிதர்கள் தமது வாழ்வில் இலகுவாக மறப்பதும் இதுவாகவே இருக்கிறது. சும்மாய் இருந்துவிட்டுச் சுடுகாடு போவதே மானிடரின் வழமையாகிவிட்டது. நானும் அப்படித்தான். என்ன செய்தேன்? பிறந்தோம், வளர்ந்தோம், மணந்தோம், புணர்ந்தோம், விளைந்தோம், இறந்தோம் என்பதான வாழ்க்கை. எல்லா ஜீவராசிகளும் இயற்கைக்குப் பணிந்து செய்திடும் செயல். நான் மனிதன். பிண்டம் அழிந்தாலும் நிலைக்க வேண்டிய மனிதன். எனக்கென்று சில விஷேடங்கள் இருக்கின்றன. வருங்காலச் சந்ததிக்கு எனது பங்களிப்பும் தேவைப்படுகிறது. அதற்கு நான் உழைக்க வேண்டும். ஓயாது ஒளியாது உழைக்க வேண்டும்.

★

நான் யோசனையில் இருந்து விடுபட்டு நிமிர்ந்து பார்த்த போது அந்தத் தாதி என்னைப் பார்த்த வண்ணம் நின்றாள். நான் அதிகாலையில் எழுந்து உட்கார்ந்த வண்ணம், குளிர் நாடுகளில் பாவிக்கப்படும் தடித்த போர்வையால் என்னைப் போர்த்திக் கொண்டு சிந்தனையில் மூழ்கி இருந்தது அவளுக்கு ஆச்சரியத்தைத் தந்திருக்க வேண்டும். அவள் தொடர்ந்தும் என்னை அப்படியே சிலகணங்கள் பார்த்தாள். பின்பு சிரித்த வண்ணம் என்னைப் பார்த்து,

‘என்ன இவ்வளவு கெதியா எழும்பீட்டியள்… நித்திரை வரேல்லயா?’ என்றாள்.

‘இல்லை. கொஞ்சம் எழுதலாமெண்டு நினைக்கிறன்’

‘இப்ப வேண்டாம். விடிஞ்ச பிறகு எழுதுங்க. இப்ப நீங்கள் லையிற் போட்டா அது மற்றவைக்கும் இடைஞ்சலாக இருக்கும்’ என்றாள்.

அத்தோடு அவள் அருகே வந்து படுப்பதற்கு உதவி செய்தாள். பின்பு தலைமாட்டில் இருந்த விளக்கை அணைத்துவிட்டு வெளியே சென்றாள். மூனாவும் இப்படித்தான் செய்வாள். அழகாய், நளினமாய், அன்பாய்… என்றும் அவளை என்னால் மறக்க முடியாது. கவலைகள் மறந்து போகலாம். நினைவுகள் என்றும் கல்வெட்டுக்களாக. என்னுள் மீண்டும் ஏக்கம் பிறந்தது. நான் பெருமூச்சு விட்டபடி படுத்தேன்.

★

அன்று காலைச் சாப்பாடு முடிந்ததும் குமரேசனோடு அவனின் அறைக்குச் சென்றேன். அவனிடம் சென்றால் பழைய ஞாபகங்களை மீட்கலாம் என்கின்ற காலக் கடத்தல். அது பிண்டத்தின் பிறவிக்குணம். அவனைப் பார்த்து,

‘என்ன…? எப்பிடி இருக்குது இண்டைக்கு? ‘ என்றேன்.

‘எனக்குப் பருவாயில்லை… உனக்குக் கால் எப்பிடி?’ என்றான்.

‘கால் அதேமாதிரிதான். பால் குடிச்சு எழும்பி ஓடுற வயசா? வண்டில் தேவைப்படுகுது. கொஞ்சத் தூரத்துக்கு மேல நடக்கேலாது’ என்றேன்.

‘என்ன செய்கிறது… உன்னிட்ட அந்தக் காலத்தில காலுக்க பந்து கிடைச்சாத் தனியாக் கொண்டே கோலடிப்பாய். இப்ப இப்பிடியாகீட்டுது’ என்றான்.

என்னுள் அந்தக் கனவு விரிந்தது. காலிற்குள் பந்து அகப்பட்டால் நான் கோயில் வீதியில் ஓடும் ஓட்டமென்ன? என்னை மடக்க அவர்கள் படும்பாடு என்ன? வேலியோரம் நின்று ‘புத்திரன் கமோன் புத்திரன் கமோன்’ என்னும் கூட்டமென்ன. எப்படியெல்லாம் இருந்தோம். இன்று ஏக்கங்களோடு இப்படி இருக்கிறோம். அதுவும் வாழ்வின் ஒரு பகுதி. இதுவும் வாழ்வின் ஒரு பகுதியாக.
பழைய ஞாபகங்கள்… இளமை நிகழ்வுகள், நினைவுகள், மனிதனின் நிழலாக… அவை தன்னுள் மூழ்கு மூழ்கு என்று ஆர்ப்பரிக்க.

‘என்ன புத்திரன். என்ன யோசினை?’ என்று குமரேசன் என்னை உசுப்பினான்.

‘எல்லாம் அந்தக்கால விளையாட்டுக்கள் பற்றித்தான்’ என்றேன்.

‘இப்பிடித்தான் நானும். அனேகமான பொழுது பழைய நினைவிலதான் போகுது. பழைய நினைவைவிடச் சந்தோஷமானது வேறென்ன இருக்குது?’ என்றான் அவன்.

‘இப்ப இருக்கிற இயலாமையை அப்பிடி மறக்கப் பாக்கிறம்’ என்றேன்.

‘ம்… உண்மை. எனக்குச் சிலவேளை இந்த இயலாமையை ஒத்துக் கொள்ள முடியாமல் இருக்குது. நானா இப்பிடியாகீட்டன் எண்ட கேள்வி வருகுது. என்ர முகத்தில இருக்கிற சுருக்கங்களைப் பார்க்கேக்க சிலவேளை அழுகையே வந்திடும் போல இருக்கு. இது தப்பெண்டு விளங்கினாலும் கவலை அதையும் மீறி அரிக்குது. நிண்டாப் போல சா வராட்டி கிழடு வத்தாமல் சா வராது’ என்றான் குமரேசன்.

‘தவிர்க்க முடியாததை எண்ணிக் குழம்பிறதிலும், இருக்கேக்க என்ன செய்யலாம் எண்டு யோசிக்கிறது தான் புத்தி’ என்றேன்.

‘கிழடாகாமலே இருக்கும் வரம் கிடைத்தால்?’ என்றான் குமரேசன். வாழ்க்கை மீது அடங்காத மோகம் அவனுக்கு.

‘உலகம் தாங்காதப்பா. வாழ்க்கைக்கும் அது தாண்டிப் போகும் நாட்களுக்கும் அர்த்தம் இருக்காது. இது விபரீதமான ஆசை. உனக்கே ஆயிரம் பிள்ளை பிறக்கும். அதுகளுக்கும் ஆயிரம் ஆயிரமாய்ப் பிறக்கும். மனிசரைத் தவிர உலகத்தில் வேறொண்டும் இருக்காது. மனிசனை மனிசன் தின்னும் காலம் வரும். பூமி தாங்காது அண்டத்தில் தொலைந்து போகும். இயற்கை வட்டம் மாறாமல் இருக்கோணும். அது மாறினா உலகத்தின்ர இருப்பே தளம்பீடும்’ என்றேன்.

‘முதுமை எண்டா என்ன? அது மனசைப் பொறுத்த விஷயமா உடலைப் பொறுத்த விஷயமா?’ என்றான் புத்திரன்.

‘நல்ல கேள்வி. ஆனா, நான் போதிதர்மனோ இல்லாட்டிப் பேராசிரியரோ இல்லை. எனக்கு விடை தெரியாது. சிலர் மனதில் எப்பவும் முதுமை அடையமாட்டினம். சிலர் எப்பவோ மனதில கிழண்டிப்போவினம். இயற்கை வேற தன்ர பாட்டில வேலை செய்யும். மனசைப் பொறுத்து, அதில் ஏற்ற இறக்கம் இருக்கலாம். மனசிற்கும் உடலின்ர மூப்பிற்கும் சம்பந்தம் இருக்கலாம். அதற்காக மனதே உடலாகவும் உடலே மனமாகவும் மாற முடியாது. மனது கிளண்டினதாய் யாரையும் இங்க கொண்டு வந்து சேர்க்கமாட்டினம்’ என்றேன்.

‘இந்த உத்தரிப்புக்கு எப்ப முடிவு வருமோ?’ என்றான் குமரேசன்.

‘வரும். இறப்பு எண்ட முடிவு. கூட்டிற்குள் சிறையிருக்கும் ஆத்மாவிற்கு விடுதலை.’

‘சாவென்பதுதான் முடிவு எண்டுறியா?’ என்றான் குமரேசன்.

‘அதில என்ன சந்தேகம்? மறு பிறப்பின் தொடக்கமா? மனிசருக்கு இருக்கிற கற்பனா சக்தி பொய் இல்லை என்றால் மறுபிறப்பு உண்மையாக இருக்கலாம். சாவென்பது முடிவு அல்ல… விடுதலை எண்டு எண்ண வேணும்.’

‘ஏக்கத்தோட கூடின அவஸ்தையான விடுதலை’ என்றான் குமரேசன்.

‘அது அவரவர் பற்றைப் பொறுத்தது. பற்றற்றவனுக்கு அது நிச்சயம் நல்ல விடுதலை’ என்றேன். பற்று என்னிடம் இருக்கிறதா? இல்லையா? குமரேசனுக்கு அலுப்படித்திருக்க வேண்டும்,

‘தேவையில்லாத குழப்பம் இது எண்டு நினைக்கிறன்’

‘தேவையில்லாதது எண்டில்லை. இறப்பு மனித வாழ்க்கையின்ர மிகவும் முக்கியமான இறுதிப் பகுதி’ என்றேன்.

‘சரி உண்மை எண்டே வைச்சுக் கொள்ளுவம். அது வாற நேரம் வரட்டன். நாங்களேன் வம்பளப்பான்?’ என்றான்.

‘நான் அப்பிடி நினைக்கிறேல்ல குமரேசன். மனித வாழ்வை நாங்கள் ஒவ்வொரு கட்டம் கட்டமாக அனுபவித்து வந்திருக்கிறம். இறப்பு எண்டதை அனுபவிக்கேல்லை. அனுபவிச்சாப் பிறகு அதைப்பற்றிக் கதைக்க நாங்கள் இருக்கமாட்டம். அதைப் பற்றி இப்ப கதைக்கிறதுக்குப் பயப்பிட ஒண்டும் இல்லை எண்டு நான் நினைக்கிறன்’ என்றேன்.

‘கலோ.’

எங்கள் கவனம் திடீரெனச் சிதறியது. இரு தாதிகள் எங்களை நோக்கி வந்தார்கள். எங்களுக்குப் பக்கத்தில் வந்ததும் அவர்களில் ஒருத்தி,

‘நீங்கள் குளிக்க நாங்கள் உதவி செய்யிறம்’ என்று கூறிவிட்டு, என்னைத் தள்ளிய வண்ணம் குளிக்கும் அறைக்குச் சென்றாள். பின்பு எனது அறைக்குச் சென்று குளித்த பின்பு மாற்றுவதற்கான உடுப்புகளை எடுத்து வந்தாள். நான் நினைத்த போதெல்லாம் இங்கே குளிக்க முடியாது. அவர்களுக்கு நேரம் கிடைக்கும் போது நாங்கள் குளிக்க வேண்டும். முதியோர்களுக்குச் செய்யும் சேவையும் உற்பத்தியாகப் பார்க்கப்படும் பொருளாதாரம்.

சலவை செய்யப்பட்ட துவாய்கள் குளியல் அறையில் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. அந்தத் தாதி திரும்பி வந்தாள். நான் பார்க்கவே குளியல் தொட்டியைக் கழுவிவிட்டு வெதுவெதுப்பான நீரை அதற்குள் நிரப்பினாள். தொட்டியிற் குளிப்பாட்டுவது அவளுக்குப் பழக்கமாகிவிட்ட ஒன்று. நின்று குளித்துப் பழக்கப்பட்டவர்கள் நாங்கள். அசுத்தமான நீரில் அலம்பி எழும்புவதான அரிகண்டம் பிடிக்காது. அரிகண்டம் பிடிக்காவிட்டாலும் அதிக நேரம் நிற்க முடிவதில்லை. அரைகுறைக் குளிப்பில் விருப்பம் இருப்பதில்லை.

அந்தத் தாதி வெதுவெதுப்பான நீரைத் திறந்துவிட்டு அதிற் கை வைத்து அளைந்தாள். அவள் இப்படிச் செய்வது எனக்கு மூனாவை ஞாபகப்படுத்தியது. அவளுக்கும் தொட்டியில் குளிப்பதுதான் பிடிக்கும். அவள் குளிக்கத் தொடங்கினாள் நான் அவளிடம் இருந்து எப்படித் தப்பிப்பது என்று யோசிப்பேன். அவள் என்னை விடமாட்டாள். வெந்நீரை நிறைத்துவிட்டு என்னையும் வருமாறு கூப்பிடுவாள். நான் எங்காவது போக்குக் காட்டினால் விறுவிறுவென வந்து கையைப் பிடித்து இழுத்துச் செல்வாள். பின்பு என்னையும் சோப்பு நுரைக்குள் அமுக்கித் தானும் உள்ளே படுத்துக் கொள்வாள். அவள் என்னோடு குளிக்கத் தொடங்கிவிட்டால் மிகவும் குசியாகிவிடுவாள். குளிப்பதாய் எண்ணித்தான் இருவரும் தொடங்குவோம். பின்பு அந்த நீரை திடீரென எனக்குத் தலை தொடக்கம் உடல் முழுவதும் விளையாட்டாக அடிப்பாள். நானும் அவளுக்குத் திருப்பி அடிப்பேன். இருவரும் முழுமையாக நனைந்து கொள்ளுவோம். சிரித்துச் சிரித்து விஷமத்தோடு நனைந்து கொள்ளுவோம். நாங்கள் இப்படிக் குளிக்கும் போது ஒரு மணித்தியாலத்திற்கு மேலே செலவு செய்வோம். இன்பம் உள்ள இடத்தில் பொழுது கழிவதும் புரிவதில்லை. அந்த இன்பம் என்றும் நிலையானது என்கின்ற என் மனக்கோட்டை சகதி நிலத்திற் கட்டப்பட்டது அப்போது எனக்குப் புரியவில்லை. மூனாவா அப்படி மாறினாள் என்பது எனக்கு இப்போதும் விளங்கவில்லை. அதை எண்ணினால் நெஞ்சை இறுக்கும் வேதனை பீரிடும். 'நினைவுகள் அழிக்கப்பட முடியாதவை. கவலைகள் மறக்கப்பட வேண்டியவை' என்பதை மறுபடி ஞாபகப்படுத்தினேன்.

'கலோ… கலோ?'
'யா?'
'ஏதாவது யோசினையோ?'
'யா'
'என்ன யோசின அப்பிடி?'
'என்ன யோசிக்கமுடியும். கடந்தகாலம் பற்றித்தான்'
'நீங்கள் சிரிக்கிறியள்? எனக்கும் சொன்னால் நானும் சிரிப்பன்' என்றாள்.
'அப்பிடியா? நான் என்ர மனிசியோட குளிக்கிறதைப் பற்றி யோசிச்சன்'
'வாவ் நல்ல இன்றஸ்ரான விசயம். எப்பிடிக் குளிப்பியள்?'
'ஆபாசமாய் இருக்கும்'
'பருவாயில்லைப் புத்திரன். நாங்கள் பாக்காததா சொல்லுங்கோ' என்றாள் அவள்.

அவள் கேட்டதில் எனக்கு வியப்பு இருக்கவில்லை. மனித வாழ்வில் அன்றாடம் நடப்பது. அதை அறிந்தும், பகிர்ந்தும் கொள்ளும் நாகரிகம் கொண்டவர்கள். இதையெல்லாம் அறிவதில் இங்கு யாரும் வெட்கப்படுவது இல்லை. எங்கள் கலாச்சாரம் வேறுதான். எல்லாம் இருட்டில் என்கின்ற ஒரு தப்பான விளக்கம். இதில் பண்பாட்டைவிட பரிதாபம் நிறைய இருக்கிறது. கட்டிய கணவனிடமே வெளிப்படையாகக் கதைக்காத, காட்டாத, பார்க்காத, பேசாத இயந்திர இயக்கமாக்கப்படும் தாம்பத்திய வாழ்க்கை.

மருத்துவரைக் கண்டு கூட அஞ்சும் மனநிலையைப் பல வெளிநாட்டவரிடம் காணலாம். அதற்காக அவர்கள் பெண் மருத்துவர்கள் தேடி அலைவார்கள். இவர்கள் புரிந்துணர்வு வேறு விதமாகும். பாலுறவைப் பற்றிய அறிவைப் பள்ளியிலேயே புகட்டுகிறார்கள். அதிலே பாலியல் நோய்கள் பரவாது எப்படித் தடுப்பது என்பதைப் பயிற்றுவிக்கிறார்கள். பதினாறு வயதிற் காதலன் அல்லது காதலி இல்லாவிட்டால் 'இந்தப் பிள்ளைக்கு என்ன குறையோ?' எனக் கவலை கொள்கிறார்கள்.

'கலோ! அடிக்கடி யோசிக்காம எப்பிடிக் குளிப்பியள் எண்டு விஷயத்தைச் சொல்லுங்கோ' என்றாள் அவள்.
'நாங்க இரண்டு பேரும் ஒரு தொட்டியில ஒரே நேரத்தில குளிப்பம்'
'அதை இங்க பலரும் செய்வினம். நல்லா இருந்திச்சா?'
'ம்… நீ உன்ர காதலனோட குளிக்கிறேல்லயா?' நான் அவளைக் கேட்டேன்.
'எங்களிட்ட தொட்டி இல்லை. அவனுக்குத் தண்ணியைக் கண்டால் பயம்' என்றாள்.

வெதுவெதுப்பான நீர், தொட்டியை நிறைத்தது. அவள் குழாயை நிறுத்திவிட்டு என்னைப் பார்த்தாள். நான் மேற்சட்டையைக் கழற்றிவிட்டுக் காத்திருந்தேன். அவள் அருகே வந்து நான் எழுந்து நிற்பதற்குச் சிரித்த வண்ணமே உதவி செய்தாள். பின்பு எனது காற்சட்டையை உருவி அம்மாவின் முன்பு அம்மணமாக நிற்கும் குழந்தையாக என்னை மாற்றினாள். அம்மாவின் முன்பு எனக்கு வெட்கம் கூச்சம் எதுவும் கிடையாது. முதன் முதல் இலங்கை மணம் மாறாத ஒரு தமிழர் இதைப் பார்த்திருந்தால் நெளிந்திருப்பார். நித்தமும் பார்த்துப் பழகிவிட்ட எங்களுக்கு இதில் எந்த விசித்திரமும் தெரியவில்லை. நான் அவள் உதவியுடனேயே குளியல் தொட்டிக்குள் இறங்கினேன். அவள் எனக்கு ஊத்தை உரஞ்சி விட்டாள். அவள் அம்மாவாகிக் குழந்தையைத் தாய் எப்படிச் சுத்தம் செய்வாளோ அப்படிச் சுத்தம் செய்தாள். ஒரு கறுப்பனை இப்படிச் சுத்தம் செய்யவேண்டி வந்துவிட்டதே என்கின்ற முகச்சுளிப்பு அவளிடம் இல்லை. அந்த வெறுப்புச் சிலரிடம் இருப்பதுண்டு. இவள் அதை வென்ற மனிதநேயம் உடையவளாய் உயர்ந்தாள். அதனால் நான் மகிழ்ந்தேன். அவள் என்னுடலை நன்கு தேய்த்துக் கழுவ உதவி செய்தாள். எனது நிர்வாண உடலைத் துவட்டி ஆடை அணிவித்தாள். உடலும் மனதும் ஒருங்கே தூய்மை பெற்ற உணர்வு. அத்தால் பொங்கி வந்த மகிழ்வு. புறத் தூய்மை அகத்திற்கு இன்பம் தருகிறது. அகமே பூரண சுத்தமாய் இருந்தால் எவ்வளவு இன்பமாய் இருக்கும்? கேள்வி பிறந்தது. மனிதனால் அது மட்டும் முடிவதில்லை. அகத்தைச் சுத்தமாக வைத்திருக்க ஞானிகளாற்கூட முடிவதில்லை. முழுமையாக முடிவதில்லை. தலைகீழாக நின்றாலும் முற்றுப் பெறுவதில்லை. எங்கோ சிறு குழப்பம் எப்படியோ இருந்துவிடுகிறது. எதிலோ சிறு பற்று ஒட்டிக்கொண்டு இருக்கும். மறைத்து ஒளித்து மனித இச்சை தீர்க்கச் சொல்லும். பின்பு பால் குடித்த பூனையாக பௌவியம் காக்கும். மனிதர்கள் வேதனையில் உழல்வதற்கு உண்மைக்கு அஞ்சிப் போடும் வேசங்களே முதற் காரணம். எப்போதும் தனது பிடியை விட விரும்பாதது மற்றைய காரணம்.

'கலோ என்ன யோசிக்கிறியள்?' என்றாள் அவள்.

'ஆத்ம சுத்தம் உள்ள மனிதர்கள் உண்டா எண்டு யோசிக்கிறன். அவர்களால தானே பரமாத்மாவை அடைய முடியும். பரமாத்மா என்று ஏதாவது உண்டா? யாராவது கண்டதுண்டா? மனிதன் காண முடியாத வசனங்களும், எழுத்துக்களும் மட்டும்தானா அது? அந்த மாயத்தை உருவாக்குவதும், அந்த மாயத்தில் மயங்குவது தான் அறிவார்த்தமா? அல்லது மனித அறிவின் தப்பிதமா?'

'தத்துவமாக யோசிக்கிறியள்'

'அதுவும் வாழ்க்கையின்ர ஒரு பகுதிதானே?'

'உண்மை. ஆனால் ஆத்ம சுத்தமான மனிதர்கள் இந்த உலகத்தில இருப்பினம் எண்டு நினைக்கிறியளா?' என்றாள் அவள்.

'நுகர்வில் மாட்டிக் கொண்ட மனித ஜென்மங்கள். இருந்தும் அதிசயங்கள் நடக்கலாம். பலருக்கும் ஆத்ம சுத்தியோடு இருக்கவேண்டும் எண்டு விருப்பம். ஆனால் பலரால் அப்படி இருக்க முடியிறேல்லை. அது மிகவும் கடினமான விஷயம். நாங்கள் அற்ப மனிசர்கள் தானே? ஆசைகளுக்கு உட்பட்டவர்கள்தானே? இதையா நீ விடையாக எதிர்பார்த்தாய்?'

'அது சரி, நீங்க என்ன மதம்?' என்றாள் அவள்.

'ஆதியும் அந்தமும் இல்லாத மதம்'

'அது என்ன மதம்?' என்றாள் அவள்.

குளித்து முடிந்ததும் அவள் என்னைத் தள்ளிக் கொண்டு கோலுக்கு வந்தாள். நான் அங்கே செல்லவும் குமரேசன் அங்கே வரவும் சரியாக இருந்தது.

'என்ன புத்திரா குளிச்சிட்டியா?' என்றான்.

'என்ன கேள்வியிது. இங்க குளிக்க விட்டாத்தானே?'

'என்ன சொல்லுறா?'

'அவை குளிப்பாட்டுகினம் எண்டுறன்'

'உனக்கு இன்னும் குசும்பு போகேல்லை' என்றான் குமரேசன்.

‘அதைவிடு. இங்க இருக்கிற ‘வெல்பெயர்’ சிஸ்ரம் உச்சம்தான். எங்கட நாட்டில இப்பிடிக் கிழடுகளா இருந்தா எவ்வளவு கஸ்ரப்படோணும்? அந்தப் பிரச்சின இவைக்கு இல்லை.’

‘உண்மைதான்… ஆனா, எங்களிட்ட இருந்த வெட்கத்தைப் பிடுங்கி ஏறிஞ்சிட்டினம். பாச பந்தமும் விலகி நிற்குது’ என்றான் குமரேசன்.

‘தேவையில்லாத இடத்தில தேவையில்லாத நேரத்தில அதுக்கு என்ன தேவை எண்டுறன்? பாச பந்தம்… பரிதாபம்தான்.’

‘இலங்கையா இருந்தா இப்பிடி ஒருத்தி செய்வாளே? ‘ என்றான் அவன்.

‘ஏன் இல்ல…? சில நல்ல நேர்சுகள் இதையெல்லாம் செய்வினம். இப்ப காசத் தாராளமாகக் குடுத்தாலும் சிலர் செய்வினம் எண்டு கேள்வி.’

‘அதுவும் உண்மைதான். படுக்கையில கிடக்க மலம்வாரிக் கொட்டின சனங்களும் இருக்குதுகள். அதை காசுக்காகச் செய்யிற சனமும் இருக்குதுகள். இங்கையும் காசுக்கான தொழில்தானே இது?’ என்றான் அவன்.

‘வேற தொழில் செய்யிற சுதந்திரம் இருந்தும் இந்தத் தொழிலைச் செய்ய வாறதுக்குப் போற்ற வேணும். ஒரு வகையில இது தியாகம்தான். காசு கிடைச்சாலும் மாற்றானின் மலத்தை அளைவது ஞானிகளின் பண்பு.’

‘ஊரில இருந்த இன்பங்கள் இங்க இல்லை எண்ட மாதிரி என்னவோ என்ர மனசில ஒரே ஏக்கமா இருக்குது’ என்றான் அவன்.

‘எனக்கும் அப்பிடித்தான். ஆனா, என்ன செய்ய முடியும்? அந்தக் காலத்தில ஆச்சி பல்லு விழுந்த கிழவியா இருந்தா. கறுத்த தோல் பாம்புச் செட்டைமாதிரிச் சுருங்கிப் போய் இருந்திச்சுது. தோடு இழுத்துக் காது தோள் மூட்டைத் தட்டும். கண்ணைக் கூசிக் கூசிப் பார்ப்பா. நானும் என்ர ஒண்டுவிட்ட தம்பியும் அவவிட்ட போவம். எங்களைக் கண்டா அவவுக்கிருக்கிற புழுகப் பார்க்கோணும். அந்தச் சுருங்கின முகம் காலையில பூக்கும் செவ்வரத்தம் பூ போல விரிஞ்சு, கண்ணில ஆனந்த கதிராக ஒளிவீசும். எங்களுக்காக உடனடியாக மாக்குழைச்சு தேங்காய்ப்பூ அள்ளிப்போட்டுச் சுடச்சுடப் பிட்டு அவிப்பா. அந்தப் பிட்டை பழைய மீன் குழம்போடை பிசைஞ்சு தருவா. அந்த ருசிய நான் அவவுக்குப் பிறகு யாரிட்டையும் காணேல்லை. அது வாழ்க்கை. அதில நிறைய இன்பம் இருந்திச்சுது. உரிமை இருந்திச்சுது. இது என்ன வாழ்க்கை? பேரனும் பக்கத்தில இல்லை. பேத்தியும் பக்கத்தில இல்லை. கேட்பாரும் இல்லை. பார்ப்பாரும் இல்லை. ஏன் இல்லை… இஞ்சைதானே சுத்திச் சுத்தி உதவி செய்யிறாளவை எண்டு நினைக்கலாம். அவளவை தங்கட கடமையைச் செய்யிறாளவை. சொந்தப் பிள்ளை தகப்பனைத் தடவிக் குடுக்கிறதும், வேற யாரோ எவரோ பணத்துக்காக தடவுறதும் ஒண்டாகுமா? இந்த நாடு அப்பிடி இருக்குது. இவைக்கும் அதில பிரச்சனை இல்லையெண்டு சொல்ல முடியாது. நாங்க இங்க இருந்தா இதைச் சமாளிக்கத்தான் வேணும். அதே நேரம் இக்கரைக்கு அக்கரைப் பச்சை எண்டுற உண்மையையும் நாங்கள் மறக்கக் கூடாது’ என்றேன்.

‘உண்மைதான். ஆனா, இது மோசமானது. பாசம் பந்தம் எண்டதுக்கு என்ன அர்த்தம் எண்டுறது முழுமையாக இவைக்குப் புரியேல்லை எண்டு நினைக்கிறன். நாங்கள் எப்பிடிப் பாட்டனோடு, பாட்டியோடு பழகியிருப்பம். எங்களை வளர்த்து ஆளாக்கினதே அவைதானே? இங்க எல்லாம் தாய் தகப்பன்தான். அது முடிஞ்சா யாரோ எவரோ உதவி செய்யினம். இவை உடம்பைக் கவனிக்கலாம். மனதைக் கவனிக்க முடியுமோ?’ என்றான் குமரேசன். ‘மனதை நாங்கள்தான் கவனிக்கோணும்’ என்று முடித்தேன்.

‘எப்பிடி முடியும்? எல்லாக் கவலையும் அழுத்திற இந்தக் காலத்தில எப்பிடி முடியும்?’ என்று கேட்டான்.

‘அப்பிடி நினைக்காதை. ஏன் எல்லாக் கவலையையும் கழட்டி ஏறியிற காலம் எண்டு நினைக்கக்கூடாது. அப்பிடி நினைச்சாச் சந்தோசமாக இருக்கலாம்’ என்றேன்.

‘என்னால அப்பிடி முடியேல்லை’ என்றான் குமரேசன்.

நாங்கள் சிறிது நேரம் கதைத்த வண்ணம் இருந்தோம். நேரம் நிமிடங்களாக, நிமிடங்களின் சேர்ப்பில் மணிகளாக, மனித அளவை நிஜமாக்குவது போல நழுவியது. அது அதே வேகத்தில் மீளாத திசை நோக்கி மறைந்து போனது. அப்படி நேரம் மறைந்து போவதின் மாயம்தான் எங்கள் வரம். இருந்தும் எழுதாமல் அது என்னை விட்டு நழுவுவது ஏக்கமாக விரிகிறது. எனது மணிக்கட்டில் மனித அளவு துடித்துக் கொண்டு இருந்தாலும் அதைப் பார்க்க அக்கறை அற்று இருந்தேன். சிலவேளைகளில் இப்படித்தான் எதுவும் செய்யாமல் இருக்கத் தோன்றுகிறது. எதுவும் செய்யாமல் இருக்கத் தோன்றினாலும் எனது பணியைச் செய்யவில்லை என்கின்ற குற்ற உணர்வு பூதமாய் எழுகிறது. சோம்பேறி என்கின்றது. சுயநலவாதி என்கின்றது. மனிதர்களிடம் இருந்து தப்பினாலும் இந்த மனச்சாட்சியிடம் இருந்து தப்ப முடியாது என்பது புரிகிறது.

பிண்டம் அசையாது இருந்தாலும் மனம் விண்ணில் பறக்கிறது. வித்தை காட்டுகிறது. கடமை என்கிறது. சிலவேளை பேராசைப் படுகிறது. ஓய்வின்றி ஓலமிடுகிறது. உடல் ஓய்வின்றி வாழாது. தனக்கு ஓய்வு வேண்டுமென அது அடம்பிடிக்கும். இரவும், தூக்கமும் அதற்குத் துணை போகும். மனது அப்படியல்ல. உடல் ஓய்வெடுக்கும் போதும் மனது ஓய்வெடுப்பதில்லை. அது எதையாவது போட்டுக் குழப்பும். தான் சும்மாய் இருப்பதாய் உடல் சயனிக்க மனது ஓய்ந்துவிடுவதில்லை. நீ அதைப் பிழையாகச் செய்தாய் எனக் குற்றம்சாட்டும். காட்சி விரியும். இதைச் சரியாய் செய்தாயெனப் பாராட்டு நிகழ்வு நடக்கும். இப்படி நடந்தால் நன்றாய் இருக்கலாமென அறிவுரை கூறும். மனதின் கருத்தைக் கேட்பது நல்லதாய் இருக்கலாம். நீதியை நேசிக்கும் மனது எப்போதும் நல்வழியைத்தான் காட்டும்.

நீதிகூட அவரவரைப் பொறுத்தது. என் நீதி அவனுக்கு அநீதி ஆகலாம். அவன் நீதி எனக்கு அநீதி ஆகலாம். அது அவரவர் மனதின் விம்பத்தைப் பிரதிபலிக்கும். என்னுடைய மனதை எனக்கு நண்பனாக வைத்துக் கொள்ள முயல்கிறேன். என்றாலும் அவன் சொல்வதை எல்லாம் கேட்க முடியாது. மனம் என்கின்ற என் நண்பன் என்னைச் சன்னியாசி ஆகும்படி எனக்குப் புத்தி கூறியிருக்கிறான். என்னால் அது முடிந்ததில்லை. அதை நான் ஏற்றதில்லை.

எனது ஆசைகளிடம் அவன் தோற்றது உண்டு. தோற்றாலும் அவன் மீண்டும் என்னிடம் நீதி கேட்பான். போராட்டம் தொடரும். தொடர்கிறது. அவனுக்கு எதிராக நான் நடக்க எண்ணியதில்லை. என் ஆசைகள் சில அவனுக்கு மதிப்பளிப்பது இல்லை.

'என்ன திரும்ப நீ அமைதியாகீட்டா? ' என்றான் குமரேசன்.

'சும்மா யோசினை' என்றேன்.

'என்னிட்டச் சொல்லக் கூடாதே? ' என்றான்.

'சொன்னா நீ நக்கலடிப்பா'

'ச்… நான் அப்பிடிச் செய்யமாட்டன்… நீ சொல்லு' என்று அவசரப்படுத்தினான்.

'ம்… மனசை நண்பனாக்கி அவனிட்டப் புத்திமதி கேட்கலாமெண்டு சிந்திச்சன்' என்றேன்.

'என்னவோ நீ இப்ப கதைக்கிறது ஒண்டும் எனக்கு விளங்கேல்லை. மனசை நண்பனாக்கிறதெண்டா என்ர நட்பிலை உனக்கு நம்பிக்கை இல்லாமல் போச்சுதே? இல்லாட்டி மனசுதான் நம்பிக்கையான நண்பனா இருக்குமோ? அது சமுதாயத்தால உனக்குள் புதைக்கப்பட்ட குப்பை இல்லையா?' என்றான்.

'அதில்லையடா… மனசெண்ட நண்பன் நாங்கள் சும்மா இருந்தாலும் எங்களுக்குக் காவலா இருந்து ஆயிரமாயிரம் விஷயங்களைச் சொல்லித் தருகுது. நண்பர்கள் பிரிஞ்சு போகலாம். மனசு மனிசனைவிட்டுப் பிரியுமோ? குப்பை தேடாமல் ஞானத்தின்வழி நடக்க நாம் அதைப் பண்படுத்தோணும்'

'பௌவ்வி தின்னுறது பசுவாய் மாறுமா? ' என்று அவன் கேட்டான்.

'மனச் சாட்சிக்கு விரோதமற்ற மனிதனுக்கு, உண்மைக்கு, அமைதிக்கு விசுவாசமானவனுக்கு அது நல்ல நட்பாய் இருக்கும்' என்றேன்.

'நிஜ வாழ்க்கையை வேறை, தத்துவ உலகம் வேறை' என்றான் அவன்.

'தத்துவ உலகத்திற்குள் எங்கள் நிஜ வாழ்க்கை புதைத்து விட்டால் எப்பிடி இருக்கும்?' என்றேன்.

'பைத்தியம் எண்டுவினம்' என்றான் அவன்.

‘உண்மைதான்…’

‘கலோ நீங்கள் கதைக்கிறது வள வளவெண்டு கேட்குது’ கூறிவிட்டு அவள் என்னைப் பார்த்துச் சிரித்தாள். எங்கள் கவனம் திரும்பியது. அந்த முறைப்பாட்டை என்னால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை.

‘புரியாத மொழியெல்லாம் அப்பிடித்தான் கேட்கும்’ என்றேன்.

‘நானும் தமிழ் படிக்கோணும்’ என்றாள் அவள்.

‘நுர்மன் இப்பிடித்தான் சொல்லுகினம். ஆனா, யாரும் படிக்கிறதாத் தெரியேல்லை’ என்றேன்.
அவள் சிரித்தாள்.

‘ஏன் சிரிக்கிறியள்?’ என்றேன் புரியாது.

‘தேவையிருந்தாத்தானே படிப்பினம்?’ என்றாள் அவள்.

‘உண்மைதான். மொழியின்ர தேவை வரேக்கதான் அதை நாங்கள் படிக்கிறம்.
அறிவை வளர்க்கோணும் எண்டு படிக்கிற கூட்டம் ஒரு சிலர்தான். நானும் வேற மொழிகள் படிக்கோணும் எண்டு ஆசைப்பட்டன். என்னால முடியேல்லை. மொழி படிக்கிறதுகூட எல்லாருக்கும் லேசா இருக்கிறேல்லை. சிலருக்கு அது ஒரு கொடை. சிலருக்குச் சுட்டுப் போட்டாலும் ஏறாது. சிலருக்கு மந்தமாக ஏறும். எனக்கும் மொழி மந்தமாகத்தான் ஏறும். கிட்டத்தட்ட ஏறவில்லை என்று வெட்கத்தை விட்டுச் சொல்லலாம். நாங்கள் ‘போல்க்கைஸ்கூல்’ போகாட்டி எங்களால இவ்வளவுகூடக் கதைக்க முடியாது இருந்திருக்கும். அந்த வகையில் நான் புண்ணியம் செய்தவன்தான்’ என்றேன்.

அவள் அதற்குப் பதில் சொல்லவில்லை. கடமையை நினைத்துச் சென்றுவிட்டாள். சிறிது நேரத்தின் பின்பு ‘சாப்பாடு றெடி..’ என்ற வண்ணம் அவள் சாப்பாட்டு வண்டியோடு வந்தாள்.

சாப்பிடக் கூடியவர்களுக்குச் சாப்பாட்டை மேசையில் வைத்தாள். இன்றைய சாப்பாட்டைப் பார்க்க எனக்கு ஒரு மாதிரியாக இருந்தது. இங்கு வாழும் பலருக்குச் சமிபாட்டுப் பிரச்சனை இருப்பதால் சாப்பாட்டை அரைத்துக் கழி போல வைத்திருந்தார்கள். எனக்கு அது துப்பரவாகப் பிடிக்கவில்லை. இந்தச் சாப்பாட்டின் வாசனைகள் சுவைகள் தற்போது பழக்கத்திற்கு வந்துவிட்டாலும் இப்படி அரைத்து வைத்ததைப் பார்க்க அருவெருப்பாக இருந்தது. வயிற்றைப் பிரட்டியது. நான் சிறிதுநேரம் அதையே பார்த்தேன். எது எப்படி இருந்த போதும் பசி வயிற்றைக் கிள்ளத்தான் செய்கிறது. மூனா சமைக்கப் பிந்தினால் நான் தவண்டை அடிப்பேன். அவள் சமைக்கப் பிந்திவிடுமோ என்பதற்காகவே பல நாட்கள் நான் சமைத்ததுண்டு. அவளும் பெண் விடுதலையாற் கிடைத்த வசதி என்று எண்ணியதுண்டு. சுயமாகச் சாப்பிடக் கூடியவர்களுக்குச் சாப்பாட்டை வைத்துவிட்டு வண்டியை ஒரு பக்கமாகக் கொண்டுவந்து விட்டாள் அந்தத் தாதி. அப்போது மற்றொரு தாதியும் அங்கே வந்து சாப்பாடு ஊட்ட வேண்டியவர்களின் சாப்பாட்டை எடுத்துக் கொண்டு அவர்களை நோக்கிச் சென்றாள். அப்படிச் செல்லும் போது நான் சாப்பிடாது இருப்பது அவள் கண்களில் பட்டுவிட்டது.

‘ஏன் சாப்பிடேல்லை, பசியில்லையா?’ என்றாள் அந்தத் தாதி.

‘பசிக்குது’ என்றேன்.

‘அப்பேன் சாப்பிடேல்லை?’ எதிர்க் கேள்வி வந்தது.

‘இப்பிடி அரைச்சு வைச்சா எப்பிடிச் சாப்பிடுகிறது?’ என்று ஆட்சேபித்தேன்.

‘ஓ… அதுதானே நல்லது… கெதியா செமிக்கும்’ அவள் சமாதானம் சொன்னாள்.

‘உண்மைதான். ஆனால் அதைப் பார்க்க வயிற்றைப் பிரட்டுது’ என்றேன்.

‘சரி… ரெஸ்ற் அழகு வேணும் எண்டா உங்களுக்கு அரைக்காத சாப்பாடு நாளையில இருந்து கொண்டுவரச் சொல்லலாம். இண்டைக்கு இதைச் சாப்பிடுங்க’ என்றாள் சமாதானமாக.

‘சரி..’ எனக்கு அதில் திருப்தி ஏற்பட்டது. நான் கண்ணை மூடிக் கொண்டு சாப்பிடத் தொடங்கினேன்.

குமரேசன் எதுவுமே பேசவில்லை. தனக்குள் சிந்தித்த வண்ணம் சாப்பிட்டான். நானும் சிறிது நேரம் அமைதியாகினேன். அந்தத் தாதியர் இருவரும் இயலாத இருவருக்கு உணவு ஊட்டிக் கொண்டு இருந்தனர். அவர்களால் சுயமாகச் சாப்பிட முடியாது. கைகள் செயலிழந்துவிட்டன. குழந்தைப் பருவத்தில் கைகளுக்கு ஒழுங்காகச் செயற்படத் தெரிவதில்லை. கிழப் பருவத்தில் கைகள் ஒழுங்காகச் செயற்படுவதில்லை. இவர்கள் இருவருக்கும் கைகளே செயற்படவில்லை.

இவர்களுக்கு உணவு ஊட்டாவிட்டால் வாயிருந்தும் உண்ண முடியாத பிராணிகளாகிவிடுவார்கள். எங்கள் நாட்டில் இப்படிப்பட்டவர்களில் எத்தனைபேர் உயிரோடு இருப்பார்கள் என்பது கேள்விக்குறியே. இவர்களின் பொருளாதாரம் அங்கவீனர்களைக்கூட ஒழுங்காகப் பராமரிக்க வைக்கிறது. காலம் தவறாது உணவு ஊட்டவைக்கிறது. சுத்தம் செய்து சுகமாக வாழ வைக்கிறது. நான் அவர்களைப் பார்த்தேன். அந்தத் தாதியர் உணவு புகட்டிக் கொண்டு இருந்தாலும் அவர்கள் அதிக அக்கறையோடு உண்பதாகத் தெரியவில்லை. அவர்கள் ஒழுங்காக உணவை உள்ளே இழுத்துக் கொள்ளவில்லை. விருப்பமில்லையா? வாயைச் சுற்றியுள்ள தசைகள் ஒழுங்காக வேலை செய்யவில்லையா? வேதனை என்னை முறித்தது.

அங்கங்கள் பாகம் பாகமாகச் செயலிழந்து போகிறது. பாகம் பாகமாகச் செயலிழக்க அதைப் பார்த்துக் கொண்டு இருப்பது கொடுமையாகிறது. இவர்களுக்குப் பல பாகம் செயற்படவில்லை. கை இயங்கவில்லை. கால்களும் தசையிளந்து, பலமிளந்து குறண்டிவிட்டன. வாயும் நாக்கும் ஒழுங்காக ஒத்துழைப்பதில்லை. உயிர் மாத்திரம் இன்னும் ஒட்டிக் கொண்டு இருக்கிறது. முதுமையின் வெளிக் கோலத்தைவிட மூளைக் கலன்களின் சாவே முதுமையில் கொடுமையாகிறது. உனக்கும் உன் உடலின் இயக்கத்திற்குமான கட்டுப்பாடு உன்னிடம் இருந்து பறிபோகிறது.

நல்ல மனிதர்கள் படுக்கையில் அழுந்துவது என்னும் நரகம் கண்டு சாகமாட்டார்கள் என்று ஒரு நம்பிக்கை உண்டு. நான் நல்ல மனிதனா? எனக்கு நல்ல மனிதனுக்குரிய சா வருமா? நல்ல மனிதன் என்றால் என்ன? அவன் எப்படி நடந்திருக்க வேண்டும்? எதையெதைச் செய்திருக்க வேண்டும்? எதையெதைச் செய்யாது விட்டிருக்க வேண்டும்? உலகத்தில் எத்தனை வீதமான மனிதர்கள் நல்லவர்களாக இருப்பார்கள்? எத்தனை வீதமானவர்கள் படுக்கையிற் கிடந்து உழன்று உழன்று சாகுமளவுக்குப் பாவம் செய்திருப்பார்கள்? இந்தப் பிறப்பில் செய்த பாவமா அல்லது போன பிறப்பில் செய்த பாவமா பலிக்கப் போகிறது? இதற்கும் மேலாக மனிதன் எப்படிச் சாவான் என்பது அவனது நிறமுகூர்த்தத்தாலும் விபத்துக்களின் கோர்வைகளான சம்பவங்களாலும், அவன் வாழ்ந்து வந்த வாழ்க்கை முறையாலும் நிச்சயிக்கப்படுகிறதா? இது ஆராய்ச்சிக்குரிய கேள்வி. இதைப்பற்றி யாராவது ஆராய்ந்திருப்பார்களா? கணிப்பெடுத்திருப்பார்களா? நான் அப்படி எதையும் வாசித்ததில்லை. வாசிக்கக் கிடைத்திருந்தால் மிகவும் பயனுள்ளதாக இருந்திருக்கும். இந்த நேரத்தில் அதைப் பற்றி யோசித்திருக்கலாம். அதன் அடிப்படையில் நான் யாரென இனம் கண்டு கொண்டிருக்கலாம்.

'கலோ நீங்கள் முடிச்சிட்டியளா?' என்ற வண்ணம் அவள் வந்தாள். எனது சாப்பாட்டுத் தட்டைப் பார்த்த வண்ணம் அந்தத் தாதி என் முன் நின்றாள். அதை நான் எடுக்கட்டுமா என்பது அவள் பார்வையில் விளைந்த கேள்வி. இவர்கள் பெயரை நான் இப்போது ஞாபகப்படுத்திக் கொள்வது இல்லை. பலர் வருகிறார்கள்... பலர் போகிறார்கள்... நீடித்து நிற்பது அபூர்வம் ஆகிவிட்டது. அத்தால் யாரையும் முழுமையாக ஞாபகம் வைத்துக் கொள்ள முடிவதில்லை. எனது சிந்தனையைப் புத்தகம் ஆக்கிரமித்ததில் புத்தியில் வேறு நினைவுகளுக்கு இடமிருப்பதில்லை. அதற்கும் என்னால் முழுமையாக நேரத்தைச் செலவிட முடியாமை பெரும் அந்தரத்தைத் தந்தது. நான் அவளைப் பார்த்து,
'சரி. எடுங்க' என்றேன்.

'என்ன ஒவ்வொரு கேள்விக்கும் நிறைய யோசிச்சுப் பதில் சொல்லுறியள்?' என்றாள்.
'முதுமை வரேக்க உங்களுக்கும் புரியும்' என்றேன்.
'முதுமையும் ஒரு வகையில இன்பம்தானே?' என்றாள் அவள் கண் சிமிட்டலோடு.
'தெரியேல்லை... நீங்க அனுபவிக்கேக்க முழுமையாப் புரிஞ்சுகொள்ளுங்கோ' என்றேன்.

‘யா… இப்ப நீங்க கவலைப்படாம உசாராக இருங்க’ என்றாள்.
‘சரி..’

அவர்கள் வண்டிலை உருட்டிக் கொண்டு சமையல் அறைக்குச் சென்றார்கள். குமரேசன் பேசாது இருந்தான். அவனும் என்னைப் போல பழைய கால நினைவுகளில் மூள்கிறான் என்பது எனக்கு நன்கு தெரியும். அவன் சிந்தனைகள் எந்த வகையில் செல்கின்றன என்பதுதான் எனக்குப் புரிவதில்லை. அத்தால் அவனை நான் சீண்டினேன்.

‘என்னடாப்பா பேசாமல் இருக்கிறா?’ என்றேன்.
‘பேசின காலம் போய்விட்டது. இப்ப சிந்திக்கிற காலம். கடைசியாச் சிந்திக்கிற காலம் எண்டு நீதானே சொன்னா. பழசுகளான நாங்கள் ஆடின ஆட்டத்தைப் பற்றிச் சிந்திக்கிறன்’ என்றான் அவன்.
‘அப்பிடி என்னத்தைச் சிந்திக்கிறாய்?’ என்றேன்.
‘சொன்னாப் பேசக்கூடாது’ என்று பீடிகை போட்டான்.
‘இல்லை’ என்றேன்.
‘அந்த வம்பே ஞாபகம் அடிக்கடி என் மனசில ஓடுது’ என்றான்.
‘சாகிற காலத்திலகூட உனக்குச் சபலம் அடங்கேல்லை’ என்று கூறினேன்.
‘அதுக்கு நான் என்ன செய்ய? மனசு இன்னும் இளமையாக இருக்குது. உடம்புதான் மனசோட ஒத்துழைக்க மாட்டன் எண்டுது. சரி. எனக்குப் படுத்தா நல்லாய் இருக்கும் போல இருக்குது. அவளிட்ட ஒருக்காச் சொல்லிவிடு’ என்றான்.

நான் அவளைக் கூப்பிட்டு அவனது விருப்பத்தைச் சொன்னேன். நானும் பின்பு எனது அறைக்குச் சென்றேன்.

## 6

**அ**றைக்குள் வந்ததும் கதவைச் சாத்திவிட்டு ஒருவித பரபரப்போடு எனது கனினியை இயக்கினேன். இன்று கொஞ்சமாவது எழுதவேண்டும் என்பது என்னுடைய அவா. அவா இருந்தால் மட்டும் ஆக்கம் ஆவதில்லை. சோம்பல் அடிக்கடி ஆக்கத்தைச் சோரம் போக வைத்து விடுகிறது. அதற்குச் சவால்விட்டு நான் இயங்கத் தொடங்கினேன். எதை எழுதுவது? எங்கிருந்து எழுதுவது? என்கின்ற தடுமாற்றம் இடியப்பச் சிக்கலான கேள்விகளாய் என்னைத் திகைக்க வைத்தன. நோர்வேக்கு வந்த பின்பு நாங்கள் ‘போல்க்கைஸ்கூல்’ சென்றோம்.

போல்க்கைஸ்கூல் செல்வது எங்கள் வேட்கை அல்ல. எமது இருப்பிற்கும் அந்தப் படிப்பிற்கும் சம்பந்தம் உண்டு. எங்களுக்கு விசா தரப்பட்டது படிப்பிற்காக மட்டும். ‘போல்க்கைஸ்கூலில்’ சில நாட்கள் என்ன செய்வது என்று புரியாத திகைப்பு. எல்லோர் முகங்களும் எங்களுக்குப் புது முகங்களாக… மீண்டும் மீண்டும் பார்க்கத் தோன்றும் எழிலான பெண்களின் முகங்களாக… அந்தக் கொஞ்சும் இளைய முகங்கள் எங்கள் கற்பனையைக், கற்பைச் சீண்டுவதற்காக விடுக்கப்பட்ட சவால்களாக… குமரேசன்பாடு வெகு கூசியாக… என்பாடு படு அவஸ்தையாகியது. ‘போல்க்கைஸ்கூல்’ அதிபர் எங்களுக்குத் தேவையான வசதிகளைச் செய்துதந்தார். நாங்கள் நோர்வே மாணவர்களோடு சேர்ந்து பழக வேண்டுமெனப் புத்திமதி கூறினார். புத்திமதியோடு நின்றுவிடாது அதற்கான ஏற்பாடும் செய்தார். அவருடைய அக்கறை எங்களுக்கு நோர்வே மாணவரிடத்தில் அதிக நட்பை ஏற்படுத்தித் தந்தது. எங்களுடன் எல்லோரும் சகஜமாகப் பழகினார்கள். இது கிறிஸ்தவப் ‘போல்க்கைஸ்கூல்’ அல்ல. அத்தால் கடும் கட்டுப்பாடுகளில் இருந்து எங்களுக்கு விடுதலை.

வித்தியாசமாய் இருப்பது சிலவேளை கவர்ச்சியை உண்டு பண்ணி விடுகிறது. எங்கள் நிறத்தில் சிலருக்குப் பைத்தியம். அத்தால் பெண்கள் மத்தியில் எங்களுக்கு நல்ல மதிப்பு. இங்கு வந்த பல பிஞ்சுப் பெண்களுக்கு

நிறங்கொண்ட மனிதர்களின் முதற் சகவாசம் இது. சந்தையில் இருப்புக் குறையும் போது கிராக்கிக்கு என்ன குறை? எங்களைப் போல் மற்றவர்கள் இல்லாத இடத்தில் எங்கள் மதிப்பின் ஏற்றம். அதுவே எங்களை மமதை கொள்ள வைத்தது.

பெண்கள் எங்களைச் சுற்றினர். எனக்கு அவர்களோடு ஒட்டிக் கொள்ள முடியாத அவஸ்தை. பெண்களின் இந்த அக்கறை குமரேசனுக்குப் பட்டத்து அரசனான நினைப்பைத் தந்தது. அவன் மன்மதக் குஞ்சாய் மகிழ்வில் திளைத்தான். நான் ஆணின் கற்பைக் காக்க அவஸ்தைப் பட்டேன். அது என் தார்மீகம் என்று நம்பினேன். மூனாவுக்குத் துரோகம் செய்வதை எனது மனது ஒப்பவில்லை. நான் எனது விரலில் உள்ள மோதிரத்தை அடிக்கடி பெண்களுக்கு மனம் எரியக் காட்ட வேண்டி வந்தது.

அன்று குமரேசன் 'கமிலா' என்கின்ற அந்தப் பெண்ணோடு வந்தான். அவள் மயக்கம் தரும் வெள்ளைத் தேவதை. அவளின் பொன்னிறக் கேசம் அலையலையாக அருவி போல தலைவிட்டிறங்கும் கோலம். துரு துருவென்ற நீலக் கண்களில் இதயம்வரை ஊடுருவும் பருவத்தின் உயிர் தின்னும் ஒளி. எடுப்பான நீண்டு கிளிச் சொண்டாக வளைந்த மூக்கு. இரட்டை நாடி. அடிக்கடி ரோஜாவாகச் சிவக்கும் அவள் தாமரைக் கன்னங்கள். மிளகாய்ப் பழம் போன்ற மெல்லிய இதழ்கள். கட்டான உடம்பு. உயரம் மட்டும் கொஞ்சம் மட்டம். குமரேசனுக்கு அவள் பொருத்தமே. ஆனால் பொருத்தம் பார்த்து வாழ்வதற்கு அவள் குமரேசனோடு கூடவில்லை.

அவர்களோடு 'லையிலா' என்கின்ற பெண்ணும் வந்தாள். அவள் நல்ல உயரமும் உடலும் உடையவள். அவள் அழகு ஆயிரம் இந்திராணிகளை ஒன்றாக்கி பூமிக்கு அனுப்பி வைத்தது போல இருந்தது. அவள் என்னைவிட உயரமாகத் தோன்றினாள். இராணுவத்திற்கு ஏற்ற உருவம். கண்களில் நீலம். பற்களில் தெத்து. இதழிகளில் எப்போதும் வழியும் புன்னகையே அவள் செவ்விதழைப் பிரித்து வைத்திருக்கும். மோகிக்கும் பார்வை. முழுமதியான அவள் வதனம். நான் அவர்களைப் பார்த்து,

'காய்' என்றேன். அவர்களும் 'காய்' என்றனர்.

'புத்திரன்' என்றான் குமரேசன்.

'என்ன?' என்றேன்.

'கமிலாவும் நானும் இந்த அறைக்க படுக்கப் போறம். நீ லைலாவோட அவையின்ர றுமுக்க போய்ப் படு. பிளீஸ் எனக்காக..' என்றான்.

'அதெல்லாம் சரிவராது' என்றேன் கோபமாக. சீ... சீ... இந்தப்பழம் புளிக்கும் என்கின்ற எரிச்சல் என்னிடம் என்பது புரிந்தது.

'டேய், நாங்கள் இரண்டு பேரும்..' என்று அவன் எதைச் சொல்ல வந்தான் என்பது புரிந்தது.

'வேற யார்ற்றையாவது றுமுக்க நடத்துங்க... இங்க வேண்டாம்'

'சரி அப்பிடியெண்டா லைலா இங்க படுக்கட்டும்' என்றான்.

'அது முடியாது'

'அப்ப என்னடா செய்யிறது?' கோபமாகக் கேட்டான் குமரேசன். அவன் கடுப்பு அவனுக்கு. என் வாழ்க்கை எனக்கு.

'நான் எங்கையும் போகமாட்டன். இங்க வேறயாரும் படுக்கவும் ஏலாது' என்றேன்.

'நீ கேள் லைலா' குமரேசன் அவளைத் தூண்டி விட்டான். பின்பு திடீரென தானே முடிவு செய்தவனாய்,

'உங்கட றுமுக்க நாங்க போய்ப் படுப்பம்' என்று கூறியவன் கமிலாவின் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு அவர்களது அறைக்குச் சென்றான். நானும் லைலாவும் தனித்து விடப்பட்டோம். என் மனது பயந்தது. என்னதான் விரலில் மோதிரம் இருந்தாலும் நானும் உணர்ச்சி உள்ள மனித மிருகம் அல்லவா என்கின்ற பயம் என்னை வாட்டியது.

‘என்ன உங்களுக்குப் பிடிக்கல்லையா?’ என்றாள் லைலா. எனக்கு என்ன பதில் சொல்வது எனப் புரியவில்லை. சொற்கள் தொலைந்ததாக நாக்குச் சுருண்டு மேல் அண்ணத்தில் ஒட்டிக் கொண்டது. என்னைச் சமாளித்துக் கொண்டு அவளை சமாதானப் படுத்த முயன்றேன்.

‘நீ உள்ளம் கவரும் கொள்ளை அழகுப் பெண். நான் அதற்கு அதிஸ்ரம் செய்யவில்லை. நான் ஏற்கனவே ஒரு பெண்ணிற்கு வாக்குக் கொடுத்து விட்டேன். அவள் இப்பொழுது என்கருவைச் சுமக்கிறாள்’ என்றேன் ஓரளவு சுத்தமான நொஸ்க்கில்.

‘அவள் இங்கு இருக்கிறாளா?’ என்றாள் லைலா.

‘இல்லை’

‘பின்பு எதற்குப் பயப்பட வேண்டும்?’ என்றாள்.

‘நான் அவளுக்குத் துரோகம் செய்யமாட்டன்’

‘நான் துரோகம் செய்யச் சொல்ல வில்லை. ஓகே. உங்களுக்கு வேண்டாம் என்றால் பருவாய் இல்லை. அவர்களின் சுகத்தை ஏன் கெடுப்பான்?’ என்றாள்.

‘இப்ப என்ன செய்யலாம் என்கிறாய்?’

‘அவர்கள் எங்கள் அறைக்குள் படுக்கட்டும். நான் குமரேசனின் படுக்கையில் படுக்கிறேன்’ என்றாள்.

‘சரி. தொந்தரவு செய்யக் கூடாது’ என்றேன் எச்சரிக்கும் விதமாக.

‘நோ. விருப்பம் இல்லாத யாரையும் வற்புறுத்துவது எங்கள் பண்பல்ல’ என்றாள்.

‘சொன்ன சொல்லைக் காப்பாத்தினாச் சரிதான்’ என்றேன். இங்கே கதை மாறி இருந்தது. என்னிடம் இருந்த கனவை அவள் அறியமாட்டாள்.

‘உவ்… நீ வித்தியாசமான ஆள்தான்’ தலையைப் பக்கவாட்டிற்கு ஆட்டினாள்.
நான் எழுந்து கதவைச் சாத்தினேன். லைலா மீண்டும் கதைக்கத் தொடங்கினாள்.

‘நீங்க இப்ப நோர்வேலதானே இருக்கிறியள்?’

‘ம்… அதிலென்ன சந்தேகம்?’ என்றேன்.

‘அப்ப அதுக்கேத்த மாதிரி நடக்க வேணும். அடம் பிடிச்சா யாருக்கு லாபம்?’ என்றாள்.

‘நல்லாய் இருக்குது. இங்க எங்கட நாட்டைவிடச் சுதந்திரம் அதிகமாக இருக்கலாம். அதுக்காக எல்லாரும் கட்டுப்பாடில்லாமல் நடக்கினமா? அதுதானா நீ உங்கடை நாட்டைப் பற்றிப் புரிஞ்சு கொண்டது? கிறிஸ்தவம் இந்து மதத்தைவிடக் கட்டுப்பாடான மதம் என்பது எனக்குத் தெரியும். அந்த மதத்தைக் கடைப்பிடிக்கும் நாடு நோர்வே’ என்றேன்.

‘அந்த மதத்தை எத்தனை வீதமானோர் கடைப் பிடிக்கிறார்கள் என்று உங்களுக்குத் தெரியுமா? அந்த வீதம் சொல்லும் உண்மையில் மக்கள் எதை விரும்புகிறார்கள் என்று தெரியும். மற்றையது எல்லாம் வேஷம். அரசியல். நீங்கள் சுதந்திரமாக இருந்து பாருங்கள்… அப்ப தெரியும் அதன் சுகம்’ என்றாள் அவள்.

‘நான் எங்கள் கலாசாரத்தை நேசிக்கிறன்’ என்றேன்.

‘அதே போலத்தான் நானும் எங்கள் கலாசாரத்தை நேசிக்கிறன். அதில் உள்ள சுதந்திரம் எனக்கு மிகவும் பிடிக்கும். உங்கள் கலாசாரத்தில் என்ன சுதந்திரம் இருக்கிறது? பிரச்சனைகளோடு வாழ்ந்தாலும் ஒருத்தனுக்கு ஒருத்தி என்கின்ற வறட்டுக் கௌரவம். ம்… எவ்வளவு அடிமையான நிலைமை அது? மனது ஒத்துப் போகாவிட்டால் பிரிந்து போவதில் தப்பில்லை. காதல் வருமிடத்தில் சேர்ந்து வாழ்வதும் தப்பில்லை. அதுதான் எங்கள் முறை. காதல் இருந்தால் ஒருவருடன் தொடர்ந்து வாழலாம். அல்லது வெட்கப்பட ஏதும் இல்லை’ என்றாள் அவள்.

‘உண்மை. அப்படி வா வழிக்கு. எனக்கு அவளைப் பிடிச்சிருக்குது. நான் அவளோடுதான் தொடர்ந்தும் வாழ்வேன். அதாவது வாக்களித்தது போல இறப்பு எங்களைத் தீண்டும் வரைக்கும் அவளோடுதான் வாழப் போகிறேன்’ என்றேன்.

‘வாழ்த்துக்கள். பார்க்கலாம்... ஆனால் இந்தக் கணம் எங்கோ இருப்பவளுக்காகப் பட்டினி இருக்க வேண்டும் என்கிறீர்களே அதற்கு என்ன அர்த்தம் உள்ளது?’ என்றாள் அவள்.

‘நான் அப்பிடி இல்லை. உறவுக்கும், நம்பிக்கைக்கும் துரோகம் இழைப்பதில்லை’

‘முட்டாள்’ லைலாவிற்குக் கோபம் வந்திருக்க வேண்டும்.

‘என்ன?’

‘ஒண்டுமில்லை’ என்றாள்.

‘எனக்கு எல்லாம் கேட்டது’ என்றேன்.

‘திருப்பிக்கேட்டால் இன்னும் அதிகமாகும்’ என்றாள்.

அதற்குமேல் அவளோடு என்ன கதைப்பது? நான் பேசாது இருந்தேன். அவளும் பேசாது சிறிது நேரம் இருந்தாள். பின்பு மீண்டும் என்னை வம்புக்கு இழுத்தாள்.

‘எங்கட பொடியள் இப்பிடி இருக்கமாட்டினம்’ என்றாள்.

‘தெரியும். எங்களிலும் பலர் சும்மா இருக்க மாட்டினம்’ என்றேன்.

‘இப்பிடி இருந்தா வித்தியாசமாக நினைப்பினம்’ என்று சொல்லிவிட்டு அவள் நமட்டுச் சிரிப்புச் சிரித்தாள். பின்பு,

‘ஓகே... கதைச்சா இதுக்கு விடிவிருக்காது. எனக்கு அலுப்பா இருக்குது’

எனக் கூறிய வண்ணம் கையை உயர்த்தி உளைவெடுத்தாள். அவள் அணிந்திருந்த மெல்லிய மேலாடையை மீறி அரைகுறை நிர்வாணமாக அவள் கொங்கைகள் என்னைப் பார்த்து முறைத்தன. முனிவரும் தடுமாறும் கணங்களாய் தனிமையில் என்னை அது தடுமாற வைத்தது.

‘நான் படுக்கோணும்’ என்றாள் மீண்டும்.

‘படேன்’

‘இப்பிடியே யீன்ஸ் மாத்தாமலா?’ என்றாள்.

‘அப்ப எப்பிடி படுக்கப்போறாய்?’

‘நான் கமிலாவோட படுக்கிறதென்டா இடுப்பில மாத்திரம்தான் ஏதாவது இருக்கும்’ என்றாள்.

‘அப்ப நான் வெளியால போறன். நீ களட்டீட்டு போர்வேக்க புகுந்துகொள்’ என்றேன்.

‘நான் உன்னோட அப்பிடிப் படுக்க விரும்பேல்லை. ஏதோ சுத்திக் கட்டுற மாதிரி நீங்க வைச்சிருப்பியளே... அதைத் தாங்க’ என்றாள்.

‘போச்சடா’ என்றேன்.

‘என்ன?’

‘ஒண்டும் இல்லை’

நான் சாறத்தை எடுத்துக் கொடுத்துவிட்டுக் குளியல் அறையை நோக்கிச் சென்றேன். சிறுநீர் கழித்துவிட்டு மீண்டும் கதவைத் திறந்த போது அவள் போர்வைக்குள் புகுந்துவிட்டாள். என்னை ஒரு விதமாகப் பார்த்துச் சிரித்தாள். அடக்கி வைத்திருக்கும் காமத்தை இவள் மீது தீர்த்துக் கொள்ள வேண்டும் என்கின்ற எண்ணம் வந்தாலும் அந்த எண்ணத்தைப் புறந்தள்ளி சாறத்தை மாற்றினேன். அவள் அதைப் பார்த்துவிட்டு, பதற்றப்படுபவள் போன்ற நடிப்போடு,

‘என்ன...? என்ன செய்யிறாய்?’ என்றாள்.

‘சாறம் மாத்திறன்’ என்றேன்.

‘நான் பயந்து போனன்’ என்றாள்.

நடிப்போ, நிஜமா? எனக்குச் சிரிப்பு வந்தது. நான் அதை அடக்கிய வண்ணம் சாறத்தை மாற்றிவிட்டு விளக்கை அணைத்தேன். அவள் என்னைப் பார்த்த வண்ணமே படுத்திருந்தாள். நான் அதை அறியாதவன் போலத் திரும்பிப் படுத்தேன். அன்றைய பொழுதிற்கு முடிவு கட்டுவதாய் இரவு வணக்கம் சொன்னேன்.

அவள் மௌனமாக என் முதுகையே துளைப்பது எனக்குப் புரிந்தது. பெண் விரும்பியும் அதைத் தீர்க்காது கல்லாய் இருப்பது தப்பா என்கின்ற கேள்வி என் மனதில் எழுந்தது. என்ன செய்யலாம்? இன்று ஒருநாள்? அத்தோடு மறந்து விட்டால். அது இங்கு வழமைதானே? சீ இவ்வளவு கதை கதைத்த பின்பா?
நான் சிறிது நேரத்தில் உறக்கத்திற்குப் போய்விட்டேன். காதோரம் வெதுவெதுப்பான சுடும் மூச்சுக் காற்று ஊதுவதான கூச்சம் என்னை எழுப்பியது. நான் விழித்துப் பார்த்த போது லைலா என்னை முகர்வது போல அருகில் ஆசையோடு என்னைப் பார்த்து வெறித்தாள். பேசிய தத்துவம் இருட்டில் முகம் இழந்து போயிற்று. மனித மிருகம் விழித்துக் கொண்டது. தனிமையும், காமமும் நிலைகுலைய வைத்தன. இயற்கையின் நியதியை மீற முடியாத ஆண் என்பதை நிரூபிக்கத் தொடங்கினேன்.

முடிந்த பின்பு லைலா நமட்டலாக ஒரு சிரிப்புச் சிரித்தாள். அதற்கு என்ன அர்த்தம் என்பது எனக்குப் புரிந்தது. அவள் முகத்தைப் பார்க்க வெட்கமாய் போயிற்று. துரோகம் செய்ததாய் மனதிற் குடைச்சல் எழுந்தது. நான் என்ன அவதாரபுருஷனா என்கின்ற கேள்வியும் எழுந்தது.

என் வேசம், இயற்கையை வெல்ல முடியாத பலவீனம், அன்றோடு வெளிச்சத்திற்கு வந்தாகிற்று. முதல் நாள் நடப்பது மறக்க முடியாத சம்பவம். அதன் பின்பு அது நினைவில் நிற்காத அன்றாடம் நடக்கும் சடங்கு. அவள் அடிக்கடி என்னோடு கூடினாள். மனிதன் தெரிந்தும் பிழை செய்யும் மிருகம். சமுதாயத்தின் கட்டுப்பாடுகளை இரகசியமாய் மீறுவதில் தனக்குச் சுகம் கிடைத்தால் ஆட்சேபிப்பவன் அல்ல. நானும் சுயநலவாதியாய், சோரம் போனவனாய், துரோகம் செய்தவனானேன். ஆசை தீர்ந்த பின்பு குற்ற உணர்வு தாராளமாய் என்மேல் சவாரி விட்டது. இருந்தும் மீண்டும் மீண்டும் குற்றம் செய்தேன்.

மூனாவுக்குத் துரோகம் செய்ததான எனது குற்ற உணர்வை நான் லைலாவிடம் கூறினேன். அவள் என்னிடம் சத்தியம் செய்தாள். இந்தப் பாடசாலைக்கு உள்ளேதான் எங்கள் உறவு என்கின்ற சபதம் எடுத்தாள். மனித மனங்கள் துரோகங்களை அறியாதவரைக்கும் ஆத்திரப்படுபவையல்ல. துரோகம் மனதைக் குடைந்தாலும் நானாகச் சொல்லாவிட்டால் மூனாவுக்குத் தெரியவராது என்கின்ற தயிரியம்.

'போல்க்கைஸ்கூல்' கவலைகள் அற்ற சிட்டுக்குருவிகளின் சரணாலயம். நான் எதிர்பார்த்ததைவிட அந்த வாழ்வு இனித்தது. மாணவப் பருவத்திலே காமனுக்கும் விடை சொல்லும் தகுதி கிடைத்தால் அது அலாதியானது. எமக்கு இங்கு அது கிடைத்தது.

அதிபர் காணாதவாறு நானும் லைலாவும் சைகைகளால் அநேக இடங்களிற் கதைக்க வேண்டியதாகிற்று. அவருக்குத் தெரிந்தால் அது மூனாவின் காதுக்கு எட்டிவிடலாம். எட்டினால் எமது இருப்பு கேள்வியாகும். கத்தியில் நடப்பது புரிந்தும் காமத்தால் ஆபத்தோடு உறவு வைத்தேன்.

பாடமாக்கி மொழியில் பாண்டித்தியம் பெற்றுவிட முடியாது. ஒரு மொழியில் ஆளுமை பெறுவதற்குக் கதைக்கும் சந்தர்ப்பங்கள் கிடைக்க வேண்டும். கதைப்பதற்கு அந்த மொழி அறிந்தவர் எங்களில் ஆர்வத்தோடு இருக்க வேண்டும். எங்களுக்கு எல்லாம் கிடைத்திருந்தன. அதற்கான நேரங்களும் வசதிகளும் தாராளமாயிற்று. பாடசாலை ஒழுங்கு செய்த சுற்றுப் பிரயாணத்தின் மூலம் பல இடங்களுக்கும் போகும் வசதியும் கிடைத்தது. அது பல அனுபவங்களைப் புகட்டி எமது அறிவின் பரப்பை விஸ்தீரணமாக்கியது. இப்படி எல்லாப் பாடசாலைகளும் இருப்பதில்லை. கோட்பாட்டுடன் மட்டும் மாரடிக்கும் யாழ்ப்பாணத்துப் பாடசாலைகளில் இருந்து வித்தியாசப்பட்டாலும் பல கோணங்களையும் மாணவர்களுக்கு அறிமுகப்படுத்துவது எல்லாப் பாடசாலைகளிலும் இவ்வளவிற்கு நடைபெறுவதில்லை.

நான் பாடசாலை தொடங்கும் போதே மூனாவிற்குப் பானை வண்டியாகிவிட்டது. அவள் கோலத்தை இரவிலே பார்க்கும் போது பெண் பிள்ளையாரான ஆச்சரியம் என்னை ஆட்கொள்ளும். எப்படி இருந்த உடம்பு இப்படியாக மாற முடியுமா என்கின்ற மலைப்புத் தாங்காது. தாய்மை பெண்ணிடம் எப்படி மலர்கிறது என்பதை நான் மூனாவில் பார்த்தேன். மூனாவை அந்தக் கோலத்தில் பார்த்த போதெல்லாம் முன்பிருந்த காமவெறி அப்போது இருப்பதில்லை. அதற்குப் பதிலாகப் பாசம் சுரக்கும். பெண் என்பதற்காய் இயற்கை கொடுத்த மேலதிகக் கடமையை எண்ணிப்

பரிதாபம் ஏற்படும். ஆணிற்கு அதில் எப்பொழுதும் சுதந்திரம்தான். அது நாமாக விரும்பி உடம்பை மாற்றிக்கொள்ளாத வரைக்கும்.

மூனா என்கின்ற பெண்ணை இனியென் வாழ்க்கையில் இருந்து பிரிக்க முடியாது. நான் 'போல்க்கைஸ்கூலில்' படித்தாலும் சனி, ஞாயிற்றுக் கிழமைகளில் மூனாவிடம் வந்துவிடுவேன். அந்த இரு நாளும் லைலாவால் என்னைப் பிடித்து வைக்க முடிவதில்லை.

நான் 'போல்க்கைஸ்கூலில்' பலவேளை வெள்ளி மத்தியானம் பெட்டி கட்டுவதிலிருந்து அவள் அதைப் புரிந்து கொள்வாள். கவலை இருந்தாலும் என்னை அவள் தடுப்பதில்லை. நான் மூனாவுக்குத் தெரியாது தொடர்ந்தும் துரோகம் செய்தேன். அதைப் பற்றி ஒரு சொற் கதைப்பதற்கு என்னிடம் துணிவு இருந்ததில்லை. தெரிந்தால் உறவு முறிந்துவிடும். எனக்கும் லைலாவிற்குமான உறவு பேசப்பட முடியாத இரகசியம். அதுவும் நாளையளவில் மறக்கப்பட வேண்டிய இரகசியம். அதுவே எங்கள் ஒப்பந்தம். துரோகங்களின் சாபங்கள் என்றும் அழியாத உருபிலாத பிசாசுகளாகக் காத்திருக்க. மூனா என்னைச் சந்தேகப்பட்டு எதுவும் கேட்டதில்லை. அவளின் அந்த நம்பிக்கை மனச்சாட்சி என்னும் ஊசியாகி இதயத்தை இடைவிடாது நெருடியது. மனது ஒவ்வொரு கணமும் யுத்த காண்டத்தின் விளைநிலமாகியது. கடைசிவரையும் என்னால் அந்த உறவை அவளிடம் சொல்ல முடியவில்லை. நான் அதில் தப்பு செய்வது புரிந்தும் அந்தத் தப்பில் இருந்து என்னால் விடுபட்டுக் கொள்ளவும் முடியவில்லை. மனதிற்குள் ஒரு பூதம் நரமாமிசம் புசித்தது. எனது இந்தத் தப்புக்கள் பிற்பாடு நடந்தவற்றிற்கெல்லாம் காரணமாக இருக்கலாம். எனது அறியாமையும் விட்டுக் கொடுப்பும்கூட அதற்குக் காரணமாய் இருந்திருக்கலாம். மனிதனுக்கு எது சரி எது தப்பு என்பது முற்று முழுதாய்ப் புரிவதில்லை. ஒருவருக்குச் சரியாகப் புரிவது இன்னொருவருக்குத் தப்பாகத் தோன்றலாம். எனக்கு அப்போது சரியெனப்பட்டது இப்போது பிழையாகப்படுகிறது. இப்போது பிழையாகப்படுவது அப்போது சரியாகப்பட்டது. காலம் நிறையவே பாடம் கற்றுத் தந்துவிட்டது. அனுபவம் என் மூளைக் கலங்களில் அறிவைப் பொதியாத கடந்த காலத்தில் எடுத்த முடிவுகளில் உள்ள தவறுகள் புரிகிறது. புரிந்து இனி என்ன செய்யமுடியும்? கடந்தவை கடந்தவைதான். காலமும் வாழ்வும் பின்னோக்கிச் செல்லும் புரவிகள் அல்ல.

★

நான் 'போல்க்கைஸ்கூலில்' இருந்து மூனாவிடம் விமானத்தில் அடிக்கடி வந்து போகக் கட்டுபடியாகவில்லை. அவளிடம் செல்வதற்குக் கப்பலையே உபயோகிக்க வேண்டியிருந்தது. அந்தக் கப்பல் சேவையை 'குட்டிறுத்தா' என்பார்கள். மத்தியானம் வெளிக்கிட்டால் பின்னேரம் அவளின் இடத்திற்கு வந்துவிடும். அதில் சில சிற்பந்திகளோடு எனக்கு நட்பு ஏற்பட்டது.

அன்று வெள்ளிக்கிழமை. நான் கப்பலால் இறங்கும் போது மூனாவின் அப்பா பரபரப்போடு கப்பற் தளத்தில் அவதிப்பட்டுக்கொண்டு நின்றார். அவரது அவதிக்கு என்ன காரணம் என்பது எனக்குப் புரிந்தும் புரியாததுமான குழப்பம். என்னவாய் இருக்கும் என்பதில் எனக்குச் சில எதிர்பார்ப்புக்கள் இருந்தாலும் நான் அவரிடமிருந்தே என்னவென்று அறிய ஆசைப்பட்டேன். நான் இறங்கியதும் மூனாவின் அப்பாவே கதைத்தார்.

'காய். மூனாவுக்குத் திடீரெண்டு குத்து வந்திட்டுது. ஆஸ்பத்திரிக்குத் தொடர்பு கொண்டு கதைச்சம். அம்புலன்ஸ் வந்து ஏத்திக் கொண்டு போகுது. நாங்கள் இப்ப ஏயார்ப்போட்டுக்குப் போனா அவையச் சிலவேளை பிடிக்கலாம். இல்லையெண்டா ஆஸ்திரி மூனாவோட ஆஸ்பத்திரிக்குப் போவா' என்றார். நான் அவசர அவசரமாய்க் காருக்குள் ஏறினேன்.

'மூனாவுக்கு நாளிருக்கே?' என்றேன்.

'அதுதான் தெரியேல்லை... திடீரெண்டு குத்து வந்திட்டுது. சில வேளை சரியாக் கணிக்கமாட்டினம். ம்... நீங்க கவலைப்படத் தேவையில்லை. எல்லாம் நல்லா நடக்கும்' என்றார் அவர்.

'நானும் அப்பிடித்தான் நினைக்கிறன்' என்றேன்.

‘அவள் உங்களை எதிர்பார்க்கிறாள். இப்ப போகேலாட்டியும் அடுத்த பிளைற்றில நீங்க அங்க போகவேணும்’ என்றார் அவர்.

‘நான் எப்பிடியெண்டாலும் போயிடுவன். எனக்குத் தெரியும் அவள் எப்பிடிப் பீல் பண்ணுவாளெண்டு’

‘நல்லது’

நான் அதன் பின்பு மௌனமாய் இருந்தேன். கார் வேகமெடுத்து. கணத்தில் விமான நிலையத்தின் முன்பு அது நின்றது. காரை நிறுத்திவிட்டு,

‘நீங்க இறங்கிப் போங்க, நான் காரைப் ‘பாக்’ பண்ணீட்டு வாறன்’ என்றார் மாமா.

‘சரி’

நான் இறங்கி அந்த அம்புலன்ஸ் ஹெலியை நோக்கி ஓடினேன். அது தனது இராட்சதக் காற்றாடியை இயங்க விட்டிருந்தது. பெரும் ஒலியோடு காற்று என்னைத் தள்ளியது. இன்னும் சில நிமிடங்கள் பிந்தியிருந்தால் அந்தக் ‘ஹெலி’ புறப்பட்டுச் சென்றிருக்கும். நான் குனிந்து கொண்டு அந்தக் காற்றை எதிர்த்து ஓடினேன். ‘ஹெலி’யைச் சென்றடைய நான் போராட வேண்டியதாகிற்று. என்னைக் கண்டவுடனேயே ஆஸ்திரியின் முகத்தில் சந்தோஷ மின்னல் எழுந்தது.

‘வந்திட்டியளே? வாங்கோ... வந்திருங்கோ’ என்றார்.

மூனா படுக்கையில் படுத்த வண்ணம் வேதனையால் அனுங்கினாள். அவள் என்னைக் கண்டதும் வேதனைக்கு இடையில் புன்னகைக்க முயன்றாள். வேதனை அவளை அதற்கு விடவில்லை. அவள் புன்னகை வருத்தமாக அவள் இதழ்களில் நெளிந்து பற்களில் கடிபட்டது. ஆஸ்திரி ‘ஹெலி’யை விட்டு இறங்கிச் செல்ல நான் அந்த இருக்கையில் அமர்ந்தேன். பாதுகாப்புப் பட்டியை நான் அணியவும் கதவு சாத்தப்பட்டு அந்த அம்புலன்ஸ் ‘ஹெலி’ பறக்கத் தொடங்கியது. மூனாவின் கை ஒன்றை எனது கைகளால் வருடிக் கொடுத்தேன். அவள் அப்போதும் வேதனையால் துடித்தாள்.

‘நல்லா வலிக்குதே?’ என்றேன்.

‘தாங்க முடியேல்ல..’

‘அப்ப அமைதியாப் படு’ என்றேன்.

‘முடியல்லை’ என்றாள்.

எனக்குத் தலை சுற்றுவது போல் இருந்தது. அவள் வேதனை என்னைக் கதிகலங்கச் செய்தது.

ஆண்களால் அமைக்கப்பட்ட சமுதாயத்தில் பெண்களுக்குப் பாதுகாப்பில்லை. பெண் தனது பெற்றோருக்கு மாத்திரமல்ல கூடப்பிறந்த ஆண் சகோதரங்களுக்கும் அடங்கிப் போக வேண்டி இருக்கிறது. இவர்கள் புண்ணியம் செய்தவர்கள் என்று கூறவேண்டும். ஆணாதிக்கத்திலிருந்து தங்களை ஓரளவு விடுவித்துக் கொண்டிருக்கிறார்கள். இது முழுமையானதென்று கூறிவிட முடியாது. இன்னும் ஆணால் அடிமையாக்கப்படுவது ஆங்காங்கு ஒட்டிக்கொண்டு இருக்கத்தான் செய்கிறது. அவ்வப்போது பெண்மீது வன்முறை பாவிக்கப்படத்தான் செய்கிறது. இத்தனையும் வேதனையான அனுபவம். இதையெல்லாம் விட்டால் இயற்கைகூட பெண்ணுக்குத் துரோகம் செய்தது போலாகிவிட்டது. இன்பத்தை ஆணும் பெண்ணும் சமமாகத்தான் அனுபவிக்கிறார்கள். ஆண் அழித்ததைக், கழித்ததைப் பெண் சுமக்க வேண்டியதாகிற்று. பத்துமாதம் சுமந்து, பிரசவித்த பின்பும், அலைந்து, இளமை ஒளிந்து, முதுமை வருகிற போது சுமந்த வாரிசுகள் தூரப் போய்விடத் தவிப்பு அவளுக்குத் தொடர்கிறது.

பெண் இதைத் தண்டனையாக எடுத்துக் கொள்வதில்லை. தண்டனையாக எடுத்துக் கொண்டிருந்தால் இன்று நானும் நீயும் இல்லை என்று ஆகியிருக்கும். மனித இனம் அழிந்து இருக்கும்.

பெண்மை என்றும் மதிக்கப்பட வேண்டியது. அது போற்றப்பட வேண்டியது. நான் அதை மதிக்கிறேனா? காலாகாலமாக ஆண்களோடு ஒட்டிவிட்ட தலைக்கனம் என்னிடம் இல்லையா? மனிதம் மறுக்கும் இந்தக் குணங்களைத் துடைக்க வேண்டும். துளிகூட இல்லாது துடைத்தெறிய வேண்டும்.

'அம்மா...!'

'என்ன?'

என் சிந்தனை கலைந்தது. அவளின் இந்த வேதனையிலும் நான் யோசனையில் மூழ்குவதை எண்ணி எனக்கு அவமானமாயிற்று.

'தாங்க முடியல்லை'

அவள் என்னை வேதனையோடு பார்த்தாள். ஒவ்வொரு சொல்லிற்கும் இடையில் அவளுக்கு மூச்சு வாங்கியது. நான் பொறுக்க முடியாது மருத்துவரைப் பார்த்தேன்.

'கடுமையா வலிக்குதாம் என்ன செய்யலாம்?' என்றேன்.

'வலி குறையிறத்துக்கு ஊசி போட்டிருக்கிறம். இப்பவே முள்ளந்தண்டில மருந்து ஏத்தேலாது. இது ஒண்டும் ஆபத்தில்லை. பயப்பிடாதேங்கோ' என்றார்.

அவர் சாதாரணமாகச் சொன்னார். நித்தம் பார்க்கும் அவருக்கு இது ஆயிரத்தில் ஒன்று. எனக்கும் அவளுக்கும் வாழ்நாளில் இதுவே முதன் முறை. அது சிலவேளை ஒரு முறையாகக்கூட இருக்கலாம். பிரசவத்தை அருகில் இருந்து பார்க்கும் அனுபவம் அவஸ்தையானது. இத்தனை வேதனையா என்கின்ற மலைப்பைத் தருவது. பிரசவத்தின்போது பெண்ணை எட்டியே பார்க்கவிடாத எங்கள் ஊர்க் கலாசாரம். இங்கே பிரசவம் முழுவதும் அவளோடு இரு என்கின்ற புதிய கலாசாரம். பெண்ணின் வேதனையைப் புரிந்து கொள்ள இதைவிடச் சிறந்த வழியெதுவும் கிடையாது. பெண்ணே வேண்டாம் என்கின்ற எண்ணம்கூட வந்தாலும் வரலாம். எனக்கும் அப்படி வந்துவிடும் என்றே தோன்றியது. இரத்த மணம் கண்டாலே தலையைச் சுற்றி விழும் பிறவி நான். இவள் பெறுவை என்னால் பார்த்துக் கொண்டு இருக்க முடியுமா? நடுக்கம் பிறந்தது. கொட்டாவி வந்தது. கைகள் வியர்த்தன. எதுவானாலும் சமாளித்துத்தான் ஆக வேண்டுமென எண்ணிக் கொண்டேன்.

'ம்..'

அவள் பெரிதாக முகத்தைச் சுளித்து அனுங்கினாள்.

'அமைதியா இருங்கோ. இன்னும் ஒரு ஐஞ்சு நிமிசத்தில 'ஹெலி' இறங்கீடும்' என்றார் மருத்துவர்.

சொற்கள் அவள் காதில் விழவில்லை. அவள் வலியால் துடித்தாள். 'ஹெலி' இறங்கியது. அவசரமாக உருட்டக்கூடிய கட்டிலைக் கொண்டு வந்தார்கள். மூனாவை அதற்கு மாற்றினார்கள். நாங்கள் மருத்துவமனைக்குள் பிரவேசித்தோம். அந்தப் பிரவேசம் ஒருவித ஆறுதலை எனக்குத் தந்தது.

அலுவல்கள் அவதியாக நடந்தேறின. மருத்துவிச்சி மூனாவைப் பரிசோதித்தாள். அவர்கள் கொடுத்த தவணை பிழைத்துப் போய்விட்டது. யார் கணக்கில் மந்தம் என்பது புரியவில்லை. தவணையில் இருந்து பத்து நாட்கள் முந்திவிட்டது. மூனாவை அவசர அவசரமாகப் பிள்ளை பிரசவிக்கும் அறைக்கே கொண்டு சென்றார்கள். வைத்தியசாலை உடுப்பு மாற்றப்பட்டது. இரத்த அழுத்தம், உடல் வெப்பநிலை போன்றவை பரிசோதிக்கப்பட்டன. மருத்துவிச்சி மூனாவை விடவில்லை. எப்போது என்ன நடந்தது என்கின்ற விரிவான ஆய்வில் அவர் மும்மரம். என்னைப் பார்த்து உறவுமுறை கேட்டுக் கொண்டார். அப்போது அவரிடம் முதலில் மின்னிய ஆச்சரியம் பின்பு மறைந்து போயிற்று. பிள்ளையின் இதயத் துடிப்பு, அது வயிற்றில் பதிந்திருக்கும் நிலை போன்றவற்றைப்

பரிசோதித்தனர். குழந்தை நலமாக இருப்பதான கண்டுபிடிப்பை கடைசியாக மருத்துவிச்சி பெருமையோடு அறிவித்தார். மூனா தொடர்ந்தும் நலமின்றி அனுங்கினாள்.

மூனாவின் அனுங்கல், துடிப்பு, அவஸ்தை, கத்தல் மரதன் ஓட்டப்போட்டியாகத் தொடர்ந்தது. மருத்துவிச்சியும் சளைக்காது சமாதானம் செய்தாள். பின்பு ஒரு ஊசி போட்டாள். முழுமையாக அது நீங்காவிட்டாலும் மூனா அமைதியானாள். அது நீடிக்கவில்லை. மீண்டும் கொஞ்சம் கொஞ்சமாக வேதனையோடு மூனா தவிக்கத் தொடங்கினாள். எங்களால் சமாதானம் சொல்ல முடியவில்லை. மூனா வலியால் துடித்தாள். என்கையை இறுக்கிப் பிடித்துக் கொண்டாள். எனக்கு என்னவோ செய்தது. என்னால் அதிக நேரம் தாக்குப் பிடிக்க முடியவில்லை. உள்ளே அவளைப் பார்த்துக் கொண்டு நிற்பதா அல்லது வெளியே போவதா என்பது எனக்குப் புரியவில்லை.

உள்ளே நடக்கும் மரணப் போராட்டம் ஓய வேண்டும். பிள்ளை பிறந்தது எனத் தகவல் வரவேண்டும். கணங்கள் யுகங்களாக நிலைக்க மனது தவித்தது. மரணவேதனைப் பட்டுத்தான் மகவு பெறவேண்டும் என்கின்ற மாற்ற முடியாத உண்மை உறைத்தது. ஆணாய் அனுபவிக்க முடியாத அந்த வேதனையை எண்ணி என்னால் பெண்கள் மீது இரக்கம் கொள்ள முடிந்தது.

வம்ச விருத்தி சிற்றின்பத்தில் ஆரம்பித்து இரத்தம் பிழியும் வேதனையோடு பிரசவமாகிறது. உலகத்தில் இன்பமும், வேதனையும் இல்லாத வம்ச விருத்தி இருக்க முடியாது. புணருவது எல்லா உயிர்க்கும் இன்பமாகும். முட்டை இடுவது தொடக்கம் குட்டி ஈனுவது வரை பிரசவம் எல்லா உயிர்க்கும் வேதனைதான். வம்சம் நிலைக்க வேண்டும் என்பதற்காக உயிரினங்கள் தன்னிச்சையாக ஏற்றுக் கொள்ளும் வேதனை.

'காய் புத்திரன்… வாங்க… வாங்க..'

மருத்துவிச்சிக்கு உதவியாய் இருந்தவள் என்னைப் பார்த்துக் கூவினாள்.

'என்ன பிள்ளை?' என்ற வண்ணம் ஆர்வக் கோளாற்றால் ஓடினேன்.

'ஆம்பிளைப் பிள்ளை' என்றாள் அவள்.

என் கேள்வி என்னை மடையன் என்றது. ஆணாய் இருந்தால் என்ன பெண்ணாய் இருந்தால் என்ன? எதற்காக நான் அப்படியொரு கேள்வியைக் கேட்டேன்? என்னை நானே செருப்பால் அடித்துக் கொள்ள வேண்டும் என்கின்ற அவஸ்தை.

ஆணாய் இருந்தால் என்ன? பெண்ணாய் இருந்தால் என்ன? என் வாரிசு. என் சந்தோசம். எனது மனது துள்ளிக் குதித்தது. நான் ஓட்டமும் நடையுமாக மூனாவை நெருங்கினேன்.

'பார்… பார்… எப்பிடி இருக்குப் பிள்ளை? நல்ல வடிவா இருக்குது. நல்ல அழகான நிறம்' அந்த உதவித் தாதி புகழ்ந்தாள்.

'அது உண்மைதான். அவன் குழந்தை முருகனைப் போல வடிவு. பழுத்த மாம்பழம் போன்ற தங்க நிறம். பெரிய நாவற் பழம் போன்ற கருவிழிகள். குயில் இறகின் நிறத்தில் தலைமுடி'

மருத்துவிச்சியும் சேர்ந்து கொண்டாள். மூனா அவர்களின் புகழுரையைக் கேட்டு வேதனை மறந்து சிரித்தாள். பின்பு மருத்துவிச்சியை நோக்கி,

'எப்பிடி இருக்குப் பிள்ளை? என்ன மாதிரியா, அல்லது புத்திரன் மாதிரியா?' என்றாள்.

'உன்ன மாதிரிதான் இருப்பான். தலைமுடி மாத்திரம் கருகருவெண்டு இருக்கும். நல்ல அழகான நிறமாய் இருப்பான்' என்றாள் மருத்துவிச்சி.

'தாங்ஸ். தாங்ஸ்'

'நான் பிள்ளையை வைச்சிருக்கலாமே?'

'தாராளமா… இந்தாங்க'

அந்த உதவித் தாதி என்னிடம் அந்தக் குருத்தைத் தூக்கித் தந்தாள். அவன் வீரிட்டான். நான் என் விரலால் அவனைத் தடவிப் பார்த்தேன். நான் அப்பா என்கின்ற சந்தோஷம் என் கால்களைப் பூமியில் பதிய விடாது துள்ள வைத்தது. இந்த ரோஜாப் பூவை எவ்வளவு நேரமும் வைத்திருக்கலாம். கொஞ்சி மகிழலாம். மழலைச் செல்வம் கொஞ்சக், கொஞ்ச அலுக்காது என்பதாய் மனது அடித்துச் சொன்னது. பிஞ்சு ஒன்றைத் தூக்கி வைத்திருப்பது பரம ஆனந்தமென எனக்குத் தோன்றியது. நான் அதிக நேரம் வைத்துக் கொண்டிருக்க அந்த உதவித் தாதி விடவில்லை.

'என்னிட்டைத் தாங்க' என்றாள்.

நான் ஏன் என்பதான கேள்வியோடு அவளைப் பார்த்தேன். அதைப் புரிந்து கொண்ட அவள்,

'நிறுக்கோணும். இன்னும் உடுப்புகள் போட வேணும். பரிசோதிக்க வேணும்' என்றாள். நான் வேறு வழியில்லாதும், மனமில்லாதும் சிரித்த வண்ணம் பிள்ளையைக் கொடுத்தேன். அதன் பின்பு ஆனந்த மிகுதியில் மூனாவின் அருகே அமர்ந்து அவளுக்கு முத்தமிட்டேன். அத்தோடு மெதுவாக அவளது முதுகை தடவிக் கொடுத்தேன். அவள் என்கையை தன் கையால் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள்.

அந்த விடுமுறை நாட்கள் மகப்பேற்றின் பின்னான சந்தோசத்தில் கழியத் திங்கள் நான் பாடசாலைக்குப் போக வேண்டியது கட்டாயமாகியது. நான் பாடசாலைக்குச் செல்ல மனமில்லாது சென்றேன். பாடசாலைக்கும் மருத்துவமனைக்கும் அதிக தூரம் இருக்கவில்லை. அரை நேரத்துடன் அதிபரிடம் கேட்டுவிட்டு மாமா தந்துவிட்டுப் போன காரில் மீண்டும் வைத்தியசாலைக்கு வந்தேன். மூனா மருத்துவ மனையில் மூன்று நாட்கள் தங்கினாள். பின்பு வீட்டிற்கு அனுப்பி வைத்தார்கள். மூனாவின் தாய் வந்து அவளை அழைத்துச் சென்றார்.

★

பிள்ளை பிறந்த பதின்நாலாவது நாள் மீண்டும் நான் விடுமுறைக்கு மூனாவிடம் சென்றேன். இம்முறை காரில் பயணம் செய்வதான வசதி. அதற்கு மாமா தந்துவிட்டுப் போன கார் என்னிடம் நின்றது. வெளியே காரை நிறுத்திவிட்டு வீட்டிற்குள் வரும் போது பிள்ளை அழும் சத்தம் கேட்டது. நான் அவசரமாக ஓடிப் போனேன். என் வரவை மூனா அறிந்து விட்டாள்.

'காய்' என மூனா குரல் கொடுத்தாள்.
'காய்'

நான் ஆவலோடு பிள்ளையைத் தூக்கினேன். வைத்தியசாலையில் பார்த்ததைவிட இப்போது அழகாகவும் துடுதுடுப்புடனும் பிள்ளை என்னைப் பார்த்து? நெளிந்தது. கையில் தூக்கி வைத்து அவன் பிஞ்சுக் கைக்குள் என் விரலை விட அவன் அதை இறுக்கிப் பிடித்துக் கொண்டான். இப்படிப் பிடிப்பது வளர வளரப் போய்விடும். ஒரு குழந்தை பிஞ்சு விரலால் அப்படிப் பிடிப்பது எல்லோருக்கும் சந்தோஷத்தை உண்டு பண்ணும். எனக்கு அதற்கும்மேல். நான் பிள்ளையையும் அதன் விளையாட்டையும் பார்த்து என்னை மறந்து இருக்க மூனா என்னைக் கூப்பிட்டாள்.

'புத்திரன் பிள்ளையை இங்க கொண்டு வாங்க' என்றாள்.

அவள் இப்போது தொலைக்காட்சி பார்த்துக் கொண்டு இருந்தாள். மாமியார் ஏதோ சமையலறை அலுவலில். நான் பிள்ளையைத் தூக்கிக் கொண்டு அவள் இருக்கும் இடத்திற்குச் சென்றேன். பக்கத்தில் இருக்குமாறு சைகை காட்டினாள். பக்கத்தில் இருந்தவுடன் பிள்ளையைத் தருமாறு கையை நீட்டினாள். நான் சிரித்த வண்ணமே பிள்ளையைக் கொடுத்தேன். பிள்ளை சிணுங்கியது. அவள் அவனுக்குப் பாலுட்டத் தொடங்கினாள்.

‘சொறி மூனா... நீ எப்பிடி இருக்கிறாய்? பிள்ளையைப் பார்த்ததும் நான் அதைக் கேட்க மறந்து போனன்’ என்றேன். அதை அவள் பெரிது படுத்தவில்லை.

‘நல்லாத்தான் இருக்கிறன்’ என்றாள்.

‘வயித்து நோவெல்லாம் விட்டிட்டுதே?’

‘சாதுவாக இருக்குது’

‘அது கொஞ்சம் கொஞ்சமா மாறீடும். இஞ்ச உங்களுக்கு எல்லாம் ஒண்டுதான். எங்கட ஊரிலை எண்டா எத்தின விதமான பராமரிப்பெல்லாம் இருக்கும்’

‘அப்பிடி என்ன செய்வினம் அங்க?’

‘நீ இப்ப என்ன சாப்பிர்றா?’

‘வழமையாகச் சாப்பிர்றதுதான்’

‘ஊரிலை இப்பிடிச் சாப்பிட விடமாட்டினம். பிள்ளைப் பெத்தவைக்கு காலமையில காயம் அரைசுக் காய்ச்சிக் குடுப்பினம். படு கச்சலாக இருக்கும் எண்டு கேள்வி. ஆனா குடிச்சேதான் ஆகோணும். பிறகு மத்தியானச் சாப்பாட்டுக்கு பத்தியமாத் தூள் இல்லாமல் மல்லியில மாத்திரம் கறி வைச்சுச் சோறு குடுப்பினம்.’

‘ஏன் அப்பிடியெல்லாம் செய்யிறவ?’

‘தெரியாது. ஆனா இது வழி வழியா வந்த முறை. இப்ப தாய் சாப்பிடுகிற சாப்பாட்டின்ர குணத்தைப் போலத்தான் பாலிருக்கும் எண்டு சொல்லுகினம் இல்லையா? அதை அவை அப்பவே புரிஞ்சிருக்க வேணும்.’

‘ம்... அது உண்மைதான். வேற என்ன செய்வினம்?’

‘அது நிறைய நடக்கும். தாய் குளிக்கோணும் எண்டா ஆமணக்கு, பிரண்டை எண்டு நிறைய இலை எல்லாம் பிடுங்கி வந்து அவிச்சு அதிலைதான் தாயக் குளிக்க வார்ப்பினம்’

‘தாய்க்கு மாத்திரம் தானோ?’

‘பிள்ளையை விட்டிடுவினமோ? அதுக்கும் அப்பிடித்தான்’

‘என்ன செய்வினம்?’

‘பிள்ளைக்கு எண்ணை பூசுவினம். பிறகு மூக்கு, காது, பல்லு எல்லாம் பிடிச்சு விடுவினம். பிறகு சிலர் பிள்ளையைக் கொஞ்ச நேரம் இளம் வெயில்பட விடுவினம். பிறகுதான் பிள்ளையை முழுக வார்ப்பினம்’

‘இதெல்லாம் தாயே செய்யோணுமா?’

‘அந்தப் பிரச்சனை அங்க இருக்காது’

‘அப்ப?’

‘அங்க தாய், அம்மம்மா, அப்பாச்சி, பெரியம்மா, மாமி எண்டு யாராவது நிச்சயமா உதவி செய்வினம்’

‘ஏன் அப்பிடியெல்லாம் செய்யிறவை? நாங்க அதெல்லாம் செய்யாமல் நல்லாத்தானே இருக்கிறம்’

‘ஒவ்வொருத்தற்ற கலாசாரம் ஒவ்வொரு மாதிரி’

‘அதால நன்மை இருக்கா?’

‘தெரியேல்லை. ஆனா வழி வழி வாற சடங்குகளில அர்த்தமில்லாமலும் இல்லை. நிச்சயம் நன்மை ஏதாவது இருக்கும். செவ்வந்தியர் செய்யிற சடங்குகளிலும் பல நன்மை இருக்கிறதை இப்ப கண்டு பிடிச்சு இருக்கிறாங்கள் தானே? அதை மாதிரி இதிலேயும் நன்மை இருக்கலாம். இருக்க வேணும்.’

‘பிள்ளை பிறந்தா வேற என்னவெல்லாம் செய்வினம்?’

‘அது நிறைய விஷயம்’

‘சொல்லுங்களேன்’

‘பிள்ளைப் பெத்தவையத் தனியா ஒரு அறையிலதான் வைச்சிருப்பினம். முப்பத்தோராவது நாள் ஐயரைக் கூப்பிட்டுத் தொடக்குக் கழிப்பினம். அதன் பிறகுதான் அவ எல்லா இடமும் பழக அனுமதி கிடைக்கும்’

‘இது மூடநம்பிக்கை மாதிரி இருக்குதே?’

‘எனக்கும் இதில நம்பிக்கை கிடையாது. ஆனா எங்கட சடங்குகள் இந்து மத அடிப்படையிலான சடங்குகள். அதை எங்கட மக்கள் ஆழமாக நம்புகினம்’

‘சாப்பாடு தயார்’

மாமியார் குரல் கொடுத்தார். மூனா என்னைப் பார்த்தாள். நான் அதைப் புரிந்து கொண்டு எழுந்தேன். நித்திரையில் இருந்த குழந்தையை மெதுவாகத் தொட்டிலில் படுத்திவிட்டு மூனாவும் வந்தாள்.

பின்னேரச் சாப்பாடு மேசையில் பரப்பப்பட்டிருந்தது. ஏகப்பட்ட விதங்களில் பாணுக்கு வைத்துச் சாப்பிடும் உப உணவுகள் இருந்தன. நாங்கள் கூச்சமில்லாது சாப்பிடத் தொடங்கினோம்.

‘பிள்ளைக்குப் பெயர் வைக்கேல்லையே?’ என மாமியார் தொடங்கினார்.

‘என்ன பெயர் வைக்கலாம் அம்மா?’ என்றாள் மூனா.

‘காறால்ட் எண்டு வைச்சா என்ன?’ என்று மாமியார் தொடர்ந்தார்.

‘புத்திரன் நீங்கள் என்ன நினைக்கிறியள்?’ என்று மூனா என்னைப் பார்த்துக் கேட்டாள்.

‘நான் என்ர விருப்பத்தைச் சொன்னாக் கோபிக்கக் கூடாது’ என்றேன்.

‘ச்... இங்க யாரும் கோபிப்பினமா? தயிரியமாச் சொல்லுங்கோ புத்திரன்’ என்று மாமியும் உசார் பண்ணினார்.

‘இந்தப் பிள்ளைக்கு நான் விரும்பிற பெயரை வைக்கோணும் எண்டு ஆசைப்பர்றன். அடுத்த பிள்ளைக்கு உங்களுக்கு விருப்பமான பெயரை வைக்கலாம். நான் அதுக்கு எதுவுமே சொல்லமாட்டன்’ என்றேன்.

சிறிது நேரம் திடீர் அமைதி. மூனாவிடம் முதலில் அமைதி. பின்பு ஒரு வித சலிப்பு ஒலியாக வெளிவந்தது. ஏன் என்பது எனக்குப் புரியவில்லை. நான் சொன்னதில் பிழை ஏதும் உண்டா என்கின்ற தவிப்பு என்னிடம். அப்படி எதுவும் இருப்பதாய் எனக்குத் தோன்றவில்லை. மாமி மீண்டும் கதைத்தார்.

‘மூனாவும் விரும்பினா உங்கட விருப்பம். எனக்கு எங்கட பெயர் வைக்கிறதுதான் விருப்பம்’ என்றார்.

‘மூனா?’ என்றேன்.

‘நீங்க சொன்னதையே நானும் திருப்பிச் சொன்னா?’ என்றாள்.

நான் அவள் அப்படிக் கதைப்பாள் என்று எதிர்பார்க்கவில்லை. ஒரு கணம் திகைத்துப் போனேன். சண்டை வேண்டாம் சமாதானம் செய்யென மனது அடித்துக் கொண்டது. எனது ஆசையை விசாவை நினைத்து விட்டுக் கொடுக்கத் துணிந்தேன். இருப்பிற்கு நாசம் ஏற்படாது பார்த்துக் கொள்ள வேண்டும் என்பது முதன்மையானது.

மூனா பிடிவாதம் பிடிக்கத் தொடங்கினால் என்னைவிடக் கடுமையாகப் பிடிவாதம் பிடிப்பாள். நேர்ப் பாதை இதற்குச் சரிவராது எனப்பட்டது. உடனே தலைகீழாக மாற்றிக் கதைத்தேன்.

‘பெயர் பெரிய விஷயம் இல்லை மூனா. உன்ர அன்புதான் முக்கியம். நீ என்னிலை எப்பிடி அன்பு வைச்சிருக்கிறாய் எண்டது எனக்குத் தெரியும். நீ என்ன பெயரெண்டாலும் வை. எனக்கு அது சம்மதம்தான். உன்ர அன்புக்கு முன்ன இந்தப் பெயர்ப் பிரச்சனை தூசு மாதிரி’ என்று கூறிவிட்டுச் சாப்பிட்டு முடிந்ததால் கோலுக்குப் போக எழும்பினேன். மூனா விடவில்லை.

‘இருங்கோ புத்திரன்... எங்க ஓடுறியள்?’ என்றாள்.

‘சரி உன்ர விருப்பம்’ என்றுவிட்டு இருந்தேன்.

‘நீங்க என் மேல இவ்வளவு அன்பு வைச்சிருக்கிறியளா?’ என்றாள்.

‘மனதில இருக்கிறதை எல்லாம் கொட்ட வார்த்தை கிடையாது மூனா’ என்றேன். அவள் கண்கள் திரையிட்டுக் கொண்டன.

‘புத்திரன்? உங்களுக்கு விருப்பமான பெயர் ஒண்டு சொல்லுங்க’ என்றாள்.

‘இல்ல வேண்டாம்’ என்றேன்.

‘பிளீஸ். நான் முதல்ல வேண்டாம் எண்டதுக்குச் சொறி’ என்றாள்.

‘நித்தி எண்டு வைப்பமா?’ என்றேன்.

‘நித்தி. நல்ல பெயரெல்லே அம்மா?’ என்றாள் சம்மதம் கேட்பது போல மாமியைப் பார்த்து.

‘நித்தி. நல்ல பெயர்தான்’ நமட்டுச் சிரிப்போடு மாமி கூறினார். அவருக்குப் பெயரால் அந்தச் சிரிப்பு வரவில்லை. அதைச் சம்மதிக்க வைத்த முறையால் அது வந்தது என்பது எனக்கு நன்கு விளங்கியது. மூனா சாப்பிட்ட பின்பு குழந்தையைத் தூக்கி வைத்து நித்தி நித்தியெனக் கூறிய வண்ணம் கொஞ்சினாள். அந்த நினைவு நேற்றுக் கேட்ட பாட்டாக இன்னும் பசுமையாக என் மனதில் நிலைத்திருக்கிறது.

# 7

என்னை மீறிக் கண்கள் மூடிக் கொள்ள நான் அப்படியே அயர்ந்து போய்விட்டேன். ‘காய்’ என்கின்ற அழைப்பு காதருகிற் கேட்டது. நான் திடுக்குற்று விழித்த போது அந்தத் தாதி குனிந்து என்னைப் பார்ப்பது புரிந்தது. நான் விழித்து விட்டேன் என்பதை அவள் உறுதி செய்ததும்,

‘காய். கோப்பி வேணுமா?’ என்று கேட்டாள்.

‘ம்… வையுங்கோ’ என்றேன்.

‘வேற ஏதாவது உதவி வேணுமா?’ என்றாள்.

‘கோப்பி குடிச்சு முடிஞ்சாப் பிறகு நான் கோலுக்குப் போறத்துக்கு உதவினியள் எண்டா நல்லா இருக்கும். நான் அங்கேயே பின்னேரச் சாப்பாட்டையும் சாப்பிடுவன்’ என்றேன்.

‘அதுக்கென்ன. நான் கோப்பியைக் கொடுத்திட்டு வாறன்’ எனப் பதிலளித்துவிட்டு அவள் வெளியே சென்றாள். அவள் பின்னழகு மூனாவின் பின்னழகை எனக்கு ஞாபகப்படுத்தியது. அவள் எனக்குக் கிடைத்தது அதிர்ஷ்டம்தான். கடைசிவரையும் அது நிலைக்காமல் போனது எனது வாழ்வே தொலைந்து போனது போல. என்றும் வேதனையை ஊற்றுக் கண்ணாக்கும் அதன் மாறாத நினைவுகள். கோப்பி ஆறிவிடும் என்கின்ற நினைப்பு வந்தவுடன் அதை எடுத்துப் பருகினேன். நான் எதிர்பார்த்தபடியே அந்தத் தாதி வந்தாள். அவள் வரும் முன்பே நான் ஒருவாறு வண்டியில் ஏறி இருந்துவிட்டேன். அவள் நான் நன்கு கதிரையில் இருக்கிறேனா எனப் பரிசோதித்தாள். பின்பு,

‘அப்ப நாங்கள் போக வேண்டியதுதான்?’ என்றாள்.

‘ம்..’

‘உங்கட பிரெண்ட் ஏற்கனவே வந்திட்டார். அவர்தான் முதல்ல படுக்கப் போறன் எண்டு போனவர்’ என்றாள்.

அவள் கோலுக்குக் கூட்டிச் சென்று ஒரு கதிரையில் இருப்பதற்கு உதவி செய்தாள். நான் அவளுக்கு நன்றி கூறினேன். அவள் அழகாகச் சிரித்து விட்டுச் சென்றாள். நான் சிறிது நேரம் குமரேசனைப் பார்த்துக் கொண்டு இருந்தேன். அவன் எதையோ பறிகொடுத்தது போலச் சோகமாக இருந்தான்.

‘என்ன குமரேசா சோகமாய் இருக்கிறாய்?’ என்றேன்.

‘உனக்கு விஷயம் தெரியாதெண்டு நினைக்கிறன்’ என்றான் அவன்.

‘என்ன விஷயம்?’

‘அந்த எட்டாம் நம்பர் றுமில இருந்தார்…’

‘ஓ… மொல்டன். ஆளுக்கு நல்லா ஏலாது. எல்லாம் படுக்கையிலதானே செய்யிறவை. பாவம் என்ன?’ என்றேன்.

'வேற என்ன படுக்கையிலேயே மலசலம் போகுது. நல்ல வேளையா இங்க இந்தப் பிள்ளையள் உதவி செய்யினம். இல்லாட்டி எங்கட நாடுகள் மாதிரி இருந்தா உதவிக்கு ஆள் இல்லாட்டி எவ்வளவு கஸ்ரமா இருக்கும்?' என்றான் அவன்.

'உண்மைதான்... இங்க வசதிகள் நிறையத்தான் இருக்குது' என்றேன்.

'அவரப் பாக்கேக்க இப்பிடியெல்லாம் ஒரு நாளும் கிடந்து இழுபடக் கூடாது எண்ட நினைப்புத்தான் வரும்' என்றான் குமரேசன்.

'எல்லாருக்கும் அப்பிடித்தான் ஆசையா இருக்கும்'

'உடல் ஏலாமல்ப் போய்க் கனகாலம், ஆனா உயிர் மாத்திரம் போகாமல் ஒட்டிக் கொண்டு கிடந்து இழுத்திச்சு' என்றான் அவன்.

'இதுக்கே இப்ப இப்பிடி இருந்தனீ?' என்றேன்.

'இல்ல. நீ கதையைத் திசை திருப்பிப் போட்டா' என்றான்.

'அப்ப போயிட்டாரோ?'

'அந்தாள் இண்டைக்குத்தான் மண்டையைப் போட்டாராம். அறையில ஆட்கள் நிண்டவை' என்றான்.

'அதுவும் நல்லதுதான். கிடந்து இழுபடுகிறது அதைவிட அவஸ்தையானதுதானே? நேற்றிருந்தார் இன்று இல்லை எண்ட மாதிரியான கலக்கம் எங்களுக்கு. அதுதான் வாழ்க்கை குமரேசா' என்றேன்.

'காய்! உங்களுக்குப் பின்னேரச் சாப்பாடு கொண்டு வந்திருக்கிறம்' என்றாள் அந்தத் தாதி.

'ம்... தாங்ஸ்'

அவர்கள் ஒரு தட்டில் இரண்டு பாண் துண்டுகளை வைத்திருந்தார்கள். அந்தப் பாண் துண்டில் ஒன்றிற்கு தக்காளிக் குளம்பில் ஊறிய சிறிய மீன்கள் வைக்கப்பட்டிருந்தன. மற்றையதற்கு சீஸ் வைத்து அதற்குமேல் ஜாமும் பூசியிருந்தது. அத்தோடு ஆளுக்கு ஒரு கண்ணாடிக் குவளையும் வைத்து எங்களுக்கு முன்பு பால்ப் பெட்டி ஒன்றையும் வைத்து விட்டுச் சென்றார்கள். இது வழமையான சாப்பாடுதான். நான் எதை முதலில் சாப்பிடலாமென யோசித்தேன். பின்பு மீன் வைத்த பாண் துண்டைச் சாப்பிட்ட பின்பு ஜாமும், சீஸ்சும் உள்ளதைச் சாப்பிடலாமென எண்ணினேன். கடைசியாக இனிக்க வேண்டும் என்கின்ற ஆசை. குமரேசன் யோசித்துக் கொண்டு இருந்துவிட்டு,

'ஒரே சாப்பாடுதான்' என்றான்.

'இல்ல ஒவ்வொரு நாளும்தானே செய்து வருகுது... சத்தானதுதானே? உனக்கு எது வேணும் எண்டு கேட்டா அதைப் பூசித் தருவினம் தானே?' என்றேன்.

'ம்... அது உண்மைதான். ஆனா எங்கட சாப்பாடு மாதிரி வருமே?' என்றான்.
இந்தப் பல்லவிக்கு முடிவு இருக்காது. நான் எதுவும் சொல்லவில்லை.

'நீ சாப்பிடுறியே?'

'சாப்பிடாம?' விளங்காது கேட்டேன்.

'அவன் செத்துக் கிடக்கிறான். பிரேதம் கீழ ஐஸ்றுமுக்க இருக்கோணுமாக்கும். நாங்கள் இதை எப்பிடிச் சாப்பிடுறது?' என்றான்.

'இப்பிடி நீ நினைச்சியெண்டா இங்க இருந்து கொண்டு சாப்பிடவே ஏலாது. நீ சிலதை இன்னும் பிடிச்சுக் கொண்டு தொங்குகிறாய்' என்றேன்.

'இல்லையடா எங்கட ஊரெண்டா இப்பிடிச் செய்வமே?'

'அது ஒண்டும் செய்யேலாது... ஊருக்கு ஏற்ப சில விசயங்களில எண்டாலும் நாங்கள் விட்டுக்கொடுக்கத்தான் வேணும். இல்லாட்டி இங்க வராமல் இருந்திருக்கோணும்' என்றேன்.

'நானே வந்தன்? இப்ப என்ன செய்யலாம் எண்டுறா?'

'சாப்பிடு. என்ன பேசாமல் இருக்கிறா? சாப்பிடு குமரேசா..'

குமரேசன் ஒருவித அவஸ்தையோடு சாப்பிடத் தொடங்கினான். நாங்கள் சாப்பிடும் போது கோப்பி வந்தது. அதை வாங்கிக் குடித்தோம். இவர்கள் கொழுப்புச் சாப்பாட்டைக் கட்டுப்படுத்த அது மிகவும் அவசியமானது.

★

ஏதோ ஒருவித உந்தல். கடமையைச் செய்யவில்லை என்கின்ற மனதின் ஓயாத குற்றச்சாட்டு. நான் ஒன்பது மணி போல எனது அறைக்கு வந்துவிட்டேன். தொடர்ந்து எழுத வேண்டும். அதை முடித்து வெளியிட முயற்சிக்க வேண்டும். கனவை நினைவாக்க வேண்டும் என்கின்ற வெறி என்னிடம் இருந்தது.
கனினியை இயக்கினேன். எந்த இடத்தில் கடைசியாக விட்டேன் என எண்ணிப் பார்த்தேன். சில கணங்கள் மூளை அறுந்த ஞாபகங்களைத் தேடி அவஸ்தைப்பட்டு பின்பு அதைப் பற்றியது.

ம்… பிள்ளை பிறந்து அதற்குப் பெயரும் வைத்தோம். அன்றைய பின்னேர விவாதத்தின் பின்பு அவர்கள் அந்தப் பெயரைப் பற்றி அதிகம் விவாதிக்கவில்லை. நானும் முக்கியமான ஒன்றை விட்டுக் கொடுக்க வேண்டி வந்தது. அப்பாவின் பெயருக்குப் பதிலாகக் குடும்பத்தின் பெயரைத்தான் இரண்டாவது பெயராக இவர்கள் போடுவார்கள். அதில் எந்த மாற்றமும் என்னால் கொண்டு வரமுடியவில்லை. அதன் பின்பு நித்தியின் முழுப்பெயர் நித்தி றஸ்வீக் ஆகியது. பாவம் அக்கினிபுத்திரன் அநாதையானான்.

★

எனது பாடசாலை பத்து மாதத்தில் முடிவடைந்தது. நான் மூனாவீட்டில் நிரந்தரமாகத் தங்கத் தொடங்கினேன். மூனாவின் அப்பா கோடை காலத்தில் வேலை செய்வதற்கு எனக்கு ஒரு கடையில் வேலை எடுத்துத் தந்தார். நான் அந்தக் கடையில் தொடர்ந்தும் வேலை செய்தேன். அவர் அதை எதிர்பார்க்கவில்லை. எனக்கு அந்த வேலை பிடித்துக் கொண்டது. அதைவிட மூனாவின் அண்மை நித்தம் தேவைப்பட்டது. இன்னொரு வேலை தேடிக் கொண்டு இடம்மாறிப் போவது பற்றி என்னாற் கற்பனை செய்ய முடியவில்லை. மூனா என்கிற பெயரில் அழகிய மனைவி, அற்புதமாக ஆசைக்கு ஒரு குழந்தை, என்பதாக எல்லாமே எனக்குப் பிடித்துக் கொண்டன. நான் இங்கு வந்த பின்பு ஊருக்கு உண்மைகளை விபரித்து மூன்று கடிதம் அலுக்காது போட்டேன். அங்கிருந்து காற்றுகூடப் பதிலாய் வரவில்லை. அவர்களின் கோபம் எனக்கு விளங்கியது. குமரேசனின் கடிதத்தில் அவை எழுதப்பட்டிருந்ததாம். பறங்கிக்காரியைக் கலியாணம் செய்து தங்கள் கனவையெல்லாம் பாழடித்து விட்டான் எனக் குற்றம் சாட்டி இருக்கிறார்கள். அவர்களின் கோபம் நியாயமானது என்றால் எனது விருப்பமும் நியாயமானது என்றே நான் எண்ணிக் கொண்டேன். நியாய அநியாயங்கள் நிலையற்றதாக எனக்கு இது நியாயமாகப் பட்டதால் நான் அலட்டிக் கொள்ளவில்லை. நான் அவர்களுக்கு ஒரே பிள்ளை எனக்கு அவர்கள் நினைவும், அவர்களுக்கு என் நினைவும், அழிக்க முடியாத கல்வெட்டுக்கள். கவலை சுரக்கும் ஞாபகங்களின் தூங்கிவிடாத அவஸ்தையின் தொடர்.

பிள்ளை பிறந்து விட்டது என்று கடிதம் எழுதியதற்கு இரண்டு மாதம் கழித்து அம்மா பதில் கடிதம் போட்டிருந்தார். ‘எங்காவது நீ சந்தோஷமாய் இருந்தால் சரி’ என்று அதில் எழுதப்பட்டிருந்தது. அப்பா மிகவும் கோபமாய் இருந்தாராம். அவர் பிடிவாதம் எனக்குத் தெரியும். கட்டுப்பாடுகள், கௌரவங்கள் தாழ்ந்து போகக்கூடியதாக நான் கட்டுடைத்ததை அவர் தாங்கிக் கொள்ள மாட்டார். மன்னிப்புத் தரமாட்டார்.

★

நித்தி பிறந்து மூன்று வருடங்கள் ஆகியது. எங்கள் உறவு சேர்ந்து வாழ்வதோடு நின்றுவிட்டது. எங்களுக்கிடையே எந்த ஒப்பந்தமும் இருக்கவில்லை. ஒப்பந்தம் வேண்டுமா அல்லது வேண்டாமா என்பதைப் பற்றி நான் எதுவும் அப்போது சிந்திக்கவில்லை. ஒப்பந்தத்தால் இங்கு சில நன்மைகள் இருக்கின்றன. அது

எனக்குத் தெரிந்தாலும் எனக்கு அதைப் பற்றி அலட்டிக் கொள்ளத் தோன்றவில்லை. மூனாவும் எதுவும் அதைப் பற்றிக் கதைக்கவில்லை. விடுமுறை கிடைத்தால் நகர வாழ்வின் சந்தடியில் இருந்து விடுதலை பெற வேண்டும் என்கின்ற துடிப்பு. அதற்காக மலைகள் காடுகளென மனித சஞ்சாரம் குறைந்த இடங்களை நோக்கி ஓடுகின்ற ஆர்வம். மூனாவும் கித்தை எனப்படு மலையில் உள்ள சிறு வீட்டிற்குச் செல்லத் துடித்தாள். அது ஓய்வு காலத்தில் இயற்கையோடு ஒன்றி வாழ்வதற்கு ஏற்ற இடம். அங்கே அதிக வசதிகள் இருக்காது. ஆனால் அமைதி நிறைந்திருக்கும்.

நாங்கள் வண்டியில் மலைக்குச் சென்ற போது பதினொரு மணி இருக்கும். பொருட்களை அந்தச் சிறு குடிலிலே வைத்துவிட்டு வெப்பம் ஏற விறகை எரியச் செய்தோம். பின்பு அந்த இயற்கையை அனுபவிக்க நித்தியோடு கால் நடையாக நடக்கப் புறப்பட்டோம். மூனா அவுரிநெல்லிப் பழங்களை அதற்கான கருவியால் ஒரு வாளியில் ஆய்ந்து போட்ட வண்ணம் எங்களோடு நடந்து வந்தாள். நான் நித்தியின் கையைப் பிடித்த வண்ணம் நடந்து சென்றேன். நடந்து களைத்த பின்பு நாங்கள் குடிலுக்குத் திரும்பினோம். உள்ளே விறகு எரிந்து இப்போது நல்ல கதகதப்பாய் இருந்தது. உள்ளே வந்ததும் நித்திக்கு முதலில் மூனா சாப்பாடு கொடுத்தாள். அவன் சாப்பிட்ட சிறு கணத்தில் நித்திரை கொண்டு விட்டான். நாங்கள் சாப்பிடுவதற்காய் இறைச்சி வாட்டினோம். இருவருமாக வாட்டிய இறைச்சியோடு அதற்குத் தோதான மற்றும் உணவுகளையும் சேர்த்துச் சாப்பிடத் தொடங்கினோம். சாப்பாட்டிற்கு ஏற்றாப் போல் மூனா சிவப்பு வையின் பரிமாறினாள்.

போதையும் வெக்கையும் பாவையின் அண்மை கேட்டது. அது மூனாவின் பார்வையிலும் எதிர்ப்பட்டது. நான் எழுந்து அவளை அள்ளிக் கொண்டு அங்கிருந்து படுக்கைக்குச் சென்றேன். அவள் இன்பமாகச் சிணுங்கினாள். அதற்கு மேல் நாங்கள் உலகை மறந்து அங்கே சிற்றின்ப வேட்கையில் கூடினோம். பின்பு களைத்து ஆளையாள் அணைத்தபடி படுத்திருந்தோம். அந்த அணைப்பில் இருந்த அமைதியை மூனாதான் குலைத்தாள்.

'புத்திரன்?'

'ம்..'

'நாங்க இப்பிடியே தொடர்ந்து இருக்கலாமோ?'

'என்ன சொல்லவாறாய்?'

'இல்ல எங்களுக்கிடையில எந்த ஒப்பந்தமும் இல்லையே?'

'அது வேணும் எண்டு நினைக்கிறியா?'

'இருந்தா நல்லது புத்திரன். முதல்ல நித்திய நாங்கள் நினைச்சுப் பாக்கோணும். அதைவிட அதால சில சலுகைகளும் கிடைக்கும். அப்பா அம்மாவுக்கும் சந்தோசமாய் இருக்கும்.'

'அதுக்காக ஒப்பந்தம் வேணும் எண்டுறியா? இல்லாட்டியும் நித்தியச் சந்தோஷமாகத்தானே வைச்சிருக்கிறம்.'

'புத்திரன்? ஏன் இப்பிடிக் கதைக்கிறாய்? உனக்கு விருப்பமில்லையா? உன் விருப்பத்தைக் கேட்டன். விரும்பினாச் செய்யலாம். இல்லாட்டி இப்பிடியே எவ்வளவு காலம் இருக்கேலுமோ அவ்வளவு காலம் இருந்திட்டுப் போயிடலாம்' அவள் அந்தக் கேள்வியை என்னிடம் இருந்து எதிர்பார்த்திருக்க மாட்டாள். நான் நழுவுவதாய் அவள் நினைத்திருக்கலாம். அதற்கான அவளின் பதிலும் எனக்குப் புளியைக் கரைத்தது. நான் அவளைச் சமாதானம் செய்தேன்.

'கோவிக்காத மூனா'

'கோவிக்கேல்லை... நடைமுறையைத்தான் சொல்லுறன். நான் எப்பிடியானவள் எண்டது உங்களுக்குத் தெரியும். நான் என்னத்தை எதிர்பார்ப்பன் எண்டதும் உங்களுக்குத் தெரியும்' என்றாள்.

'எனக்கு இதிலை எந்தப் பிரச்சனையும் இல்லை மூனா. நீ றெடியெண்டா நானும் றெடிதான்' என்றேன். அவள் அந்தப் பதிலைக் கேட்டுச் சிரித்த வண்ணம்,

'எனக்கும் தெரியும் நீங்க இதுக்கு எதிர்ப்புத் தெரிவிக்க மாட்டியள் எண்டு. ஆனாப் பெரியதொரு சிக்கல் இருக்குது' என்றாள். ஒப்பந்தம் இல்லாமல் இருப்பது வசதி என்றாலும் அவள் விருப்பம் நிராகரிக்கப்படுவதால் அவளுக்கு ஏற்படும் மனவுளைவையும், நித்தியையும் எண்ணி நான் சம்மதித்தேன்.

‘என்ன?’

‘இருபத்தி ஐயாயிரம் குரோணர் எண்டாலும் அதுக்கு வேணும். உங்கட கணக்கில இருந்து தருவியளா?’ என்றாள்.

‘இதில என்ன இருக்குது? எங்கட கலியாணத்துக்குத் தானே செலவழிக்கிறம்?’ என்றேன். தனக்குத் தனக்கென என்கின்ற சுயநலத்தில் வளர்ந்த சமுதாயத்தில் வாழ்ந்ததால் வந்த கேள்வி என்பது புரிந்தது.

‘ம்... பிறமிஸ்’

‘பிறமிஸ்’

அவள் என்னைக் கட்டி அணைத்து முத்த மழை பொழிந்தாள். அவள் ஆனந்தத்தில் மிதப்பதைப் பார்க்க எனக்குச் சந்தோஷமாய் இருந்தது. ‘இதுக்கேன் இவ்வளவு அலட்டிக்கிறாய்?’ என்றேன்.

‘இங்க சொந்தக் கலியாணம் எண்டாலும் அரைக்கரைவாசி எண்டுதான் நிற்பினம். நீங்கள் முழுக்காசையும் தாறீங்களே... அதுதான்’ என்றாள்.

‘உன்னிட்டைக் காசில்லை அதால நான் தாறன். இதில என்ன இருக்குது?’

‘தாங்ஸ் புத்திரன். தாங்ஸ்’ என்றாள்.

‘உம்மட அப்பா, அம்மா என்ன நினைப்பினம்?’

‘அவை என்னத்தை நினைக்க முடியும்? ம்... நிச்சயம் சந்தோஷப்படுவினம் எண்டு நினைக்கிறன். அவைக்கு நாங்கள் கலியாணம் செய்யாமல் வாழ்கிறதுதான் பிடிக்கேல்லை. அந்த மூலை வீட்டில இருக்கிறானே அவனுக்குத்தான் கோவமா இருக்கும்’ என்றாள்.

‘ம்... ஏன்?’

‘அவன் ரசிஸ்ற். (நிறவெறி) அவன் கோவப்படத்தான் செய்வான். இதை யெல்லாம் நாங்கள் ஒரு பொருட்டாவே எடுத்துக் கொள்ளத் தேவையில்லை. சிலவேளை அந்த ‘ரசிஸ்ட்டு’க்கள் சந்தோஷப் படுவினமெண்டு நினைக்கிறன்’ என்றாள் அவள்.

‘பகிடி பண்ணுறா என்ன?’

‘இல்லை இல்லை. உண்மைதானே புத்திரன்?’

‘ம்...?’

‘உங்கட அப்பா அம்மா என்ன நினைப்பினம்?’ என்று அவள் கேட்டாள்.

‘அவை பழைய பல்லவியைத்தான் பாடுவினம்’

‘ஏத்துக்க மாட்டினமா?’

‘அவை இன்னும் சரியாய் விளங்கிக் கொள்ளேல்லை. அவை மாற நிறையக் காலம் எடுக்கும். அம்மா பிரச்சனை இல்லாட்டியும் அப்பா அப்பிடியே இருப்பார்’

‘நாங்கள் ஒரு நாளைக்கு அவையிட்டப் போகோணும்’

‘தாராளமாக... ஆனா என்ன நடக்கும் எண்டதுக்கு நான் பொறுப்பாளி இல்லை’

‘நீங்க என்னைப் பயப்பிடுத்திறியள்.’

‘நான் பயப்பிடுத்திறது எண்டு இல்லை. அவை இதைப் விளங்கிக் கொள்ள நிறையக் காலம் செல்லும். அவ்வளவுதான்’ என்றேன்.

‘அப்ப கொஞ்சக் காலம் கழிச்சு அவையிட்டப் போறது?’ என்றாள்.

‘நிச்சயமாக’

‘தாங்ஸ். நான் கலியாணவீட்டு அலுவலை அம்மாவைக் கவனிக்கச் சொல்லப் போறன்’

‘தாராளமாகச் சொல்லு’

‘அவையிட்டச் சொன்னாக் கொஞ்சம் உதவி அவையாலையும் கிடைக்கும்’ என்றாள்.

திடீரென நித்தி அழுதான்.

மூனா ஒரு துண்டைக் கட்டிய வண்ணம் அவனைப் போய்த் தூக்கிக் கொண்டாள்.

★

மூனா எங்கள் திருமணத் திட்டத்தைத் தனது தாய் தந்தையிடம் சொன்னாள். பெண்ணின் திருமணம் பார்க்க எண்ணமில்லாத தாய் தந்தையர் உலகத்தில் உண்டோ? அவர்களுக்குத் தலைகால் புரியாத மகிழ்வின் தடுமாற்றம். தாங்களே திருமணத்தை முன்னின்று செய்து வைப்பதாக ஒப்புக் கொண்டதோடு அதற்கான அலுவல்களையும் செய்யத் தொடங்கினார்கள். நான் கொடுக்கும் இருபத்தி ஐந்தாயிரத்திற்கு மேலும் செலவுகள் வந்தால் தாங்கள் அதைப் பொறுப்பு ஏற்பதாகவும் அவர்கள் ஒப்புக் கொண்டார்கள். இது எனக்கும் மூனாவுக்கும் பெரும் சுமையைக் குறைத்தது போல் ஆகிற்று. நாங்கள் நிம்மதியாக மூச்சு விட்டோம். அவர்கள் விருப்பப்படியே எல்லா ஒழுங்குகளும் செய்தார்கள். தேவாலயத்தில் மணவிழாவும், விடுதியில் விருந்துபசாரமும் நடத்துவதாகத் தீர்மானித்தார்கள். மொத்தமாக ஆறுபத்து மூன்று விருந்தினரை விருந்துக்கு அழைத்தார்கள். நான் கொடுத்த பணத்திற்கு மேல் அதிகமான பணம் செலவு செய்யப் போகிறார்கள் என்பது எனக்கு அப்போது புரிந்தது. இவ்வளவு ஆட்களை அழைத்து இங்கு விருந்து வைப்பது ஒரு பெரிய கலியாண விழாவிற்குச் சரிசமமானது. மூனாவுக்குக் கலியாணவீடு இவ்வளவு தடல்புடலாக நடக்கப் போவதில் ஏகப்பட்ட மகிழ்ச்சி. அவளது முகம் சந்தோஷத்தில் மலர்ந்த தாமரையாக ரோஜா நிறத்தில் எப்போதும் மின்னியது.

குறித்த நாளில் எங்கள் கலியாணம் தடல்புடலாக நடந்தது. நான் அப்பா அம்மாவுக்கும் அழைப்பிதழ் அனுப்பி வைத்தேன். அவர்கள் வரமாட்டார்கள் என்பது எனக்கு நன்கு தெரியும். அவர்கள் மனம் எரியும் என்பதை எண்ண என் இதயம் வலித்தது. ஒரு தாய் தகப்பனுக்குச் செய்யக்கூடிய பெரிய துரோகத்தைச் செய்த குற்றம் என்னை இடைவிடாது வாட்டியது. கலியாணம் முடிந்ததும் முதல் வேலையாகப் புகைப் படங்களும் இணைத்து வீட்டுக்கு விபரமான கடிதம் எழுதினேன். நாங்கள் விரைவில் அங்கே வருவோம் என்கின்ற தகவல் அந்தக் கடிதத்தின் சாராம்சம். ஒரு மாதத்தின் பின்பு பதில் வந்தது. நான் எதிர்பார்த்த திட்டுக்களுக்கு அதில் பஞ்சம் இருக்கவில்லை. 'பெத்தமனம் பித்துப் பிள்ளை மனம் கல்'லென வழமைபோல அம்மா ஒரு பாட்டுப் பாடியிருந்தார். ஒரு வேளை அது உண்மையாக இருக்கலாமோ என்கின்ற எண்ணம் அந்தக் கடிதத்தை வாசித்த பின்பு எனக்குத் தோன்றியது. நான் அதிகம் அலட்சியமாய் இருப்பதாய் என் மனச்சாட்சி என்னைச் சுட்டது. எதற்கும் அவர்களை மிகவிரைவில் போய்ப் பார்க்க வேண்டும் என்று எண்ணினேன். அதையேதான் எதிர்பார்ப்பதாய் அம்மா எழுதியிருந்தார். அங்கே மூனாவையும், பிள்ளையையும் அழைத்துச் செல்ல வேண்டும். நித்திக்குப் பிரச்சனையாக இருக்கலாம். அதற்காக அப்பா அம்மாவை அதிக காலம் ஏங்கவிடவும் எனக்கு மனதிருக்கவில்லை.

நானும் மூனாவும் குருவிகள் போலச் சேர்க்கத் தொடங்கினோம். பற்றாக் குறைக்குக் கடன் எடுத்து வீடும் வாங்கினோம். தொடர்ந்தும் தாய் தகப்பனின் வீட்டில் இருப்பதை மூனாவோ நானோ விரும்பவில்லை. இரண்டு படுக்கை அறைகள் கொண்ட சிறிய தனிவீடு. அது எங்களுக்கு வசதியாக இருந்தது. அதற்குப் பெரிய கோல், குளியலறை, சமையலறை என்கின்ற வசதி. மேலே படுக்கும் அறைகள். திருத்தும் வேலை இருந்தால் அது வீண் தொந்தரவாகிவிடும் என்பதால் நாங்கள் வீடு கணிப்பவரைக் கூட்டிச் சென்று சரி பிழை பார்த்துக் கணித்தே இந்த வீட்டை வாங்குவதற்கு முடிவு செய்தோம். மனித ஆசைகளுக்கு எல்லைகள் இருப்பது இல்லை. வீடு வாங்கிய பின்பு மூனாவுக்குக் கார் வாங்க வேண்டும் என்கின்ற ஆசை. எனக்குக் கொஞ்சக் காசு சேர்த்துக் கொண்டு ஊருக்கு ஒரு முறை உடனடியாகச் சென்றுவர வேண்டும் என்கின்ற ஆசை. மூனாவோடு கதைத்து முதலில் நாங்கள் இலங்கைக்குச் சென்று வருவதென முடிவெடுத்தோம். பயண அலுவல்களை நான் கவனிக்கத் தொடங்கினேன். மூனா இலங்கை சென்றுவரச் சம்மதித்ததில் எனக்குத் தலைகால் புரியாத சந்தோசம். அம்மா அப்பாவைப் பார்த்து நான்கு வருடங்களுக்கு மேலாகிறது. அவர்களைப் பார்த்து அணைத்துக் கொள்ள வேண்டும் என்கின்ற தளராத ஏக்கம். அம்மாவுக்கு முத்தம் முத்தமாகக் கொடுக்க வேண்டும் என்கின்ற தவிப்பு. நித்தி அம்மாவிற்கு இன்னும் ஆயிரம் மழலை முத்தம் கொடுக்க வேண்டும். அம்மா அதில் சொர்க்கிப் போய்விடுவார்

என்பது எனக்குத் தெரியும். ஐயாவை இப்படியெல்லாம் மடக்க முடியாது. அவர் மூனாவை ஏதாவது பேசிவிடாது இருந்தாலே பெரிய புண்ணியம். அவர் அப்படி அநாகரிகமாகச் செய்வாரா மாட்டாரா என்கின்ற குழப்பம் என்னிடம்.

★

ஒஸ்லோ விமான நிலையத்திலேயே அந்தப் பார்வைகளைச் சாதுவாக என்னாற் கவனிக்க முடிந்தது. அது அதிகம் என்னைக் குழப்பவில்லை. இலங்கையில் ஒரு இலங்கை வாசியும் வெள்ளைக்காரியும் சேர்ந்து பிள்ளையோடு வருவது அதிசயம்தான். அவர்கள் அதைக் காட்டிக் கொள்ளாது நாகரிகம் பேணவும் இல்லை. அந்தப் பார்வைகள் என்னையும் அவதிப்படுத்தின. மூனாவுக்குச் சங்கடத்தின் மேல் சங்கடம்.

'என்ன எல்லாரும் எங்களை விடுப்புப்பாக்கினம்?' என்றாள்.

'ஒரு வெள்ளப் பெம்பிளையை இந்த நாட்டுக்காரனோட பாக்கிறது இவைக்கு கிட்டத்தட்ட விடுப்புப் பாக்கிற மாதிரித்தான். இதைப் பற்றி நாங்கள் அலட்டிக் கொள்ளக் கூடாது' என்றேன்.

'இதே பார்வை எங்கட சனத்திட்டையும் இருக்கத்தான் செய்யுது. ஆனா இவ்வளவு மோசமாக இருக்காது. இவையேன் இப்பிடிப் பாக்கினம்?'

'ஏற்கனவே எங்களுக்குள்ள சாதி, மதம், இனம் எண்டு ஏகப்பட்ட பிளவுகள் இருக்குது. அப்பிடி இருக்கத் தேசம் விட்டுத் தேசம் போய் அன்னியப் பெண்ணோட வந்தா இப்பிடித்தான் பார்வை இருக்கும்.'

'ம்..'

'உங்களுக்குச் சாதியெண்டா என்னெண்டே தெரியாது. இங்க அதுக்காக எதுவும் நடக்கும். அதைத் தாண்டிக் கலியாணம் செய்யிறதை ஒப்புக் கொள்ளவே மாட்டினம்' என்றேன். அவள் புரியாது விழித்தாள்.

நாங்கள் கொழும்பில் உள்ள விடுதி ஒன்றில் ஒரு நாள் தங்கி நின்றோம். மூனாவின் வசதியைவிட நித்தியின் வசதி எனக்கு முக்கியமாகப்பட்டது. அவனை வெப்பம் அதிகமாகக் கொடுமைப் படுத்தியது. அவனை அந்தக் கொடுமையில் இருந்து காப்பாற்றுவது மிகவும் கடினமாகப் போயிற்று.

யாழ்ப்பாணம் போய்ச் சேர்ந்த போது மூனாவும் நித்தியும் சுருண்டு போய்விட்டார்கள். மூனாவுக்குச் சேலை கட்டத் தெரியாது. அவள் ஸ்கேட்டும் பிளவுஸ்சும் அணிந்து கொண்டு வந்தாள். அவளுக்கு அந்த உடுப்பைக்கூடத் தாங்க முடியவில்லை. இதற்கு மேல் நீ உடுப்பைக் குறைப்பது என்றால் நாங்கள் வீட்டிற்குப் போக முடியாது என்கின்ற உண்மையை அவளிடம் கூறினேன். அதன் பின்பு அவள் அதைப் பற்றி எதுவும் கதைக்கவில்லை. அவளின் அவஸ்தை எனக்குப் புரிந்தது.

நான்கு வருடம் கழித்து நான் யாழ்ப்பாணம் போன போது என் மனக்கண்ணில் இருந்த யாழ்ப்பாணம் எங்கோ தொலைந்து போயிருந்தது. எங்கே பார்த்தாலும் இராணுவத்தின் நடமாட்டம். அது குறைவதற்கான சாத்தியங்கள் இல்லாத குளறுபடிகள். வன்முறையின் தன்னிச்சையான பெருக்கம். அது தீர்வு தரும் என்று நம்பிய அவலம். வெள்ளையர் என்றால் கடத்தப்படுவார்கள் என்கின்ற ஆபத்து. ஆயுதங்களால் விளையும் இரணங்கள். சோகங்கள். குறைந்து போன உயிர்களின் மதிப்பு. இது எங்கே போய் நிற்கும் என்பது யாருக்கும் தெரியாத குழப்பம். மூனாவும் கடத்தப்படுவாளோ என்கின்ற வெளியே செல்ல முடியாத அச்சம்.
நோர்வேயில் பயணம் செய்வதற்கும் இலங்கையில் பயணம் செய்வதற்கும் நூறு வித்தியாசங்கள் கண்டு பிடியுங்கள் என்று சொல்லலாம். நூறு கிலோ மீற்றரை ஒரு மணித்தியாலத்திற் கடந்தவர்களுக்கு அதே தூரத்தை மூன்று மணித்தியாலத்திற் கடப்பது சலிப்பைத் தந்தது. நாங்கள் வாடகை வண்டி ஒன்றைப் பிடித்துக் கொண்டு யாழ்ப்பாணத்தில் இருந்து ஊருக்குச் சென்றோம்.

எனக்கு ஊரில் என்ன வரவேற்பு கிடைக்கும் என்கின்ற திகில். அதைப் பற்றி மூனாவிடம் சொல்லும் துணிவு என்னிடம் இருக்கவில்லை. எல்லாம் நல்லபடியாக நடக்க வேண்டும் என்பது எனது பிரார்த்தனையாகியது.

நகரைத் தாண்டி வாடகை வண்டி 'கல்லுண்டாய்' பாதையில் பயணித்தது. அதில் ஒரு சுகம். கடல் காற்று, உப்பும், குளிரும் தடவிவந்து முகத்தில் அடிக்கும் இதம். அதுகூடச் சிறு வெப்பத்தோடு வீசுவதாய் எமக்குப் பட்டாலும், அந்தக் காற்று பெரும் ஆறுதல் தந்தது. நாங்கள் பொன்னாலைப் பாலத்தைத் தாண்டி வலந்தலைக்கு வந்து விட்டோம். தொண்டன் கடைக்கு முன்பு அவர் நின்றார். எனக்குத் திகைப்பும் சந்தோசமுமாய் இருந்தது. அது குமரேசனின் அம்மா என்பதில் பரம சந்தோசம். வண்டியை நிறுத்தி அவரை ஏற்றினோம். குமரேசனின் அம்மா என்னைக் கண்டதும் கண் கலங்கிவிட்டார். பின்பு மூனாவையும் நித்தியையும் பார்த்துவிட்டு,

'இவவே உன்ர பெண்சாதி?' என்றார்.

'ஓம்' என்றேன்.

'பிள்ளையைத் தாங்கோ..' என்று நித்தியை வாங்கி மடியில் வைத்துக் கொண்டார். அவ எந்த வித்தியாசமும் இல்லாது அப்படிச் செய்தது எனக்குப் பெரும் நிம்மதியைத் தந்தது.

'எப்பிடி இருக்கிறான் தம்பி?' அவரின் குரல் மீண்டும் கம்மிற்று.

'நல்லா இருக்கிறான்' என்றேன்.

'தம்பி குமரேசன் என்ன செய்யிறான் அங்க?'

'அவன் படிச்சுக் கொண்டு பாட்ரைம் வேலையும் செய்யிறான்'

'எனக்கு எழுதினவன். அவன்ர புண்ணியத்தால தான் தங்கச்சிக்குக் கலியாணம் முற்றாயிருக்கு. உடம்பெல்லாம் எப்பிடி அவனுக்கு? குளப்படி ஒண்டும் இல்லையே? எனக்குப் புழுகிறானோ உண்மை சொல்லுகிறானோ எண்டு அறியத்தான் உன்னைக் கேட்டன்' என்றா அவர். அவனைப் புரிந்த எனக்கு அது புரிந்தது. அவனும் என்னைப் போன்று வெள்ளைப் பெண்ணைக் கலியாணம் செய்து விடுவானோ என்கின்ற பயமும் அவரிடம் இருக்கலாம் எனத் தோன்றியது. வித்தியாசம் காட்டா விட்டாலும் வில்லங்கத்தில் மாட்டுவதற்கு எவருக்கும் விருப்பம் இருக்காது. நான் சிரித்துக் கொண்டே,

'அவனுக்கென்ன... இங்க இருந்ததைவிட நல்லா இருக்கிறான். எந்தக் குளப்படியும் இல்லை' என்றேன்.

'உன்னிட்ட இருந்து இதைக் கேட்டது நிம்மதியடா அப்பா' என்றார்.

'அது சரி மாமி எங்கட வீட்டுப் புதினம் எப்பிடி?' என்றேன்.

'உன்ர ஐயாதான் முன்னேக்க கொஞ்சம் வெறுப்பாப் பேசிறவர். இப்ப அதுவும் இல்லை எண்டு நினைக்கிறன். ஆனா நீயும் கொஞ்சம் யோசிச்சு இருக்கலாம் தம்பி' என்று முடித்தா.

நான் அதற்குப் பதில் சொல்லவில்லை. என்ன பதில் சொல்வது என்று எனக்குத் தெரியவில்லை. கதையை மாற்றினேன். பிரச்சனையை எதிர்கொள்வதில் மனிதனுக்கு எப்போதும் தயக்கம் உண்டாகிறது. சில வேளைகளில் அதில் இருந்து தப்பித்து ஓடவேண்டி இருக்கிறது. நான் முதுகெலும்பு இல்லாது தப்பித்து ஓடுவதான உணர்வு.

'அம்மா, ஐயா எப்பிடி?' என்று அதில் இருந்து தப்பித்துக் கொண்டேன்.

'அவைக்கென்ன? அவை நல்லா இருக்கினம்? உன்னைப் பற்றின கவலைதான் அவைக்கு' என்றார் அவர்.

'எனக்கும் கவலைதான். யாற்ற தலையில என்ன எழுதி இருக்கெண்டு யாருக்குத் தெரியும். இனி அவை கவலைப்பட என்ன இருக்குது? இவர் என்ர மகன்' நான் தப்பித்துக்கொள்ளும் சமாதானம் சொன்னேன். கடைசி வார்த்தையைப் பிடித்துக்கொண்டு,

'அதை நீ சொல்லவே வேணும்? உரிச்சு வைச்ச மாதிரி பேரன்ர முகச்சாயல். அவரை மாதிரி நெடு நெடு எண்டு இருக்கிறான். இந்தப் பிள்ளையளுக்கு இப்பிடி வேர்க்குதே? உனக்கும் அப்பிடிதான். தெப்பமா நனைஞ்சு போனாய்' என்று என்னைப் பார்த்துக் கவலைப்பட்டார். 'அது குளிர் நாடு. இங்க வந்தோண்ணை இப்பிடி வேர்க்குது' என்றேன்.

என் கவனம் திரும்பியது. அதே பிள்ளையார் கோயில். அதே தேர்முட்டி. அதில் இன்றும் சில புதிய இளைஞர்கள். மாற்றத்தையும் வெல்லும் சில மகிமையான அடையாளங்கள். அந்த அடையாளங்களைப் புறக்கணிக்கும் மாற்றங்கள். பிள்ளையார் தனக்குப் புது முகம் தேடிக் கொண்டார். மணிமண்டபமும், கோபுரமும் அவரின் செல்வச் செழிப்பைப் பறைசாற்றியது. இது விடலைப்பருவம் தொடக்கம் இளைஞனாகும் வரையுமான ஞானஸ்த்தலம். ஒவ்வொரு அடி மண்ணும் என் ஞாபகம் பேசும். ஒவ்வொரு அடி மண்ணிலும் எனது ஞாபகத்தைத் தேடிக் கொள்ளமுடியும். தேர்முட்டியில் யாரோ இப்போதும் கடதாசி விளையாடிக் கொண்டு இருந்தார்கள். உலகம் அழியும்வரை அது தொடர்கதையாகலாம். கடலின் கீழே மூழ்கியதாக நம்பப்படும் குமரிக்கண்டத்திலும் தேர்முட்டி இருந்திருக்கலாம். 'என்ன அப்பிடி அண்ணாந்து பாக்கிறா? நீங்கள் போனாலும் இஞ்ச ஆட்களுக்குப் பஞ்சம் இல்லை. வேலை இல்லாததுகளுக்கு இது தான் வேலை' என்று குமரேசனின் அம்மா சலித்துக் கொண்டார். தேர்முட்டியில் இருந்தவர்கள் எங்களை விடுப்புப் பார்ப்பது புரிந்தது. நான் சாரதியைக் காரைத் திருப்பச் சொன்னேன். நாங்கள் செய்தது போல் அவர்கள் செய்தால் என்கின்ற பயம் என்னிடம். சிறுவர்கள் விடுப்புப் பார்க்க எங்கள் அருகேயே வந்தார்கள். நீங்கள் ஆர்? நீங்கள் ஆர்? என்று கேள்வி கேட்டார்கள். நான்கு வருடத்திற்கு முன்பு இவர்கள் பால்குடியாக இருந்திருப்பார்கள்.

வண்டி எங்களது ஒழுங்கைக்குள் திரும்பியது.

வண்டி வீட்டின் முன்பு நின்ற போது அம்மா புதிதாகக் கட்டிய போட்டிக்கோவில் நின்று எங்கள் வீட்டிற்கா அந்தக் வண்டி வந்திருக்கிறது என்கின்ற ஆவலோடு பார்த்தார். அது உண்மையென்பதைக் கண்டு அவருக்கு சந்தோஷமும் திகைப்பும். கைகால் ஓடாத அவஸ்தையில் கண்களில் புரண்ட வெள்ளி மணியான நீர். பின்பு தன்னைச் சமாளித்துக் கொண்டு,

'ஆரது என்ர புத்திரனே வாறது? இங்க வந்து பாருங்கோ யார் வந்திருக்கிறது எண்டு..' உள்ளே நோக்கிக் கத்திவிட்டு, என்னருகே ஓட்டமும் நடையுமாக வந்து, என்னைக் கட்டி அணைத்துக் கொண்டார். அதில் நீ எனக்கு மாத்திரமே சொந்தம் என்கின்ற வெறி. பின்பு நித்தியை அள்ளி அணைத்துக் கொண்டார். மூனா நித்திக்கு அப்பம்மா என்றாள்.

ஐயா குரல்கேட்டு ஆறுதலாகவே வெளியே வந்தார். அவர் பார்வையில் கோபம் தொலைந்து வாழ்க்கை என்றால் இப்படித்தான் இருக்கும் என்கின்ற சாந்தம் குடிகொண்ட அமைதி. அந்தச் சாந்தம் எனக்கும் அமைதியையும், ஆறுதலையும், அதிர்ச்சியையும் தந்தது. ஐயாவில் இவ்வளவு மாற்றமா என்பது அதிசயிக்க வைத்தது. நாங்கள் வீட்டிற்குள் சென்றோம். எங்கள் வீடும் மாற்றத்திற்குள் மாட்டியதின் சாட்சியங்கள். மின்சார வசதி நான் வாழ்ந்தபோது இல்லாதது. விசிறி போய்க் காற்றாடி வந்த விஞ்ஞான முன்னேற்றம். புதிய வண்ணங்கள் கண்ட சுவர்களின் வளவளப்பு. அபிவிருத்தியும் நவீனமும் புகுந்த தோற்றம்.

நாங்கள் பயணப் பொதிகளோடு வீட்டிற்குள் சென்றதும் அம்மா கோப்பி வைக்கக் குசினிக்குள் போனார். படலைக்கு வெளியே நின்று சிலர் எங்களை எட்டிப் பார்த்து விட்டுப் போனார்கள். இன்று ஊரின் தலைப்புச் செய்தி இது என்பது எனக்குப் புரிந்தது.

'அம்மா கோப்பி வைக்காத' என்றேன். அம்மா குசினிக்குள் நுழையாது என்னைத் திரும்பிப் பார்த்தார்.

'அப்ப என்ன வேணும்?' என்றார்.

'தேசிக்காய் இருந்தாக் கரைச்சா' என்றேன்.

'என்னடா அங்க சரியான குளிராக இருக்குமே?' நித்தியைத் தூக்கி வைத்துக் கொண்டு ஐயா கேட்டார். அவர் மூனாவைப் பார்த்ததோடு சரி. வேறெதுவும் கதைக்கவில்லை. அவளுக்கு நிச்சயம் என்னவோ போல் இருந்திருக்கும். எதுவும் பேசாது அமைதியாகிவிட்டாள். எதுவும் நடக்கலாம் என்கின்ற சுதாகரிப்பு அவளிடமென நான் எண்ணிக் கொண்டேன்.

'ஓ சரியான குளிர்' என்றேன்.

'இங்க வெக்கையாக இருக்குதே?'

‘ம்… கொஞ்ச நாள் இருந்தாப் பழகிப் போயிடும்’

‘அது சரி நீ ஏன் இப்பிடிச் செய்தனீ?’ என்றார் ஐயா. தலையிற் கோடாரியால் போடும் இந்தக் கேள்வியை நான் இவ்வளவு விரைவாக எதிர்பார்க்கவில்லை. தடுமாறிப் போய்விட்டேன். வார்த்தைகள் வர மறுத்தன. அந்தரிப்பாய், அவதியாய் என்ன சொல்வது என்பது புரியாது திகைப்பாய்ச் சிலகணங்கள் திண்டாடினேன். பின்பு சுதாகரித்துக் கொண்டு,

‘சந்தர்ப்பம், சூழ்நிலை. அதோட இவள் நல்லவள் ஐயா. எனக்கு அங்க இருக்க விசாத் தொடக்கம் எல்லா உதவியும் செய்தாள்’

‘ம்… நன்றிக் கடன்… ம் நெஞ்சப் பிரிச்சு இரத்தத்தைத் தானம் கொடுக்கிற மாதிரி. பருவாய் இல்ல. அவளைப் பார்த்தா அப்பிடித்தான் இருக்குது. அவளுக்கு நன்றி விசுவாசமாய் இருந்தது பிரச்சனையில்லை. ஆனா எங்கட குடும்பமானம் கெட்டுப் போச்சுது’ என்றார் அவர்.

‘ம்..’ என்றேன்.

‘அவனை வந்ததும் வராததுமா ஏன் துளைக்கிறியள்? எங்களுக்கு எத்தினை பிள்ளையள் இருக்கு குடும்ப மானமெண்டு வறட்டுத்தனமாய்க் கவலைப்பட்டுக் கொண்டு இருக்க?’
அம்மா எனக்குப் பக்கத் துணையாக வந்தார்.

‘நீ இப்பிடிச் சொல்லிச் சொல்லித்தான் இவனைக் கெடுத்துப் போட்டாய்’ என்றார் கோபமாக.

‘அவர விட்டிட்டு நீங்கள் இதைக் குடியுங்கோ’ அம்மா ரமிளரில் எலுமிச்சம் பழச் சாறு எல்லாருக்கும் தந்தார். அதிக காலத்திற்குப் பின்பு ரமிளரில் அதைப் பருகுவது அமிர்தமாய் இருந்தது. உள்ளே போனதில் வந்த உசாரில்,

‘அம்மா கசகசவெண்டு கிடக்கு. நாங்கள் குளிக்கப் போறோம்’ என்றேன்.

‘சரி சரி போய்க் குளியுங்க. டேய் பெடி கவனமடா’ என்றார் அம்மா.

‘அவன் நீந்துவான் அம்மா’ என்றேன்.

‘ஆனா… நீந்தத் தண்ணி நிண்டாத்தானே?’ என்றார் அம்மா.

நாங்கள் குளிக்கப் புறப்பட்டோம். நித்திக்கும் மூனாவுக்கும் கிணற்றில் குளிப்பது இதுதான் முதல்முறை. குளிக்க வேண்டிய, உடுப்பு மாற்ற வேண்டிய முறைகளைக் கேட்டு மூனா விசித்திரப்பட்டாள். திறந்த மேனியாகக் குளித்து உடுப்பு மாற்றும் மூடிய அறைகள் இங்கு இல்லை என்பதை அவள் முதலில் நம்ப மறுத்தாள். தண்ணீர் அள்ளிக் குளிக்க வேண்டும் என்றதும் பஞ்சிப்பட்டாள். ‘நான் நாளைக்குக் குளிக்கட்டுமா?’ என்று வேறு கேட்டாள். பின்பு நான் தண்ணீர் அள்ளி இறைக்கத் தானும் குளித்து நித்தியையும் குளிப்பாட்டினாள். இருவருக்கும் குதூகலம். எனக்கு அவர்களைப் பார்த்துப் பெருமிதம்.

அன்று கிணற்றில் இருந்து தண்ணீர் இறைத்து எனக்கு கை பொங்கிப் போயிற்று. அதன் பின்பு இராஜ மரியாதை. குளிப்பதற்கு வேலையாளைப் பிடித்து அம்மா தொட்டிக்குள் தண்ணீர் இறைப்பித்தார். வெந்நீர் போட்டு வைத்தார். மூனா எனக்குச் சாப்பாடு ஊட்டிவிட்டாள்.

நித்தி கதைப்பது அதிகம் புரியாவிட்டாலும் அவனுடன் ஐயா அதிகம் பொழுது போக்கினார். மூனாவிடம் சிறிது சிறிதாய் ஆங்கிலத்திற் கதைத்தார். அம்மா பாவம். கையால் சைகை காட்டி அவஸ்தைப்பட்டார்.

நான் எதிர்பார்த்ததைவிட மூனா ஐயாவோடு மிக விரைவாகவே நட்பாகிக் கொண்டாள். அதில் எனக்கு மாத்திரம் அல்ல எங்கள் எல்லோருக்கும் ஏகப்பட்ட மகிழ்ச்சி. ஐயா மூனாவை இவ்வளவு விரைவாக மருமகளாய் ஏற்றுக் கொள்வார் என்பது எனது எதிர்பார்ப்பில்லை. வாழ்க்கை சிலவேளைகளில் வில்லத்தனமாய் அமைவதில்லை. அதை விரும்பாத உயிர்களும் இல்லை. எங்களால் அவர்களைப் பதினைந்து நாட்கள்தான் சந்தோஷமாக வைத்திருக்க முடிந்தது. நாங்கள் நோர்வேக்குப் புறப்பட்டோம். ஐயா தழுதழுத்துப் போய்விட்டார். அவர்களைப் பிரிய முடியாது ஈயக்குண்டாய்க் கனத்தது மனது. ஐயா வயலில் கேட்ட வரம். அவர்களோடு சேரக்கிடைத்த ஆனந்தம். இந்த நேரம் வராது இருந்திருக்க வேண்டும் என்கின்ற ஏதோ ஒரு அந்தரம்.

★

நேரத்தைப் பார்த்தேன். பதினொன்றாகிவிட்டது. நான் எழுதுவது தெரிந்தே இவ்வளவு நேரமும் இங்கே தாதி வரவில்லை. அல்லது என்னை எப்போதோ படுக்க வைத்திருப்பார்கள். நான் கனினியை நிறுத்திவிட்டு விறுவிறு என்று படுக்கைக்குள் புகுந்தேன்.

# 8

**நா**ளை என்னும் கற்பனைக்காய் எனது எழுத்துக்களைத் தள்ளி வைக்கும் உத்தேசம் என்னிடம் இல்லை. இந்தக் கணங்கள் எனது எழுத்திற்காகப் பயன்பட வேண்டும் என்பது யாகமாகியது. ஓய்வெடுக்கும் படியாகத் தாதிகளின் தொந்தரவு. ஓய்ந்து விடாதே என்கின்ற ஆத்மாவின் அந்தரங்க அவதி. எழுதி முடித்த பின்பு என் ஆத்மா ஓய்ந்துவிடும். அவதி தீர்ந்துவிடும். அதுவரை எனக்கு ஓய்வு இல்லை. முடிவு செய்த நான் இன்று பின்னேரம் சாப்பிட்ட உடனேயே குமரேசனை மெதுவாகக் காய் வெட்டிவிட்டு இங்கு வந்துவிட்டேன். அவன் இங்கு வந்தால் அதிகம் எழுத முடிவதில்லை. கதையோடு காலம் கழிவதால் நான் அவனைத் தவிர்க்க வேண்டியதாகிவிட்டது. இலட்சியம் என்று ஒன்று இருக்க வேண்டும். அதற்காகக் காலத்தைச் செலவழிக்க வேண்டும். அப்படிச் செலவழிப்பவர்கள் ஒரு நாளும் பொழுது போகவில்லையெனத் திண்டாட மாட்டார்கள். என்னிடம் இப்போது அந்த நிலை வந்திருக்கிறது. எனக்குப் பொழுது போகவில்லையே என்கின்ற ஆதங்கம் இப்போது இல்லை. வயது வந்தவர்களுக்கு இருக்கும் பொதுவான ஆதங்கத்தை நான் வென்று விட்டதில் எனக்கு ஏகப்பட்ட மகிழ்ச்சி. அதுவே நட்பிற்குச் சோதனையாகிவிட்டது. குமரேசன் தனக்கென ஒரு இலட்சியத்தை ஏற்படுத்திக் கொள்ளவில்லை. அதனாற் காலத்தை ஓட்டுவது அவனுக்குப் பெரும் பிரச்சனையாக இருந்திருக்கும். அதற்கு அவனிடம் நித்திரை என்கின்ற மருந்து இருக்கிறது. அடிக்கடி அவனால் நினைத்த நேரத்தில் நித்திரை கொள்ள முடிகிறது. என்னால் அப்படி ஒருபோதும் முடிவதில்லை.

நான் எழுதத் தொடங்கினேன்.

மதம். யானையின் மதம் கொண்ட குணமே ஆன்மீகம் இன்றிப் பூசிக்கும் மதத்தைக் குருட்டுத்தனமாய் நம்பினால் மனிதனிற்கும் ஏற்படுகிறது. அதன் பின்பான மனித வேட்டையில் அநியாயங்கள் நியாயமாகப் பார்க்கப்படுகின்றன. அமைதி தொலைந்து போகிறது. இந்து ஆலயங்களும் அதனோடனா தொடர்பும் ஈழத்தில் எங்களுக்கு வெறியை ஏற்படுத்தவில்லை. வேற்று மதங்கள் பொதுவாக அப்போது போட்டி போடாது இருந்தது அதற்குக் காரணமாய் இருந்திருக்கலாம்.

நான் ஊருக்குப் போகாது விட்டிருக்கலாமோ என்கின்ற எண்ணம் அங்கே போய் வந்த பின்பு எனக்கு அடிக்கடி தோன்றுவது உண்டு. ஊருக்குப் போனதால் எல்லாம் நன்மையாக அமைந்தாலும் ஐயா என்னைச் சிலவற்றில் நன்கு குழப்பிவிட்டார். நித்தியில் அவர் கொள்ளை ஆசைப்பட்டதோடு அவனை நித்தம் பிள்ளையார் கோயிலுக்குக் கூட்டிச்சென்றார். சந்தனமும் விபூதியுமாக அவன் வந்து நிற்பான். என்னையும் மூனாவையும்கூட வலுக்கட்டாயமாக இரண்டு நாட்கள் கோயிலுக்கு இழுத்துச் சென்றார். எனக்குக் கோயிலுக்குள் சென்றதுமே பழைய கால நினைவுகள் பசுமையாகத் துளிர்த்தன. எங்கள் பாலர் பருவத்தைப் பற்றி இந்த கோயிலைத் தவிர்த்து எள்ளளவும் சிந்திக்க முடியாது. கோவில் கும்பிடும் இடம் மட்டும் அல்ல. அது எங்கள் வாழ்வின் அரைவாசி. கோயிற் தொண்டு எங்களுக்குச் சலிக்காது இனித்த காலம் அது. அப்போது மனது நிர்மலமாக இருந்தது. மலர் வாசம் எங்கள் நாசிக்குள் எப்போதும் நிறைந்திருக்கும். எங்கள் செயற்பாடுகளும் பலனை எதிர்பார்க்காத மேன்மை கொண்டது.

இப்போதும் நான் அப்படியா என்றால் அதில் ஏகப்பட்ட குழப்பங்கள். குழப்பம் தீர வேண்டும் என்றால் கோயிலுக்குப் போக வேண்டும் என்றது மனது. நான் மீண்டும் மீண்டும் கோயிலுக்குப் போனேன். அப்பொழுது மூனா வரவில்லை. நான் அவளை வற்புறுத்தவும் இல்லை. ஐயா நித்தியை விட்டுவிடுவதில்லை. அவனைக் கூட்டிக் கொண்டு செல்வதில் அவர் மிகவும் கவனம் காட்டினார். என்னை அவர் குழப்ப நினைத்தார். நான் அதற்கு முன்பே குழம்பிப் போய்விட்டேன் என்பது அவருக்குத் தெரியாது.

அன்று நானும் ஐயாவும் மாத்திரம் எங்கள் வயலைப் பார்க்கச் சென்றோம். சிறுபோக காலம் அது. எள்ளு, சணல், கொம்மடி, வெள்ளரி, பயறு, உழுந்து எனப் பச்சைக்குக் குறைவில்லாக் கோலம். கிளிகளின் அபகரிப்பிற்கான படையெடுப்பு. அதைக் கலைக்கும் 'ஏகாய்' என்கின்ற சத்தங்கள். இது நான் குழந்தைப் பருவத்தில் இருந்து காதலித்த கமக்கார நினைவுகள். நான் என்னை மறந்து வயலை இரசித்தேன். ஐயாவுக்கு என் இரசிப்புப் புரிந்துவிட்டது. அவர் மெதுவாகக் கதையைத் தொடக்கினார்.

'தம்பி?'

'ம்..'

'நல்ல வடிவா இருக்கெல்லே?' என்றார்.

'கனகாலத்துக்குப் பிறகையா.'

'அங்க இப்பிடி இருக்கச் சாண்ஸ் இல்லை... என்ன?'

'நாங்கள் இருக்கிற இடத்தில இப்பிடி இல்லை. வேற இடத்தில பார்க்கலாம். ஆனாக் கிளியைப் பார்க்க முடியாது. வேற பறவை மலை ஒண்டு நாங்கள் இருக்கிற இடத்திலும் இருக்குது'

'இதுமாதிரிப் பயிர்கள் இருக்குதே?'

'இது மாதிரிப் பயிர்கள் அங்க இல்லை. அது குளிர் நாட்டுப் பயிர்கள். எங்கட் இடத்தில அதுவும் இல்லை'

'எனக்குத் தெரியும்... உனக்கு இந்த வயல்களும், அந்தப் பிள்ளையார் கோயிலும் மாதிரி எங்க போனாலும் வராதெண்டு'

'உண்மைதான் ஐயா'

'அப்ப இங்கையே நிண்டிடு. நீ விரும்பினாலும் அவள் விரும்பமாட்டாள் எண்டுறியா?'

'ம்... உண்மை'

'நீ எல்லாத்தையும் விட்டிட்டு உன்னுடைய போக்கில யோசிக்காமல் யாரையோ கலியாணம் செய்தாய். நாங்கள் என்ன செய்ய முடியும்? எங்கட கனவுகளையெல்லாம் ஒதுக்கி வைச்சிட்டு இப்ப உங்களை ஏற்றுக் கொள்ள வேண்டியதாகிப் போச்சுது. சரி அது எப்பிடிப் போனாலும் பருவாய் இல்லை. இனியாவது இந்தப் பிள்ளையை எங்கட கனவுக்கு ஏற்ற மாதிரி வளர்க்க வேண்டாமே?'

'என்ன சொல்லுறியள்?' என்றேன் பதற்றத்தோடு.

'எங்கட யாழ்ப்பாணத்துத் தமிழ் அவன் கதைக்க வேணும். எங்கட கோயிலுக்குத் தவறாமல் போகவேணும். தேவாரம், திருவாசகம் கரைச்சுக் குடிக்கோணும். இஞ்ச அவனை விட்டிட்டுப் போங்கோவெண்டா நிச்சயமாக நீங்க அதைச் செய்யப் போறதில்லை. அங்கையாவது இதை நீ மறக்காமல் செய்வியா தம்பி? எனக்குப் பந்தம் பிடிக்கேக்க அவன் சிலுவையைப் போட்டுக் கொண்டு பந்தம் பிடிக்கக் கூடாதடா. அப்பிடிச் செய்தா என்ர கட்டை வேகாது'

'நீங்கள் ஏன் ஐயா இப்பிடிக் கதைக்கிறீயள்? அப்பிடி ஒண்டும் நடக்காது. சும்மா மனசைப் போட்டுக் குழப்பாதீங்க'

'நான் மனசைப் போட்டுக் குழப்பேல்லை. ஆனா நான் நினைக்கிற மாதிரி நீ அவனை வளர்ப்பியே?' என்று மீண்டும் கேட்டார்.

'வளர்க்கிறன் ஐயா'

'அது போதுமடா'

வயல்கள் பச்சையாக இருந்தன. மனது வாடிப் போயிற்று. இவரிடம் வாக்குக் கொடுத்தாகிவிட்டது. இதற்கு எவ்வளவு போராட வேண்டும் என்பது எனக்கல்லவா தெரியும்.

மதமோ, கலாசாரமோ மனிதனுக்கு எதிரியல்ல. மனிதர்கள் விட்டுக் கொடுப்பை மறக்கும் போது இவற்றை எதிரியாக்கிச், சமுதாயங்களைக் கூறு போடுகிறார்கள். நித்தி சைவனாய் வளரவேண்டும். தமிழ்ப் படிக்க வேண்டும். நீ என்ன தப்பு செய்தாலும் பருவாய் இல்லை, உன் பிள்ளையாவது எங்களைப் போல் வாழ வேண்டும் என்கின்ற ஐயாவின் கூற்று என்னைத் தடுமாற வைத்தது. அவரின் விருப்பு அவனுக்குத் திணிப்பு. நோர்வேயில் வாழப் போகும் நித்தி அதைச் சாத்தியமாக்குவானா? ஐயாவின் அந்த ஆசையை என்னால் நிறைவேற்ற முடியுமா? முயற்சிக்க வேண்டும். அவர் எல்லாவற்றையும் விட்டுக் கொடுத்த பின்பு இதைக் கேட்டிருக்கிறார். பந்தம் பிடிக்கும் போது சிலுவை போடாதிருக்க வேண்டுமெனக் கேட்டிருக்கிறார். நான் இதற்கு மதிப்புக் கொடுக்க வேண்டாமா? கட்டாயம் கொடுக்க வேண்டும். நித்திக்குத் தமிழ் படிப்பிக்கவேண்டும்.

அது பெரும் போராட்டமாகலாம். மூனா முட்டுக்கு நிற்கலாம். நித்தியின் மனநிலை எப்படிப் போகும்? ஒத்துக் கொள்வானா? ஒன்றும் வேண்டாம் என்று ஒதுங்கி விடுவானா? மூனா ஞாயிற்றுக் கிழமைகளில் நித்தியைத் தேவாலயத்திற்குக் கூட்டிச் செல்வாள். நானும் முதலில் சென்று வந்தேன். இலங்கை சென்று வந்த பின்பு என்னால் அப்படிச் செல்ல முடியவில்லை. ஐயாவுக்குப் பந்தம் பிடிக்கும் போது சிலுவை இல்லாது பிடிக்க வேண்டும் என்று கூறிப் பாரிய சிலுவையை ஒன்றை என் தலையில் இறக்கி வைத்துவிட்டார். மூனா வந்து தேவாலயத்திற்குப் போக எழுப்பினாலும் போர்த்து மூடிக் கொண்டு படுத்துக் கொள்வேன். அவள் சினத்தோடு போவது எனக்குப் புரிந்தது. இலங்கையில் இருந்து வந்த முதற் கிழமை அவள் நித்தியை வழமை போலவே தேவாலயத்திற்குக் கூட்டிச் சென்று விட்டாள். அவன் தனியறையில் படுத்திருப்பது அதற்கு வசதியாகப் போய்விட்டது. இதற்கு என்ன செய்வது என்பது எனக்கு முதலில் புரியவில்லை. எப்படியாவது தடுக்க வேண்டுமென மனம் அடம்பிடித்தது. ஐயாவின் அப்பாவித்தனமான ஆசை எங்களுக்குள் கருத்து முரண்பாட்டை ஏற்படுத்தப் போகிறதோ என்பதில் எனக்குச் சற்று அச்சம் இருந்தாலும், அவரது ஆசையை, அவரது இடத்தில் இருந்து பார்க்கும் போது நியாயமானதாய் எனக்குப் பட்டது.

சனிக்கிழமை இரவு. மூனா அலுவல் முடிந்த பின்பு அலுப்போடு படுத்து விட்டாள். நாளை எழும்பியதும் குளித்துவிட்டு அவசரமாகத் தேவாலயம் செல்லுவாள் என்பது எனக்குத் தெரியும். நான் அவள் தூங்கியதும் மெதுவாகப் படுக்கையால் எழுந்தேன். எனது இரவு உடையை அணிந்து கொண்டேன். அடிமேல் அடிவைத்து எந்த அரவமும் எழுப்பாது நித்தியின் அறையை நோக்கிச் சென்றேன். நித்தி எந்தக் கவலையும் இல்லாது நிர்மலமான முகத்துடன் அமைதியாகத் தூங்கினான். அவனையே சிறிது நேரம் பார்த்துக் கொண்டு நின்றேன். அப்பா சிறுவனாய் இருக்கும் போது இப்படித்தான் இருந்திருப்பாரென எனக்குத் தோன்றியது. அவனை அள்ளிக் கொண்டு எங்களுடைய அறைக்குச் சென்றேன். எனது கரையில் அவனைப் படுக்க வைத்துவிட்டுப் பூனை போல் எந்தச் சத்தமும் செய்யாது அவன் பக்கத்தில் படுத்துக் கொண்டேன். போர்வையால் இழுத்து அவனுக்குப் போர்த்தி விட்டேன். நாளைக்கு எப்படியாவது இவன் தேவாலயம் செல்வதைத் தடுத்துவிட வேண்டும் என்பது என்னுடைய திட்டம்.

அடுத்த நாட் காலை மூனா என்னை எழுப்பினாள். நான் எதுவும் விளங்காதது போல விழித்தேன்.

'எப்பிடி இவன் இங்க வந்தவன்?' என்றாள்.

'தெரியாது'

'சேர்ச்சுக்கு வாறியளே?'

'ச்... எனக்கு அலுப்பா இருக்குது... என்ன விடு. பிளீஸ்..'

'நித்தி... நித்தி..' என்றாள்.

'சும்மா விடு அவனை மூனா. அவன் படுக்கட்டும். நீ வேணும் எண்டாப் போட்டுவா' என்றேன்.

'நீங்க அவனை நல்ல பழக்கம் பழக விடுறியள்'

'தொண தொணக்காத. பிளீஸ்..'

மூனா என்னை விசித்திரமாய்ப் பார்த்தாள். பின்பு விருட்டென வெளியே சென்றாள். ஏதாவது அவளுக்கு விளங்கி இருக்குமோ? இருக்கலாம் என்று நான் எண்ணிக் கொண்டேன்.

இந்த அமளியில் நித்தி விழித்துக் கொண்டான். மூனா சென்றதும் அவன் என்னைப் பார்த்து,

'அப்பா நீங்கதான் என்னை இங்க தூக்கியந்தியள் இல்லையா?' என்றான்.

'ம்... ஓமடா கண்ணா?'

'அப்பிடிச் சொல்லுங்க உண்மைய. அம்மாட்டச் சொல்லுவன்'

'அதெல்லாம் சொல்லத் தேவையில்லைக் கண்ணா. நான் தூக்கியராட்டி உன்ன அம்மா இந்தக் குளிருக்கத் தர தர எண்டேல்லே இழுத்துக் கொண்டு போயிருப்பா' என்றேன்.

'ஓமப்பா... இனிமேலைக்கு நான் உங்களோடையே படுக்கிறன்'

'குட்... நீ என்ர பிள்ளைதான்'

நாங்கள் ஆறுதலாகப் பதினொரு மணி போல் படுக்கையை விட்டு எழுந்தோம். நான் நித்திக்குப் பல்துலக்கி முகம் கழுவி விட்டேன். நாங்கள் முகம் கழுவிய பின்பு காலைச் சாப்பாடு சாப்பிட்டோம். நித்திக்குக் கொன்பிளெக்ஸ் பிடிக்கும். அதையே இருவரும் சாப்பிட்டோம். அதன் பின்பு என்ன செய்வது என்கின்ற கேள்விக்கு விடை நான் ஏற்கனவே தேடி வைத்திருந்தேன். ஊரில் உள்ள பிள்ளையார் கோயில் குடமுழுக்காட்டு நிகழ்ச்சி காணொளியில் பதிந்த பிரதி என்னிடம் இருந்தது. நான் அந்தக் கொப்பியை எடுத்து டெக்கினுள் திணித்தேன். படம் ஓடத் தொடங்க நித்தி வந்து என்னுடைய மடியில் அமர்ந்தான். அவனுக்குத் தமிழிற் கதைப்பது போராட்டம். நான் அவனிடம் எப்போதும் தமிழிலேயே கதைப்பேன். மூனா நொஸ்கிற் கதைப்பாள். அவன் சாய்வும் 'நொஸ்கை' நோக்கியே இருந்தது. நான் தமிழ்ப் படிப்பிப்பதில் அதிக தவண்டை அடித்தேன்.

'என்னப்பா இது?' என்றான் நித்தி.

'நீ அப்பப்பாவோட பார்த்தியே, அந்தக் கோயில்'

'ஓ பெரிசா இருந்திச்சுது'

'ம்... பெரிய கோபுரமும்'

'என்னப்பா செய்யப் போறாங்கள்? இவ்வளவுபேர் நிக்கிறாங்கள்?'

'குடமுழுக்குச் செய்யப் போறாங்கள்'

'அப்பிடி எண்டா?'

'இது புதுசாக்கட்டின கோபுரமாம். அதைத் திறந்து வைச்சு எல்லாரையும் கும்பிட விடப்போறாங்கள். அதுக்கு முதல்ல ஐயர் பூசை செய்துதான் அவையக் கும்பிடவிடுவார்'

'அப்பா ஐயர் பாதர் மாதிரி எல்லே?'

'ம்..'

'நான் யாரைக் கும்பிடோணும் அப்பா?'

'எங்கட பிள்ளையாரைத்தான் கும்பிடோணும்'

'அம்மாவின்ர சேர்ச்சு, யேசு கிறிஸ்து...?'

'இனிமேலைக்கு நீ அங்க போகத் தேவையில்லை'

'அம்மா பாவம் எல்லே. யேசு கோவிப்பார் எல்லே?'

'இல்லை அவர் கோவிக்கமாட்டார். ஒரு கன்னத்தில அடிச்சா மற்றக் கன்னத்தைத் திருப்பிக் கொடுப்பாராம். நீ போகாமல் விட்டாலும் அவர் பெருந்தன்மையா நடப்பார். எங்கட கடவுள் அப்பிடி இல்லை. பலி, வெறி எண்டு நிக்குமாம்'

'அம்மா கர்த்தரிட்டப் போகாட்டிப் பாவமெண்டு சொன்னா'

'அவ சும்மா சொல்லி இருக்கிறா'

'அப்ப நான் எந்தக்கடவுளைக் கும்பிடோணும்?' அவன் மீண்டும் சந்தேகத்திற் கேட்டான்.

'அதுதான் சொன்னனே... பிள்ளையார் எண்டு. அவரோட சும்மா விளையாடக்கூடாது'

'கும்பிடாட்டி என்னப்பா?'

‘அப்பப்பா கோவிப்பார். பிள்ளையார் கோபம் கொள்ளுவார். அவர் எற்கனவே ஒரு தந்தத்தை முறிச்சுப் போட்டார். மற்றதையும் முறிச்சா?’

‘பாவம் பிள்ளையார். அப்ப நான் அவரைக் கும்பிர்றன் அப்பா. அப்பப்பாவையும் கோவிக்க வேண்டாம் எண்டு சொல்லுங்கோ. பிள்ளையாருக்கு நிறைய வாழைப்பழம் வாங்கிக் குடுப்பம்.’

நான் ஒரு அப்பா போகக்கூடாத கீழ் நிலையில். ஏமாற்றக் கூடாத ஒருவனையே ஏமாற்றும் அவல நிலை. எனக்கு அது புரிந்தாலும் ஐயாவின் ஆசையை நிறைவேற்ற வேண்டும் என்கின்ற வெறி என்னிடம் அந்த அவச் செயலை நியாயமாக்கியது.

‘அதென்னப்பா பெரிசா? ஆனையா?’ அவன் கவனம் காணொளியில்.

‘ம்... ஆனைதான். சாமிய அதில வைச்சுக் கொண்டு ஊர்வலம் போகப் போகினம்’

‘ம்... இஞ்ச அப்பிடிச் செய்யமாட்டினம் அப்பா’

‘ம்... எனக்குத் தெரியும். இஞ்ச அப்பிடிச் சாமியும் இல்லை’

பிள்ளையார் ஆனையில் வலம் வந்தார். பிள்ளையாரால் ஆனையில் அதிக நேரம்

நிற்க முடியவில்லை. ஆனையின் அசைவுக்கு அவர் நடனம் பிழைக்க பக்தர்களுக்குக் குலை நடுக்கம் தொற்றிக் கொண்டது. பிள்ளையார் தவறி விழுந்தால்? பதறிப்போன பக்தர் கூட்டம் மணியகாரரின் கட்டளைக்கு ஏற்ப அவரை இறக்கி அசையாத ஆனையில் வைத்துக் கட்டிச் சகடைக்கு ஏற்றினர். பிள்ளையாரைப் பாதுகாப்பாய்க் கொண்டு செல்ல வேண்டியது பக்தர்களின் கடமையல்லவா? பிள்ளையார் நடனம்? அவர் முன்பு கைலாசத்தில் பானை வண்டியோடு ஆடுவார்.

புதிய கோபுரம் வண்ணங்கள் கலந்த சிற்பங்களோடு மனித எண்ணங்களை வருடுவதாக எழுந்து நின்றது. நாங்கள் தேர்முட்டியில் ஆட்சி செய்த காலத்தின் பழமையும், பிச்சைத்தனமும் தொலைந்து போயிற்று. இன்று செல்வச் செழிப்போடு இராஜகோபுரமும் மணிமண்டபமும் வந்தாகிற்று. எங்கள் ஊரில் முதன்முதல் இராஜகோபுரம் கட்டப்பட்ட கோயில் என்கின்ற பெருமை அதற்கு உண்டாகிற்று. இந்தியாவில் பல கோயில்களுக்குக் கோபுரம் இருக்கும். இலங்கையில் அப்படி முன்பு இருந்ததில்லை. கோபுரம் கட்டுவதற்கு அங்கே சிற்பிகள் இருக்கவில்லை. பிள்ளையார் கோயில் கோபுரம் கட்டுவதற்கு இராமநாதபுரத்தில் இருந்து சிற்பிகள் வந்தனர். நான் வீட்டிற்குச் சென்ற போது அவர்களை ஒருமுறை சந்தித்தேன். அந்தச் சிற்பிகள் மிகவும் கைவண்ணம் உள்ளவர்கள். அவர்களுக்குச் சிற்பக் கலையோடு வேறு கலைகளும் கைவந்திருந்தன. அவரின் வண்டும், முட்டையும் என் ஞாபகத்தில் இன்றும்.

‘அப்பா?’

‘ம்...’

‘அம்மா வந்திட்டா’ என்றான் நித்தி.

கதவு தட்டும் சத்தம் கேட்டது. நான் சிந்தனைச் சுழலில் இருந்து விடுபட்டேன். எழுந்து சென்று கதவைத் திறந்தேன். மூனா தேவாலயத்திற்குப் புறப்பட்டுப் போன போது இருந்த கோபம் தணிந்து சாந்தரூபியாக, சற்குனியாய் வந்து நின்றாள். கோயில்கள் பலரது மனதையும் தூய்மையாக்குகின்றன. நான் என்பது ஒரு கணம் அங்கே தான் என்பதை இழக்கிறது. மீண்டும் அது எழுகிறது. எழாதவன் இவ்வுலகையும் அவ்வுலகையும் வென்றுவிடுகிறான். மூனாவுக்கும் அது அங்கே நடந்திருக்கலாம் என்பது என் எண்ணம். உள்ளே வந்த மூனா என்னைப் பார்த்துச் சிரித்த வண்ணமே,

‘தாங்ஸ்’ என்றாள். ஒவ்வொரு சிறிய விடயத்திற்கும் நன்றி சொல்லிப் பழகிப் போய்விட்ட கலாசாரம் இவர்களுடையது. அவள் அதை எனக்கும் செய்யாமல் விடுபவள் அல்ல. எனக்கு நன்றி சொல்லிவிட்டுப் பின்பு உள்ளே சென்றாள். அவள் வரவேற்பறைக்குள் போகும் போது நித்தி பிள்ளையார் கோயில் திருவிழாவைத் தொலைக்காட்சியில் பார்த்துக் கொண்டு இருந்தான். சிறிது நேரம் அவனையே பார்த்துக் கொண்டு நின்ற மூனா

பின்பு என்னைத் திரும்பிப் பார்த்தாள். வரும் போது இருந்த சாந்தம் இப்போது இருப்பதாய் எனக்குத் தெரியவில்லை. அவளது நான் திரும்ப வந்து விட்டது. முகம் இரத்தச் சிவப்பாக மாறியிருந்தது.

'நாங்கள் இதைப் பற்றி இரவைக்குக் கதைப்பம். இப்ப அவனுக்கு முன்னால எந்தக் கோபமும் வேண்டாம்' என்றேன்.
'சரி' என்று ஒப்புக்கொண்டாள்.

அவள் அதற்குப் பின்பு அதை மறந்தது போலச் சகஜமாகப் பழகினாள். மத்தியானம் சமைத்துச் சாப்பிட்டோம். பிற்பகல் திரையரங்கிற்குச் சென்று ஒரு ஆங்கிலப் படம் பார்த்துவிட்டு வந்தோம். எல்லாம் முடிந்த பின்பு நித்தியை அவனது அறையில் படுக்க வைத்துவிட்டு மூனா வந்தாள். நான் ஏற்கனவே படுக்கையில் அவளுக்கான காத்திருப்பில். மூனா வந்து என்னருகிற் படுத்துக் கொண்டாள். பின்பு மெதுவாக,

'எதெண்டாலும் நாங்கள் ஒப்பிணாக் கதைக்கோணும்' என்றாள்.
'எதை நான் கதைக்கேல்ல?' என்றேன் தெரியாதது போல.
'புத்திரன். நீங்கள் இப்ப நிறைய மாறீட்டியள்' என்றாள்.
'எதைச் சொல்லுறா மூனா?' என்றேன்.
'இப்பிடிக் கதைக்கிறதை'
'எப்பிடி?'
'எதையோ மனசுக்க வைச்சுக் கொண்டு ஒண்டும் தெரியாத மாதிரிக் கதைக்கிறது'
'..'
'என்ன பேச்சைக் காணம்?' என்றாள் அவள். என்ன பேசுவது என்கின்ற தடுமாற்றம் என்னிடம்.
'பேசினா என்னோடை கோவிக்க மாட்டியே? நான் சொல்லுறதை விளங்கிக் கொள்ளுவியா?'
'ஏன் அப்பிடி நினைக்கிறியள் புத்திரன்? நீங்கள் என்ன றொக்கற் சயன்ஸ் 'உந்து கணை விஞ்ஞானம்' பற்றியே சொல்லப் போறியள்? நான் எப்ப நீங்கள் சொல்லுறதை விளங்க முடியாமல் இருந்திருக்கிறன்?'
'இல்ல..'
'சும்மா சொல்லுங்கோ'
'ம்… சொல்லுறன். நாங்கள் ஊருக்குப் போயிருந்தோம் எல்லோ?'
'ம்… போயிருந்தம்'
'ஐயா என்னத் தனிய வயலுக்குக் கூட்டிப் போனார். உனக்கு ஞாபகம் இருக்கே?'
'ம்… இருக்குது.'
'அப்ப அவர் என்னோடை நிறைய விஷயம் கதைச்சார்'
'அப்பாவுக்கும் மகனுக்கும் கதைக்க நிறைய விஷயம் இருந்திருக்கும். அதையெல்லாம் நீங்கள் எனக்குச் சொல்ல வேணும் எண்டு கட்டாயம் இல்லை. இவ்வளவு நாளும் நீங்கள் அதைப்பற்றிச் சொல்லவும் இல்லை' என்றாள் அவள்.
'இப்ப சொல்லுறன் கேள். நீ அதைத் தெரிஞ்சு கொள்ள வேணும் எண்டு நினைக்கிறன்'
'சரி சொல்லுங்க' என்றாள்.
'மதத்தில ஐயா எப்பிடி நம்பிக்கை உள்ளவர் எண்டது உனக்கும் தெரியும். அவருக்கு நான் இங்க கலியாணம் செய்தது விருப்பம் இல்லை'
'உங்கடை வாழ்க்கை இது. அதிலை உங்கடை விருப்பம் இல்லையா முக்கியம்? அதற்குள் ஏன் அவர் மூக்கை நுழைக்கிறார்? அதுவும் இவ்வளவு காலத்துக்குப் பிறகு? சரி… அது இப்ப முடிஞ்ச கதைதானே?'
'அவை வாழ்ந்த விதம் அப்பிடி. அவையால அப்பிடித்தான் நினைக்க முடியும். அதுக்காக அவையத் தப்புச் சொல்ல முடியாது'

‘சரி சொல்ல வந்ததைச் சொல்லுங்க’

‘நாங்கள் அங்க போனதுக்குப் பிறகு எங்களை அவர் முழுமையாக ஏத்துக் கொண்டார். நீயும் அதை உணர்ந்திருப்பாய். அதோட அவருக்கு நாங்கள் நித்தி எண்டு தமிழ்ப் பெயர் வைச்சதில ஏகப்பட்ட சந்தோஷம். பேரனில கொள்ளை ஆசை. அவர் என்னோடை வயலுக்கு வரேக்க இதையெல்லாம் சொல்லிப் போட்டு என்னிட்ட ஒண்டு கேட்டார். நான் உண்மையாகவே உறைஞ்சு போயிட்டன்.’

நான் நிறுத்திவிட்டுப் பேசாது படுத்திருந்தேன்.

‘அவர் அப்பிடி என்ன கேட்டவர்?’ என்றாள் மூனா.

‘எங்கடை முறைப்படி பேரன் செத்திட்டாப் பேரப் பிள்ளையள் எல்லோரும் சவம் எடுக்கிறதுக்கு முதல்ல நடக்கிற சடங்கில பந்தம் பிடிப்பினம். அதுதான் ஒவ்வொரு பேரனும் தன்னுடைய தாத்தாவுக்குச் செய்யிற கடைசிக் காரியம். அஞ்சலி. அதை நித்தி ஒரு நாளைக்கு ஐயாவுக்குச் செய்ய வேண்டி வரும். அப்பிடி அவன் செய்யேக்க சிலுவையைப் போட்டுக் கொண்டு ஒரு வேதக்காரனாச் செய்யக் கூடாது தெண்டு என்ர கையைப் பிடிச்சார். பிச்சை கேட்கிற மாதிரிக் கேட்டார். அண்டைக்குத்தான் ஐயா என்னிட்ட மன்றாடினதை நான் பார்த்தன். எனக்கு அழுகையே வந்திட்டுது. அதே நேரம் என்னிட்ட வந்து இப்பிடி ஐயாவை நிக்கப் பண்ணீட்டனே எண்டு மனசு கிடந்து வேதனைப்பட்டிச்சு. அதையெல்லாம் எப்பிடிச் சொல்லுறது? அண்டைக்கு நான் ஐயாவுக்கு உன்னைக் கேட்காமல் ஒரு சத்தியம் பண்ணிக் குடுத்தன். நித்திய ஒரு சைவப் பிள்ளையாத்தான் ஐயாவுக்குப் பந்தம் பிடிக்க விடுகிறது எண்டு சபதம் எடுத்தன்’

நான் மீண்டும் பேச்சை நிறுத்தினேன்.

‘சோ இப்ப என்ன செய்யிறதா உத்தேசம்?’

‘அவனுக்கு எங்கட மதத்தைப் பற்றிச் சொல்லிக் குடுக்கோணும். எங்கட மத முறைப்படி அவன்ர பழக்க வழக்கம், நடமுறை எல்லாம் மாற வேணும்’ என்றேன்.

‘பெயர் விஷயத்தில நான் விட்டுக் கொடுத்தன். அது உங்களுக்கு நல்ல ஞாபகம் இருக்கும். அதை மாதிரி எல்லா விஷயத்திலும் நான் விட்டுக் கொடுக்கோணும் எண்டு எதிர்பாக்கிறியளா?’

‘நிச்சயமா எதிர்பார்க்க முடியாதுதான். எண்டாலும் ஒரு பெரியவருடைய ஆசையை நிறைவேற்ற வேண்டியது எங்களுடைய கடமை இல்லையா?’

‘எனக்கும் ஆசையிருக்குது’ என்றாள் அவள்.

‘தெரியும். அவர் கொஞ்சக் காலத்தில போயிடுவார். அதுக்குப் பிறகு நீ உன்ர விருப்பத்திற்கு அவனை வளர்க்கலாம். நான் அப்ப தலையிட மாட்டன். அதுவரைக்கும் அவற்றை விருப்பத்திற்கு..’

‘எனக்கு இது சரி வருமெண்டு தெரியேல்லை’ என்றாள் அவள்.

‘அப்பிடிச் சொல்லாதை. இதை நாங்கள் ஐயாவுக்காகச் செய்ய வேணும்’

‘நித்தி எண்டு பெயர் வைச்சுக்கொண்டு கழுத்தில சிலுவை இருந்தால்தானே ஒருமாதிரி’ என்றாள் அவள்.

‘மூனா அப்பிடி நினைக்காதை. அவருக்குப் பிறகு நீ நித்திய எப்பிடி வளர்த்தாலும் நான் அதில தலையிடமாட்டன். இது சத்தியம்’ என்றேன்.

‘ம்..’ என்றாள் அரை மனதாக.

‘இன்னொரு விஷயம்’ என்றேன்.

‘என்ன?’

‘மதம் மாத்திரம் இல்லை, அவனுக்கு நான் எங்கட மொழியும் படிப்பிக்கப் போறன்’

‘எனக்குத் தமிழ் விளங்காதே’ என்றாள் அவள்.

‘நீ நொஸ்கிலேயே கதை’

‘அப்ப நீங்க தமிழில கதைக்கப் போறீங்களா?’

‘ம்..’

‘அப்ப அவன் எந்த மொழியில படிக்கிறது?’ என்று அவள் தொடர்ந்து கேட்டாள்.

‘அது நிச்சயமாக ‘நொஸ்க்’தான்’ என்றேன்.

‘அப்ப எப்பிடித் தமிழ்?’

‘வீட்டில வைச்சு நான் படிப்பிக்கிறன்’ என்றேன்.

‘நான் நிச்சயமாய்க் குறுக்க வரேல்ல. ஆனா நீங்க சொன்ன வார்த்தை மீறக்கூடாது’

‘நிச்சயமா இல்லை’

‘உங்கடை ஐயா வித்தியாசமானவர்தான்’

‘ஏன் அப்பிடிச் சொல்லுறா?’

‘இல்லைத் தங்கடை மதம், தாய் மொழி, கலாச்சாரத்தில இவ்வளவு பற்று வைச்சிருக்கினமே? அதுதான்’

‘உண்மைதான்... நான் அப்பிடி இல்லை’

‘ச் நான் அதைச் சொல்லேல்லை’

மூனா என்னை இழுத்துத் தழுவிக் கொண்டாள். மூனா அதன் பின்பு அதைப் பற்றி அலட்டிக் கொள்ளவில்லை. நான் தலையால் நடப்பதான அவஸ்தையில். நித்தியை இழுத்துப் பிடித்துப் பாடம் சொல்லிக் கொடுக்க வேண்டி வந்தது. ஒத்த வயதுடைய இந்நாட்டுச் சிறார்களுடன் நித்தி சேர்ந்து திரிந்தான். இப்படித் திரிந்தால் தமிழ் படிக்கமாட்டான் என்பது எனக்குத் தெரியும். அவனை நான் வலுக்கட்டாயமாகத் தமிழ்ப் பிள்ளைகளுடன் பழக விட வேண்டிய நிர்பந்தம். தமிழ்ப் பிள்ளைகளுக்கு எங்கே போவது? எவ்வளவு தான் நான் அக்கறை எடுத்தாலும் அவன் புரிந்து கொண்டது மிகவும் குறைவாகவே இருந்தது. தட்டுத் தடுமாறியே அவன் தமிழ் கதைத்தான். மொழி படிப்பதற்கு ஒருவன் வாழும் சமுதாயம் எவ்வளவு முக்கியமான பங்கு வகிக்கிறது என்பது எனக்கு நன்கு புரிந்தது. கலந்து திருமணம் செய்த பின்பு கலப்பு இல்லாத கலாச்சாரம் காக்கலாம் என்பது கனவாகியது.

தொடங்கியதை விட எனக்கு மனம் வரவில்லை. தொடர்ந்தும் கடும் பாடுபட்டேன். அவன் போகும் இடம் எங்கும் நான் சொல்லிக் கொடுப்பதற்கு வால் போல அலைந்தேன். அவன் தனக்கு விரும்பியதை மட்டும் கிரகித்துக் கொண்டான். நித்தியின் திண்டாட்டம் எனக்குப் புரிந்தது. அவன் திண்டாட்டத்தைப் பார்த்தாலும் என்னால் ஐயாவுக்குக் கொடுத்த வாக்கை மறக்க முடியவில்லை. மனிதன் எதிர்பார்ப்பது ஒன்று. உலகில் நடப்பது இன்னொன்று.

★

எனக்கு இலங்கையில் இருந்து தொலைபேசி அழைப்பு ஒன்று வந்தது. அவர்கள் புண்ணியம் செய்திருக்க வேண்டும். என்னால் நம்ப முடியவில்லை. நெஞ்சை அறுத்த அந்த வேதனையைத் தாங்க முடியவில்லை. இருவரும் ஒரே நேரத்தில் எப்படி? என்னால் அதை நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லை. மூச்சுவிட முடியாது கவலை தலையைச் சுற்றிக் கட்டிய பைபோல அடைத்துக் கொண்டது. தொண்டையை யாரோ இறுக்கிப் பிடிப்பதான அவஸ்தை முடிவின்றித் தொடர்ந்தது. அதிர்ச்சி முதலிற் தாக்கியது. உண்மை புரிந்ததும் அழுகை ஆக்கிரமித்தது. நான் அழுது மூனா பார்த்ததில்லை. அன்று எல்லோரும் பார்த்தார்கள். அவள் பதறினாள். சமாதானம் சொன்னாள். என்னால் எதையுமே ஏற்றுக் கொள்ள முடியவில்லை. நடந்ததை நான் மறுதலித்தேன். இப்படியும் நடக்குமா என்கின்ற கேள்வியே என்னை ஆட்டிப் படைத்தது. இது பொய்யாக இருக்குமெனப் போலியாக எண்ணத் தோன்றியது.

அழுது தீர்த்து ஆறுதலாகச் சிந்தித்த போது நடந்ததை மாற்ற முடியாது என்கின்ற உண்மை புரிந்தது. நடந்ததை ஒத்துக் கொள்ளாது அடம்பிடிப்பது முட்டாள்தனம் என்பதும் எனக்குப் புரிந்தது. நான் உடனடியாகப் பயணப்பட்டேன். நித்தியையும் இழுத்துக் கொண்டு சென்றேன். நான் போய் இறங்கிய போது எல்லாம்

முடிந்துவிட்டது. ஐயாவின் பிரேதத்தைத் தேடி எடுக்கவே முடியாது போய் விட்டது. தேடி எடுத்த அம்மாவின் உடலை வைத்திருக்க முடியாது என்கின்ற காரணத்தினால் அவசரமாகத் தகனம் செய்து விட்டார்கள். பந்தம் பிடிப்பது கனவாகிப் போயிற்று. நோந்த மனது மேலும் நோவதாயிற்று.

என்னால் எதுவும் செய்ய முடியவில்லை. நான் முதலில் நினைத்தது போல இது ஒன்றும் கற்பனை இல்லை என்பது மேலும் நிரூபணமாகிற்று. நிஜத்தை ஒத்துக் கொள்ளத் தொடங்கினேன். காரியங்கள் நடந்தன. நித்திக்கு நான் ஒவ்வொன்றாக விளங்கப்படுத்தினேன். நித்தியை இனி இப்படி இரு அப்படி இரு என நான் கட்டாயப்படுத்தத் தேவையில்லை. ஐயா அம்மாவின் காரியம் முடிந்த போது இவனைக் கட்டாயப்படுத்துவதும் முற்றுப்பெற்றது. நாங்கள் அதிக நாட்கள் அங்கே நிற்கவில்லை. அது பாதுகாப்பாய் இருக்கவில்லை. யார் தலையில் எப்போது விழும் என்பது யாருக்கும் தெரியாது. இனி இங்கு எப்போது திரும்பி வருவேன் என்பதும் நான் அறியேன். இவ்வளவு சொத்தும் கிடந்து சீரழிவதா என்கின்ற கேள்வி எழுந்தது. குத்தகைக்குக் கொடுக்கலாம். சொந்தக்காரர்கள் போல் யாரும் எதையும் பார்த்துக்கொள்ளமாட்டார்கள். எல்லாவற்றையும் விற்றுவிட்டுப் போவதென முடிவெடுத்தேன். எனக்கு விற்பதில் அதிக சிரமம் இருக்கவில்லை. குமரேசன் வீட்டுக்காரரிடம் இப்போது நல்ல பணம் இருந்தது. அவர்கள் அரைவாசிச் சொத்தை வாங்க விருப்பப்பட்டார்கள். மீதியைச் சிற்றப்பா வாங்கிக் கொண்டார். எனக்குக் குமரேசன் இங்கேயே அந்தக் குறிப்பிட்ட தொகையைத் தருவதாக ஒப்புக் கொண்டான். சிற்றப்பாவின் ஒரு வாரிசு கனடாவில் இருந்தான். அப்பா அம்மாவின் இறப்பு எனக்கும் அந்த நாட்டிற்கும் இருந்த இணைப்பிற் கேள்வியைத் தோற்றுவித்தது.

நான் எந்த நாட்டைச் சார்ந்தவன்? பிள்ளையும் மனைவியும் இந்த நாட்டின் குடிமக்கள். அத்தால் நான் இந்த நாட்டவனாக முடியுமா? பிறப்பு மட்டும் குடியுரிமையை நிர்ணயிப்பது அல்ல. ஒரு நாட்டில் வாழும் காலம் பொதுவாக அவனுக்குக் குடியுரிமைப் பெற்றுத் தருகிறது. குடியுரிமை பெற்றவர்களால் அந்நாட்டின் குடிமக்களாக முழுமையாக உணர முடிகிறதா? அல்லது பிறந்த நாட்டின் ஏக்கம் இடைவிடாது தொடர்கிறதா? என் ஏக்கம் தொடர்ந்தது. நான் எந்த நாட்டவன்? மீண்டும் மீண்டும் கேட்டுக்கொண்டேன்.

நித்தியை நான் இப்போது எதற்கும் வற்புறுத்துவதில்லை. என் மொழியை, என் கலாச்சாரத்தை வாழவைப்பது என்றால் நான் எனது நாட்டிற்குத் திரும்பிப் போகவேண்டும். தொந்தரவு பண்ணி அன்னிய நாட்டில் தமிழை வாழ வைக்கலாம் என்பது பகற்கனவு. அது 'கூழுக்கும் ஆசை மீசைக்கும் ஆசை' என்கின்ற தப்புத் தாளம்.

நித்தி தமிழை விட்டு 'நொஸ்க்'கைச் சரளமாகப் பிடித்துக் கொண்டான். ஆங்கிலத்திலும் அவனுக்குப் பரிச்சயம் இருக்க வேண்டும் என்பதில் மூனா கவனம் செலுத்தியதால் நானும் அதற்கு ஊக்கம் கொடுத்தேன். அவன் அதிலும் தேர்ச்சி பெற்றான். நித்தியின்மேல் நான் செலுத்திய திணிப்புக் குறைந்ததில் மூனாவுக்குப் பரம நிம்மதி. அவளுக்கும் நித்திக்கும் எங்கள் கலாச்சாரத்தைத் தெரிந்திருக்க வேண்டும் என்பதில் அக்கறை உருவாகி இருந்தது. திணிப்புப் பிடிக்கவில்லை. இந்த நாட்டில் பிறந்து வளர்பவன் இந்த நாட்டுக் கலாச்சாரத்தைக் கடைப்பிடிப்பதே இயற்கை என்பாள். அவள் சொல்வதிலும் ஒருவித நியாயம் இருந்தது. எங்கள் நாடாய் இருந்து, அதில் ஒரு பிள்ளை இப்படிப் பிறந்தால் நாங்கள் விடுவோமா? அவள் கேட்டதின் நியாயம் எனக்குக் கொஞ்சம் கொஞ்சமாக உறைத்தது. நான் அப்பாவின் சொல்லுக்காகச் செய்தது சரியா என்கின்ற சந்தேகத்தை அது எழுப்பியது. செத்த மனிதனுக்குச் செய்தவற்றைப் பற்றிக் கதைக்கக் கூடாதென நான் அந்த எண்ணத்திற்கு முற்றுப்புள்ளி வைத்தேன்.

★

நித்திக்குப் பன்னிரண்டு வயதாகியது. இங்குள்ள சிறுவர்கள் பன்னிரண்டு வயதில் நடந்து கொள்ளும் விதத்திற்கும் நாங்கள் அதே வயதில் நாட்டில் நடந்து கொண்ட விதத்திற்கும் எவ்வளவோ வித்தியாசங்கள் இருந்தன. என்னை அது மலைக்க வைக்கும்.

மனிதனின் கலாச்சார வாழ்வு இளமைப் பருவத்தோடு பின்னிப் பிணைகிறது. பின்பு அவன் போகும் இடம் எல்லாம் அது காவிச் செல்லப்படுகிறது. வேறு மதத்திற்கு மாறும் மனிதனாற்கூட வேறு கலாச்சாரத்திற்கு மாற முடிகிறதா என்பது கேள்விக்குறியாகிறது. எந்த மனிதனாலும் முழுமையாக அப்படி மாற முடிவதில்லை என்பது என் புரிதலாகியது. பெருஞ் சமூகத்தோடு நெருக்கமாகக் கலந்துவிட்டதாக நினைத்தாலும், இளமைப் பருவத்துப் பாடங்கள் பசுமையாக அடிமனதில் ஒளிந்து கிடக்கின்றன. என் இளமைப் பருவமும் வென்றுவிட முடியாத நினைவுச் சின்னங்கள் தாங்கியவை. மூனாவோடு வாழ்ந்தாலும் எனது இளமைப் பருவக் கலாச்சாரமே எனது செய்கை மீது ஆதிக்கம் செலுத்துகிறது. அதுவே எனக்கு மனத் திருப்தி தருகிறது. நித்தியின் இளமைக் கலாச்சாரம் இந்த நாட்டிற்கு உரியது. அவன் அதில்.

★

அன்று கித்தை எனப்படும் சிறுகுடிலுக்குச் செல்வதற்காக நாங்கள் புறப்பட்டோம். நித்தி அப்போது வெளியே போய் விட்டான். அவனுக்காகச் சிறிது நேரம் நானும் மூனாவும் காத்திருக்க வேண்டி வந்தது. நித்தி திரும்பி வீட்டிற்கு வந்தான். அவன் வந்ததும் மூனாதான் தொடங்கினாள்.

'நித்தி கித்தைக்கு வாறியா?' என்றாள்.

'இப்பவா?'

'ஓ... நாங்க வெளிக்கிட்டாச்சு'

'என்ன மாறியா வரச்சொன்னவள்'

'ம்...?'

'நான் அங்க போறன் அம்மா?'

'அதுக்கென்ன அவசரம்? இன்னுமொரு நாளைக்குப் போகலாம் தானே?'

'அப்பிடி இல்லை அது. நான் ஒரு விஷயம் சொல்லட்டுமா?'

'ம்... சொல்லு.'

'நான் அவளை விரும்புறன். நானும் அவளும் உங்டம் கிளப்புக்குச் (இளையோர் விடுதி) சேர்ந்து போகப் போகிறம்'

'ஒண்டு செய்யன் நித்தி?' என்றாள் மூனா.

'என்ன?'

'அவளையும் கூட்டிக் கொண்டு கித்தைக்கு வாவன். எல்லாரும் அங்க போவம்' என்றாள் மூனா.

'ம்... இதுவும் நல்ல ஐடியாதான். நான் றிங்பண்ணி அவளைக் கேட்கிறன்.'

என்று கூறிவிட்டு நித்தி போனில் கதைக்க உள்ளே சென்றான். நான் மூனாவைப் பார்த்து,

'இதுக்கு என்ன அர்த்தம்?' என்றேன்.

அவள் என்னைப் பார்த்துச் சிரித்தாள். புரியவில்லையா உனக்கு என்கின்ற கேள்வி அதில் இருந்து. அதை உறுதி செய்வது போல,

'அவளைக் காதலிக்கிறான். இது என்ன புதுசா?' என்றாள் மூனா.

'ம்... இல்லை. பள்ளிக்கூடத்திலேயே செக்ஸ் எத்தினை வயசுக்குப்பிறகு எண்டதைப் பற்றிப் படிப்பிக்கினம்தானே... என்னால இதுகளைச் சகிக்கேலாமல் இருக்குது' என்றேன்.

'ஓ கமோன் புத்திரன். இது நோர்வே. நீங்க இங்க எவ்வளவு காலம் இருந்தாச்சு, இன்னுமா இப்பிடி?' என்றாள் மூனா. அதற்கிடையில் 'அம்மா் வாறாளாம்..' என்ற வண்ணம் நித்தி வந்துவிட்டான்.

நித்தி அன்று கித்தையில் அவளை என் முன்பாகவே முத்தமிட்டான். அவளோடு தனியே சுற்றிவரச் சென்றான். நான் தலையிட முடியாது. நோர்வேயைப் பொறுத்தவரை அது அநாகரிகம். நித்தியின் அந்த முதல் நட்பு மூன்று மாத ஆயுளிலேயே முடிந்ததை நான் பின்பு அறிந்து கொண்டேன். இவர்கள் காதல் வரும் போகும். காதல் போகும் போது

வேதனைப்படாத உள்ளங்கள் உண்டா என்பது எனக்குத் தெரியாது. உறவும், பிரிவும் இன்பத்திற்கும், வேதனைக்குமான ஊற்றுக்கண்களாக.

# 9

**உ**ணவு மனித இயக்கத்திற்கான சக்தியைத் தருகிறது. முதுமை மனித இயக்கத்தை விழுங்கி, சக்தியின் தேவையைக் குறைக்கிறது. சக்தியின் தேவை அதிகம் இல்லை என்றாலும் இயற்கையின் சேமிப்பின் உத்தியாக ஒவ்வொரு வேளையும் பசிப்பதில் இன்னும் மாற்றம் ஏற்படவில்லை. காலைச் சாப்பாட்டிற்காய் நான் சென்றேன். குமரேசனும் அங்கே வந்தான். காலைச் சாப்பாட்டை இன்று கொண்டு வந்தவரைப் பார்த்த போது எனக்கு ஆனந்தம். 'இனம் இனத்தைச் சாரும்' என்பது சரியாக இருந்தது. சொந்த இனத்தைக் காணும் போது சொல்லாமற் கொள்ளாமல் சுரந்து வரும் நட்பு அது.

இப்போது நிறையத் தமிழ் ஆட்களும் இங்கு வேலை செய்யத் தொடங்கி விட்டார்கள். அவனது பெயர் வினேஸ். அவன் இன்று மாத்திரம் வேலை செய்ய வேண்டும். அவன் ஒன்பதாவது படிக்கிறான். இன்று உதவி செய்வதற்கு எல்லாப் பாடசாலைகளும் பணம் சேர்த்து அனுப்பும் நாள். அதற்காக எல்லா மாணவர்களும் ஒவ்வொரு இடத்திற்குச் சென்று வேலை செய்து, அந்தச் சம்பளத்தை அன்பளிப்பாகக் கொடுப்பார்கள். அதை நிறைவேற்ற இவன் இங்கு வந்துள்ளான். சுயமாகச் சாப்பிட முடியாதவர்களுக்குச் சாப்பாட்டை ஊட்டிவிட வேண்டும். அவன் தலையில் அந்தப் பணி தூக்கி வைக்கப்பட்டது. இங்கு நிரந்தரமாகப் பணி புரிபவர்களில் ஒருத்தி அவனை கூட்டிச் சென்றாள். அவனுக்கு ஒரு கிழவியை அறிமுகப் படுத்தினாள். பின்பு அந்தக் கிழவிக்கு எப்படி உணவு ஊட்டுவது என்பதை விபரமாக விளங்கப்படுத்திவிட்டு அந்த இடத்தைவிட்டு நகர்ந்துவிட்டாள். தாதி சென்றதும் வினேஸ் அந்தக் கிழவிக்கு உணவு ஊட்டத் தொடங்கினான். அப்படி இவன் உணவு ஊட்டுவற்கு அருகே சென்ற போதுதான் அந்தக் கிழவியால் அவனது நிறத்தைக் கவனிக்க முடிந்தது. கிழவி உசாராகிவிட்டாள். அவனைப் பார்த்து 'தொடாத' என்று கத்தினாள். கிழவி கத்தியதும் நாங்கள் எல்லோரும் 'என்ன?' என்பது போல அந்தத் திசையை நோக்கிப் பார்த்தோம். வினேஸ் மொழி புரிந்தவன். அவன் விடாது கிழவியிடம் காரணம் கேட்டான்.

'ஏன் தொடக்கூடாது?' என்றான்.

'நீ கறுப்பு' என்று கூறினாள் அந்தக் கிழவி.

'ஓ அது ஒண்டும் பிரச்சனை இல்லையே?'

'இல்லை. என்னைக் கறுப்பன் தொடக்கூடாது.'

'இப்பிடிக் கதைக்கிறது சட்டப்படி குற்றம் தெரியுமா?'

'குப்பைச் சட்டத்தை விடு. என்னை அது என்ன செய்ய முடியும்?' என்றாள் அந்தக் கிழவி.

வினேஸ் அதைக் கேட்டுக் கதைக்க விருப்பம் இல்லாதவனாய் பரிதாபமாய் அங்கே நின்றான். இதற்குள் நிரந்தரமாக வேலை செய்யும் தாதி அங்கே வந்தாள். வினேஸ்சைக் கிழவியிடம் இருந்து விடுவித்தாள். பின்பு கிழவியைப் பேசிய வண்ணம் உணவு ஊட்டத் தொடங்கினாள்.

அறியாமையோடு சேர்ந்த நிறவெறி. முதுமையிலும் சாகாத வெறுப்பு. காலம் மாறிப் போகிறது. கடைசிக் காலத்தில் கறுப்பர்கள்தான் உதவி செய்ய வேண்டும் என்பதாகிற்று. மூளை மந்தமான காலத்தில் முற்போக்கை எதிர்பார்க்க முடியுமா? ஒளிந்து கிடந்த உண்மைகள் வெளிச்சத்திற்கு வருகின்றன. உலகத்திற்கு இரண்டு பக்கங்கள் உண்டென்பது வினேஸ்சிற்கு இன்று புரிந்திருக்கும்.

வினேஸ் அதன் பின்பு அங்கே நிற்கவில்லை. அவன் சமையல் அறைக்குச் சென்று விட்டான். அது விடுதலையா அல்லது தப்பித்து ஓடுதலா என்பது பற்றி என்னால் நிதானிக்க முடியவில்லை.

★

எனது நினைவுகள் நித்தியை நாடிச் சென்றன. பதின்நான்கு வயது. அது பரபரப்பை வெடிகுண்டாக உடலுக்குள் பொதிந்து வைத்திருக்கும் வயது. எல்லாம் தான் நினைத்தது போல் நடக்க வேண்டும் என்கின்ற ஓர்மமான வயது. விரும்பியதை எல்லாம் அனுபவித்தால் என்ன என்று எண்ணத் தோன்றும் வயது. இந்த வயசிலே குழந்தைப் பருவத்தில் இருந்த குணங்கள் மறைந்திருக்கும். வளர்ந்தவர்களுக்குரிய வறட்டு மனோபாவம் முளை விட்டுப் பயிராகும். பொய் சரளமாக வாயில் வரும். பெண்மேல் காமம் கொள்ளவைக்கும்.

நித்தியின் வளர்ச்சி எனக்குச் சந்தோஷத்தையும் பயத்தையும் குழைத்துக் கலவையாகத் தந்தது. சிறுவனாய் இருக்கும் போது இவன் என் கட்டுப்பாட்டில் என்கின்ற மனத் துணிவு. வளர வளர அது தளர்ந்து போகிறது. 'நீ எங்கே போகிறாய்?' என்று அடிக்கடி கேட்க முடியாது போய்விடுகிறது. அப்படிக் கேட்பது சரியா என்கின்ற கேள்வி பிறக்கிறது. கேட்கும் போது எனக்கே கூச்சம் ஏற்படுகிறது. அவனது பார்வையில் 'நீங்கள் இப்படிக் கேட்பது சரியா?' என்கின்ற கேள்வி இருப்பதாய்த் தோன்றுகின்றது.

நான் இலங்கையில் அப்படி வளரவில்லை. பதின்நான்கு வயதிலும் அம்மாவின் பிள்ளை. அம்மாவின் ஸ்பரிசத்தை விட வேறு பெண்ணின் ஸ்பரிசம் படாத மேனி. அப்பாவின் இறப்பிற்குப் பின்பு நித்தியின் கலாச்சாரத்திலோ மொழியிலோ தலையிடுவதாய் எனக்கு உத்தேசம் இருந்ததில்லை. அத்தால் மௌனம் காத்தாலும், கவலை என்னை இடைவிடாது அரித்தது.

இவர்களின் பதின்நான்கு வயதே வேறு விதமானது. நித்தி அதையே தனது பதின்நான்கு வயதுப் பழக்கமாகவும் வைத்திருந்தான். மூனாவுக்கு இதில் எந்தப் பிரச்சனையும் இருக்கவில்லை. என்னால் அதைச் சகிக்க முடியவில்லை. எனது பிள்ளை என் கையைவிட்டு நழுவுவதாக மனசு அடித்தது. பழகக் கூடாத பழக்கத்தைப் பழகக் கூடாத வயதிற் பழகுவதாகப் புழுங்கத் தொடங்கினேன். அதற்கு நான் என்ன செய்ய வேண்டும்? நித்தியிடம் என்ன சொல்ல வேண்டும்? இது எப்படிப் பிழையானதென நான் வாதிக்க முடியும்? எல்லாம் எனக்கு விடை காண முடியாத கேள்விகளாகின. நான் எதை எதிர்பார்க்கிறேன்? அது இங்கே சாத்தியமானதா?

வேட்டி கட்டி, விபூதி தரித்து, பக்தராய்க் கோயிலை வலம் வருவது இங்கே சாத்தியமில்லை என்பது எனக்குப் புரிந்தது. நான் அதை நித்தியிடம் எதிர்பார்க்கவும் முடியாது. அப்படி என்றால் நான் எதிர்பார்ப்பது என்ன? எங்கள் இருவரது சொல்லையும் அவன் கேட்க வேண்டும். நேரத்திற்கு வீட்டிற்கு வரவேண்டும். பாடம் படிக்க வேண்டும். நேரத்திற்குச் சாப்பிட வேண்டும். நேரத்திற்கு உறங்க வேண்டும். பணிவோடு தாய் தந்தைக்கு அடங்கி நடக்கும் பிள்ளையாக இருக்க வேண்டும். சுள்ளென்று எரியக் கூடாது. இந்த எதிர்பார்ப்புக்கள் அவனுக்கு எப்படித் தோன்றும்? கிளிப்பிள்ளை போல தன்னை வளர்க்க எண்ணுவதாய்த் தோன்றுமா? வீட்டையே சிறையாக எண்ணத் தோன்றுமா? காலங்களும் கலாச்சாரங்களும் வளர்ப்பில் நிறையவே மாற்றங்களைக் கொண்டு வந்து விட்டன. ஒரு காலத்தில் ஒழுக்கமாகப் பார்க்கப்பட்டது இன்னொரு காலத்திற் காட்டுமிராண்டித் தனமாகப் பார்க்கப் படுகிறது. இன்று நாகரிகமாக இருப்பது இன்னும் சில காலத்தில் அநாகரிகமாக மாறலாம். எண்ணங்களின் நிலைகூட வயதின் நிலையோடு மாறுகிறது. நான் சிறுவனாய் இருக்கும் போது எனது ஐயாவை அடிக்கடி மனதிற்குள் திட்டியதுண்டு. 'ஏன் இவர்கள் இப்படிக் கட்டுப்பாடாய் இருக்கிறார்கள்?' என்று எண்ணி மனதிற்குள் வெறுப்பை வளர்த்ததுண்டு. சுதந்திரமாய் எங்கும் போய் எப்படியும் திரிந்துவிட்டு, எந்த நேரத்திலும் திரும்பிவர எண்ணியதுண்டு. அம்மா என்னை அப்படி எல்லாம் சுதந்திரமாகத் திரிய விட்டதில்லை. அதை அவர் சுதந்திரம் என்று எண்ணவில்லை. நான் சுதந்திரமாக எண்ணியதை அம்மா கட்டாக்காலித்தனமாய் எண்ணியிருப்பார். மனதுக்குப் பிடிக்காவிட்டாலும் நான் அம்மாவின் விருப்பப்படியே பலவேளை நடந்தேன்.

அம்மாவின் எண்ணத்திற்கு ஏற்ப நான் ஒழுகி இருக்கலாம். பிற்காலத்தில் நானும் அதை மீறி இருக்கிறேன். அதை நான் நித்தியிடம் எதிர்பார்க்க முடியாது. நித்தியின் எண்ணங்கள் அதற்கு ஒத்துப் போகாது. நான் இருந்ததிற்கும் அவன் இருப்பதிற்கும் ஆயிரமாயிரம் வித்தியாசங்கள். நித்தி சிறுவனாய் இருக்கும் போதே ஒரு பெண் நண்பியோடு கூடித் திரிந்தான். அது பின்பு அறுந்து போய்விட்டது. அறுந்த அந்த நிலைமை நீடிக்கவில்லை. அது இங்கு நீடிப்பதும் இல்லை. ஒருவனது வாழ்க்கையில் எத்தனை காதலிமார் வந்து போவார்கள் என்பதிற்கு எந்த விதியும்

இங்கு இல்லை. அவரவர் மனநிலைக்கேற்ப அது அமைந்து போவதுண்டு. நித்தியின் முதற் காதல் புஸ்வானமாய்ப் போனது, அதைக் காதல் என்று சொல்வதா? அந்த வயதில் அதற்கு, அவர்களுக்கு அர்த்தம் புரிந்திருக்குமா? ஆணுக்கும் பெண்ணுக்கும் இயற்கையாகவே ஈர்ப்பொன்று இருக்கிறது. அந்த ஈர்ப்பு அவர்களை இணைத்திருக்கிறது. எதனால் இணைந்தோம் என்பது புரியாமலே அவர்கள் இணைந்திருந்தார்கள். அர்த்தம் புரியாது ஆரம்பித்த நட்பு என்பது என் எண்ணம்.

இளமையில் நடக்கும் பல சம்பவங்கள் விரைவாகவே ஞாபகத்தில் இருந்து நீங்கிவிடும். ஒன்றைப் பற்றி அதிகம் சிந்தித்துக் கொண்டிருக்கும் காலம் அல்ல அது. ஆயிரமாயிரம் விஷயங்கள் அலையலையாக ஆக்கிரமித்துக் கொள்ள, எதற்குமே நேரமில்லாது ஓடித்திரியும் காலம். நித்தியும் ஓடித் திரிந்தான். அரும்பிய அந்த நட்புக் கருகியதையும் அவன் சில காலத்தில் மறந்து திரிந்தான். ஒரு முறை நட்பில் தோற்றுவிட்டால் எங்கள் காலத்துக் கதை வேறு. நாங்கள் தாடி வளர்த்துக் கொள்வதை காதல் தாற்பரியமாகக் கொண்டிருந்தோம். நித்தி அப்படி இருக்கவில்லை. அவன் அப்படியான சூழ்நிலையிலும் வளரவில்லை. அவன் அப்படி இருந்திருந்தால் எனக்கு நிம்மதியாக இருந்திருக்கும். நான் அப்படித்தானே இருந்தவன். நித்தியும் அப்படியே இருக்க வேண்டும் என்று ஆசைப்பட்டேன். சிலவேளை இது எனது மனவியாதியாக இருக்கலாம். இங்கு நான் இதைக் கூறினால் என்னை மனவியாதிக்காரன் என்றுதான் கூறுவார்கள். சிறு வயதிலேயே ஆணும் பெண்ணும் காதல் கொள்வது நல்ல வளர்ச்சியாகக் கருதப்படும் நாட்டில் எனது எண்ணத்தைக் கேட்டால் நிச்சயம் சிரிப்பார்கள். நித்தி மிக விரைவாகவே மாறினான். தாயோடு என்றாவது ஒருக்கால் தேவாலயம் சென்று வருவான். நான் அவன் கடவுளை மறக்கவில்லை என்றுதான் எண்ணினேன். அவன் தேவாலயம் சென்றதற்கு வேறு காரணம் இருந்தது. அது எனக்கு முதலில் பிடிபடவில்லை. மூனாவுக்குப் பிடிபட்டதோ தெரியவில்லை. அவள் எதையும் தெரிந்ததாகக் காட்டிக் கொள்ளவில்லை. அன்று தேவாலயம் போய்விட்டு வந்த போதுதான் அவளை வீட்டிற்குக் கூட்டிக் கொண்டு வந்தார்கள். அன்றுதான் நான் முதன் முதல் சுசானைக் கண்டேன். என்னைக் கண்டதும் அவள் பணிவாகவே வணக்கம் கூறினாள். பின்பு சிறிது சிந்தித்துவிட்டு என்னைப் பார்த்து,

'நான் ஒண்டு கேட்டால் குறை நினைக்கமாட்டியளே புத்திரன்?' என்று தொடங்கினாள். இங்கு மாமாவும் சிற்றப்பாவும் மயங்கிய ஒன்றுதான். எவரை வேண்டுமானாலும் எவரும் பெயர் சொல்லிக் கூப்பிடலாம். அரசனாய் இருந்தாற்கூட அதற்கு விதிவிலக்குக் கிடையாது.

'அப்பிடி நான் என்ன குறையாக நினைக்க முடியும்?' என்றேன்.

'நீங்களேன் சேர்ச்சுக்கு வாறேல்லை?' என்றாள். நான் அதை எதிர்பார்க்கவில்லை.

'ம்... இது கொஞ்சம் சிக்கலான கேள்விதான்' என்றேன்.

'அவர் இந்து' மூனா இடையில் புகுந்தாள்.

'அப்ப நீங்கள் யேசுவை வழிபடமாட்டியள் இல்லையா?'

'ம்... நான் இப்ப இந்துக் கடவுளையே மறந்து போயிட்டன்' என்றேன்.

'நம்பிக்கை இல்லாமற் போயிட்டுதா?'

'ஒரு வகையில் அப்பிடிதான். இல்லாட்டி நான் எல்லாக் கடவுளையும் நம்புறதால யாரையும் ஞாபகம் வைச்சுக் கொள்ளுறேல்லை எண்டும் எடுத்துக் கொள்ளலாம். ஆனா யாருக்காகவும் நான் சிரமப்பட விரும்பேல்லை. கடவுளைத் தேடி நான் ஓடத் தேவையில்லை. அவர் என்னக்குள்ளேயே இருக்கிறார். என்னுள் கடவுளைக் கொண்டு வருவதற்குப் புத்தகம்தான் வழி. அதை வாசிப்பன். அது சரி உனக்கு நிறைய நம்பிக்கையா?'

'நான் கடவுளை முழுமையாக நம்புறன். எங்களுக்கு மேல ஒரு சக்தி இருக்கு, அது கடவுளெண்டு நம்புறன்' என்றாள் சுசான்.

'நல்லது'

'நான் நித்தியோடை பிரண்சா இருக்கோணும் எண்டு விரும்புறன்'

'ஓ அப்பிடியா? சரி இதை நீங்க நித்தியிடம் கேட்கோணும்'

'நான் கேட்டிட்டன். அவருக்கு விருப்பம்'

'அப்ப வேற யார் இதில தலையிட முடியும்?'

‘உங்களுக்கு ஆட்சேபனை இல்லைத்தானே?’

‘ஆட்சேபனை என்றால்? அது அவசியம் இல்லை. நான் இதில ஆட்சேபிக்க என்ன இருக்குது?’

‘நன்றி’

‘அப்பா ஒண்டும் சொல்லமாட்டார் சுசான். நீ வா நான் என்ர அறைய உனக்குக் காட்டுறன்’ என்றான் நித்தி.

அத்தால் எனது உரையாடலுக்கு அவன் முற்றுப்புள்ளி வைத்தான். எங்கள் சம்மதம் இல்லாது நடந்தேறும் இந்தக் காரியங்களில் எனக்கு ஒருவித அந்நியத்தன்மை. இருந்தும் அந்த உணர்வு இங்குள்ள நியாயத்தோடு ஒத்துப் போகாமையால் எனது உணர்வின் நியாயம் பற்றி வாய் திறவாது இருந்தேன்.

எங்களின் எதிர்பார்ப்பை மீறி இயற்கை இணையும் காலம். நான் எதிர்பார்த்ததைவிட அவர்கள் நட்பு இறுக்கமாகவும், நெருக்கமாகவும், விரைவாகவும் வளரத் தொடங்கியது.

இப்போது அவர்கள் விடுதிகளுக்கோ அல்லது களியாட்ட நிலையங்களுக்கோ போவதற்கு அனுமதி கிடையாது. மது அருந்த முடியாது. பதினெட்டு வயதுக்குக் குறைந்தவர்கள் போகும் இளைஞர் விடுதிக்கு மட்டும் செல்லலாம். அவர்கள் அதற்குப் போய் வருவார்கள். இரகசியமாக மது அருந்தும் வாய்ப்பு இருந்தது. நித்தி அப்படிச் செய்யமாட்டான் என்கின்ற நம்பிக்கையில் நான் அதைப் பற்றி யோசிப்பதில்லை.

★

அது ஒரு கோடைக்கால விடுமுறை. நித்தி அதிகம் இப்போது வீட்டில் இருப்பதில்லை. அவனின் சுதந்திரத்தில் இனியும் தலையிட முடியாது. அவன் தனது விருப்பத்திற்குச் சுற்றித் திரிந்தான். அது அவனுடைய தப்பு இல்லை. சுசானும் அவனோடு கூடித்திரிந்தாள். எனினும் நான் அதை எதிர்பார்க்கவில்லை. அன்று வெள்ளிக் கதிர்கள் கண்ணாடியில் பட்டுத் தெறிப்பதாய் வெயில் எறித்தது. காற்று வீசினால் வெயிலின் கதகதப்புக் குறைந்து போய்விடும். மனித மனங்கள் சுருண்டு போய்விடும். காற்றில்லாத அன்றைய பொழுது கணகணப்பாய் இருந்தது. நானும் மூனாவும் ஒரு நடைப் பயணம் போய்விட்டு வரலாமெனப் புறப்பட்டோம். நித்தி சாப்பாட்டிற்கு மாத்திரம் தப்பாது தலையைக் காட்டிக் கொள்வான். அதற்குள் திரும்பி வந்துவிட வேண்டும் என்பது எங்கள் திட்டம்.

நான் நித்தியின் நினைப்பில் பேசாமல் மூனாவோடு நடந்து வந்தேன். அது மூனாவுக்குத் தர்மசங்கடமாய் இருந்திருக்க வேண்டும். அவளாகவே கதைக்கத் தொடங்கினாள்.

‘என்ன யோசனை அப்பிடி? பேசாமல் வாறியள்..’ என்றாள்.

‘எல்லாம் நித்தியைப் பற்றின கவலைதான்’ என்றேன்.

‘ஓ நீங்க சும்மா இருங்க. அதுதான் உங்களுக்கும் அவனுக்கும் நீங்க செய்யிற உதவியாக இருக்கும்’ என்றாள்.

‘நான் இப்பிடி வளரேல்லை. இதை ஒத்துக் கொள்ளுறது கஸ்ரம்’

‘அது உங்கடை நாடு. உங்கடை கலாச்சாரம். இது வேற ஒரு நாடு... வேற ஒரு கலாச்சாரம். இடத்துக்கேற்ப இசைவாக்கம் இருக்கோணும். அதையும் இதையும் போட்டுக் குழப்பக்கூடாது’

‘சில விஷயங்கள் எல்லா இடத்திலையும் தப்பாத்தான்படும்’

‘நீங்கள் எதைச் சொல்லுறியள்?’

‘இந்த வயசிலேயே பெண் சினேகிதம். இது தப்பில்லையா?’

‘நீங்கள் வரவர சிறீலங்காவிலை இருக்கிற மாதிரிக் கதைக்கிறியள். இது இங்க இயற்கையாகப் பார்க்கப்படுகிற விஷயம். ஆணுக்கும் பெண்ணுக்கும் இயற்கையாக உள்ள ஈர்ப்பு. ஆறேழு வயது தாண்டவே அந்த ஈர்ப்பு வந்திடும். அதைத்தான் ‘ஓடிப்பால் கொம்பிளெக்ஸ்’ எண்டுவினம். அவன் இந்த வயசிலை இப்பிடி இருக்காட்டித்தான் கவலைப்பட வேணும்’ என்றாள் மூனா.

‘ம்..’

‘என்ன சிரிக்கிறியள்?’

‘இல்லை... இடத்திற்கு இடம், நாட்டுக்கு நாடு மனிசன் எப்பிடி எல்லாம் மாறுபட்டு நிற்கிறான். அதை நினைச்சாச் சிரிப்புதான் வருகுது’

‘நல்ல வெயில் எல்லே?’ என்றாள் அந்தக் கதைக்கு அர்த்தம் இல்லாத மாதிரி.

‘கடற்கரை வரையும் போவோம்’ என்றேன்.

‘அதுக்கென்ன போவோம்’ என்றாள். பின்பு யோசித்துவிட்டு,

‘இந்தத் தீவு அமைதியான இடம். இல்லையா?’ என்றாள்.

‘குளிர் காலத்தையும் அப்ப வீசுற பேய்க் காற்றையும் மறந்தா நீ சொல்லுறது சரியாக இருக்கும்’ என்றேன்.

‘உண்மைதான். வின்ரரை நினைச்சா எங்கையாவது சவுத் பக்கமாகப் போனா என்ன எண்டு எனக்கும் யோசினை வருகுது. ஆனா இவ்வளவு காலம் இங்கு இருந்திட்டு, இனி ஒரு புது இடத்தில, புது மனிசருக்கிடையில வாழோனும் எண்ட நினைப்பும் பிடிக்கேல்லை’ என்றாள்.

‘எனக்கும் அப்பிடிதான். குளிரை நினைச்சா நாட்டுக்கே திரும்பிப் போகோணும் போல இருக்குது.’

‘ம்... அப்ப நாங்கள் தேவையில்லையா?’

‘உங்களோடைதான்.’

‘ம்... அதுவும் நல்ல ஐடியாத்தான்’ என்றாள்.

நாங்கள் கடற்கரைக்கு வந்து விட்டோம். இது ஒரு காலத்திற் குப்பை கொட்டும் இடமாக இருந்தது. இப்போது இங்கே குப்பை கொட்டப்படுவது இல்லை. அந்தக் காலத்திற் கொட்டிய குப்பைகளின் அழியா எச்சங்கள் இன்றும் தலையை நீட்டித் தங்கள் வரலாற்றைச் சொல்லுகின்றன. நானும் மூனாவும் அந்த இடத்தை அடைந்த போது யாரோ கதைக்கும் சத்தம் கேட்டது. இந்தக் கடற்கரை ஒரு காலத்தில் ரசியாவிற்கு எதிரான ஹிட்லரின் முன்னணி யுத்த அரணாக இருந்தது. அதற்காக அவர்கள் பல பாதுகாப்பு அரண்களை அமைத்து இருந்தனர். அந்த நாஜிகளின் பாதுகாப்பு அணைக்குப் பின்பாக இருந்துதான் அந்தக் குரல்கள் வந்தன. பல ஆண்களினதும், பெண்களினதும் குரல்கள் கலந்தே ஒலித்தன. நாங்கள் நிற்கின்ற கடற்கரைக்கு நேரே இருந்த தீவு போன்ற மலையைப் பார்த்துக் கொண்டு மூனா நின்றாள். அந்த மலையில் ஆயிரமாயிரம் பறவைகள் வாழ்கின்றன. அந்த மலையைப் பறவைகளின் சரணாலயம் என்றுதான் சொல்ல வேண்டும். அவை கறுப்பும் வெள்ளையுமான நிறம்கொண்ட ஒருவித கடற்பறவை. கோடைக் காலத்தில் வந்து சந்ததி பெருக்கிவிட்டுக் குளிர்காலத்திற்கு தெற்கு நோக்கிச் சென்றுவிடும். அந்தப் பறவைகளின் முட்டை பெரிதாக இருக்கும். சிலர் அதை உணவாக்கிக் கொள்வதும் உண்டு. அதற்காக அந்த மலைக்கு வள்ளங்களில் சென்று வாளியில் முட்டையை எடுத்து வருவார்கள்.

மூனாவிடம் இருந்த இயற்கை மீதான இரசனை என்னிடம் இருக்கவில்லை. எனக்கு அந்தக் கட்டுக்குப் பின்னாலே இருந்து கதைப்பவர்களைப் பார்க்க வேண்டும் என்கின்ற அடங்காத தவனம். நான் மெதுவாகக் கட்டை நோக்கிச் சென்றேன். நான் கட்டின் மேல் ஏறி அதன் விளிம்பில் நின்று கொண்டேன். அவர்கள் கட்டை அண்டிய வண்ணம் கீழே கடற்கரையோடு இருந்த பாறைகளில் அமர்ந்து கடலை இரசித்த வண்ணம் கதைத்தார்கள். மதுவை ருசித்தார்கள். அந்தக் காட்சி மேலே நின்ற என் பார்வைப் பரப்பிற்குள் அகப்பட்டது.

சில கணங்கள் கல்லாய்ச் சமைந்த உயிருள்ள சிலையாக நான். அந்தக் கூட்டத்திற்குள் நித்தியும் சுசானும் இருந்தார்கள். சட்டம் பதினெட்டு வயதுக்கு முதல் மதுவருந்த இடம் கொடுப்பதில்லை. நித்தி சட்டத்தை மீறிவிட்டான். எனக்கு அது சாட்டையால் அடித்ததான வலியைத் தந்தது. இப்போது யார்தான் சட்டத்தை மீறுவதில்லை? நித்தி தனது சந்தோஷத்திற்காய், பெண்ணின் அண்மைக்காய்ச் சட்டத்தை மீறிவிட்டான் என்று என்னால் சமாதானம் சொல்லிக் கொள்ள முடியவில்லை. சட்டத்தை மீறும் போது சமுதாயம் ஏற்காததைச் செய்யும் மன வரம்பை உடைப்பதோடு தாய் தந்தையரின் உள்ளத்தையும் மிதித்து விடுகிறார்கள். அது அவர்களுக்குப் புரிந்திருக்க நியாயம் இல்லை. என் மனது சுண்டிப்போய் விட்டது.

நித்தி இதை விளையாட்டாக எடுத்துக் கொள்ளலாம். இங்கு பதினெட்டு வயது வரையும் எத்தனை வீதமான இளைஞர்கள் மதுவருந்தாமல் இருக்கிறார்கள்? உலகத்தில் ஆயிரம் நடக்கலாம். என்னால் நித்தி மது அருந்துவதைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. எனது நிழல் கீழே இருந்தவர்கள் மேல் பட்டது. அவர்கள் என்னை அண்ணார்ந்து பார்த்தார்கள். நித்தியின் கண்கள் என் கண்களைச் சந்தித்தன. எனது பார்வை அவனை ஏதோ செய்திருக்க வேண்டும். அருந்திக் கொண்டு இருந்த மதுப் போத்தலை அவசரமாக மறைத்தான். அதையே சுசானும் செய்தாள். என்னால் அவளை நம்ப முடியவில்லை. கடவுள் கோயில் என்பவள் இவர்களோடு சேர்ந்து கும்மாளம் அடிப்பாளென நான் எதிர்பார்க்கவில்லை. நாங்கள் முட்டாளாய் இருப்பதற்கு மற்றவர்களை நோக முடியாது. எனக்கு அதற்கு மேல் அவர்களைப் பார்த்துக் கொண்டு நிற்பதற்குப் பிடிக்கவில்லை. நான் மீண்டும் மூனாவிடம் வந்தேன்.

மூனாவின் இயற்கை இரசிப்பு அத்தோடு முடிவுற்றது. அவளது என்ன என்கின்ற கேள்வியான பார்வை என் மீது கூர்மையோடு விழுந்தது. நான் சிறிது நேரம் மௌனம் சாதித்தேன். அந்த மலையை வெறித்தேன். ஊரைப் போல் பிரப்பங் கம்பு ஓங்கும் கலாச்சாரம் இல்லை இங்கு. அவள் எனது மௌனத்தைப் பொறுக்க முடியாதவளாய்,

‘ஆரங்க இருக்கினம்?’ என்று கேட்டாள்.

‘எல்லாம் நித்தியின்ர செற்றுக்கள்’

‘நித்தியுமோ?’

‘ம்... சுசானோட..’

‘நல்ல வெயில்தானே, அனுபவிக்கட்டும்’

‘வெயில் மட்டும் அனுபவிச்சா நானும் சந்தோஷப்படுவன்’

‘அப்ப?’

‘வியரும் உறுஞ்சுகினம்’

அதைக் கேட்ட அவள் வதனத்தில் அதிர்ச்சி விஷப்பாம்புகள் போன்ற கோடுகளாய் ஒரு கணம் நெளிந்தன. மறுகணமே சமாளித்துக் கொண்டாள்.

‘பருவாயில்லைக் குடிக்கட்டும். இப்ப அனுபவிக்காமல் எப்ப அனுபவிக்கப் போகினம்?’ என்றாள்.

‘உண்மையாவே அப்பிடிதான் நினைக்கிறியே?’

‘அப்ப? நானும் இதே வயசில குடிச்சிருக்கிறன். இது இங்க வழமைதான்’ என்றாள்.

நான் மறு கரையைத் திரும்பிப் பார்த்தேன். கடல் மிக அமைதியாக உறங்கியது. என்னைப் போல் அவன் இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்க முடியாது. என்றாலும் என் மனம் விடுவதாக இல்லை.

★

அன்று மாலைச் சாப்பாட்டிற்கு நான் அமர்ந்திருக்க மூனா அதற்கான சாப்பாட்டுப் பொருள்களை மேசைமேல் வைத்தாள். நான் அவளைப் பார்த்துக் கொண்டு இருந்தாலும் எனது சிந்தனை நித்தியைச் சுற்றிச் சுற்றி வந்தது. எனது பார்வை மூனாவை ஏதோ செய்திருக்க வேண்டும்.

‘என்ன அப்பிடியே பார்த்துக் கொண்டு இருக்கிறியள்?’ என்றாள்.

‘இல்லை நித்தியப் பற்றின யோசினையிலே அப்பிடி இருந்தன்’ என்றேன்.

‘ஓ கமோன். இங்க இப்பிடித்தான். நாங்க இதைவிடக் கட்டுப்படுத்தேலாது. அது புறநடையாக இருக்கும். அவன் எங்களைத் தப்பாக நினைக்க வைக்கும். சிலவேளை அது வெறுப்பாய் போயிடும்’ என்றாள்.

‘நீ இப்ப நிறைய மாறீட்டாய்’ என்றேன்.

‘கப்பல்ல வேலை செய்து, பல நாடும் பார்த்த நீங்கள் இப்பிடிக் கதைக்கிறதுதான் விசித்திரமாய் இருக்குது? நாங்கள் உலகத்தோட ஒத்து ஓடாட்டி உலகம் எங்களை விட்டிட்டுப் போயிடும்’ என்றாள் அவள்.

நாங்கள் கதைத்துக் கொண்டு இருக்கும் போதே நித்தி வீட்டிற்குள் வந்தான். மூனா என்னைப் பார்த்து எதுவும் கதைக்க வேண்டாம் என்று கண்சாடை காட்டினாள். வாயைப் பொத்திக் கொண்டு இருப்பது எனக்குப் பழக்கப்படாத ஒன்று. பழக்கமாக்கிக் கொள்ள வேண்டிய கட்டாயம். நான் சாப்பிடத் தொடங்கினேன். அவன் மேலே சென்றான். மூனா என்னோடு இருந்து சாப்பிட்டாள். பின்பு எதுவும் அறியாதவள் போல,

‘நித்தி… நித்தி… சாப்பாடு ரெடி’ என்று கத்தினாள்.

‘இப்ப வாறன் அம்மா’ என்றான் அவன்.

நித்தி கீழே வந்து மேசையில் அமர்ந்து சாப்பிடத் தொடங்கினான். மேசையில் இருந்த எல்லோரும் ஊமைகளாய் மௌனத்தை அனுசரித்தோம். குடும்ப உறவுக்காரர் அன்னியராய் நடிக்கும் நாடகம் அங்கே அரங்கேறியது. எனக்கு அது பிடிக்கவில்லை. தொடர்ந்து என்னால் மௌனமாயும் இருக்க முடியவில்லை.

‘நித்தி?’ என்றேன்.

‘ம்…?’

‘சந்தோஷமான நாளா இண்டைக்கு?’

‘ம்… சந்தோஷமாய் இருந்தோம். தாங்ஸ்’

‘ஆனா எனக்கு இதில பெரிசாச் சந்தோஷம் இல்லை’

‘எதிலை அப்பா?’

‘சும்மா இருங்க’ மூனா இடையில் புகுந்தாள்.

‘சட்டத்துக்குப் புறம்பான வேலை செய்யிறதிலை’

‘அப்பிடி நாங்கள் என்ன குண்டா வைச்சம் அப்பா? வியர் குடிச்சது என்ன கொலைக் குற்றமா? ம்..’ அவன் நேரடியாகவே கேட்டுச் சிரித்தான்.

‘சிரிக்காத நித்தி. தப்புத் தப்புதான்’ என்றேன்.

‘அப்பிடி எண்டா இங்க வாழுகிற பலபேர் சட்டத்துக்குப் புறம்பா நடக்கினம் எண்டு அர்த்தப்படுமா அப்பா?’ என்றான்.

‘எல்லாரும் கிணத்துக்க விழுகினம் எண்டு நாங்களும் கிணத்துக்க விழேலாது நித்தி’

‘இது ஒண்டும் கிணறில்லை. அதுக்க நான் விழவும் இல்லை. கொஞ்சம் சந்தோஷமாக இருந்தம். சும்மா இருங்க அப்பா’ என்று அவன் சலித்துக் கொண்டான்.

‘குடிக்கிறது தப்புதான்’ என்றேன்.

‘நீங்கள் குடிக்கேல்லையா? இங்க யார் குடிக்கிறேல்லை? நான் கெட்டது செய்ததாய் நினைக்கேல்லை. சந்தோஷத்திற்காக இது எல்லாரும் செய்யிறது. இதுக்கு நீங்கள் தேவையில்லாமற் கவலைப்படுகிறியள்’

‘நாங்கள் எல்லாம் இப்பிடி நடக்கேல்லை’

‘கமோன் அப்பா. அது வேற உலகத்தில நீங்கள் வாழ்ந்தீங்கள்… இது வேற உலகம். இரண்டையும் போட்டுக் குளப்பாதேங்க’ என்றான்.

‘ஓ இந்தக் கதை காணும்’ மூனா கோபமாக இடை வெட்டினாள். நான் அதைப் பொருட்படுத்தாது தொடர்ந்தேன்.

‘எங்களில உனக்கு அன்பிருந்தால் எங்களுக்குப் பிடிக்காத வேலையளைச் செய்யிறதைக் குறைக்கப்பார்’

‘உங்களுக்குப் பிடிக்காத செயலைத் தவிர்க்கிறன். ஆனா எனக்கும் சின்னச் சின்ன சந்தோஷம் தேவை. அதையெல்லாம் விட்டுக் குடுக்கேலாது’

‘இனியாவது வேற கதை கதைக்கேலுமே?’ மூனா மேலும் கோபமாகினாள். நாங்கள் இருவரும் மௌனமாகினோம். பின்பு மீண்டும் மூனாவே தொடங்கினாள்.

‘சுசானை வீட்டில கொண்டு போய் விட்டிட்டே வாறாய்?’
‘ம்..’

★

நான் ஆண் பிள்ளையைப் பெற்றுக் கொண்டதிற்காய்ச் சந்தோசப்பட்டவனோ பெண் பிள்ளையைப் பெறவில்லையெனக் கவலைப்பட்டவனோ கிடையாது. அன்று கண்ணன் மகளின் கதையைக் கூறிய போதுதான் ஆண் பிள்ளை என்பதில் ஒருவித சுதந்திரம் இருப்பது எனக்குப் புரியத் தொடங்கியது. அல்லது எங்கள் கலாச்சாரப் பிரமைக்கு அது சமாதானம் சொல்வதாய் இருந்தது. அது சுதந்திரம் அல்ல. பிரச்சனைகளில் இருந்து தப்பிக் கொள்ளும் சுயநலம் என்பதும் அத்தோடு புரிந்தது. அது புரிந்தாலும் நடைமுறையில் தப்பித்துக் கொள்வதைத்தான் மனித மனம் நாடுகிறது. நாங்கள் வளர்ந்த சமுதாயமும் அதை ஊக்குவித்தது? அன்று ஒரு சாமத்திய வீட்டிற்கு அழைப்பு வந்ததால் நான் அங்கே போயிருந்தேன். மூனாவும் நித்தியும் வேறு ஒரு நோர்வேஜிய வீட்டு வைபவத்திற்காகச் சென்றிருந்தார்கள். நான் கண்ணன் பக்கத்திலேயே போய் அமர்ந்தேன். எனக்கு அவனைப் பார்த்தவுடனேயே அந்தரமாய் இருந்தது. அவன் இருந்த கோலம் என்ன இப்போது இருக்கும் கோலம் என்ன? எப்படி இருந்தவன் இப்படி ஆகிவிட்டான்? அவன் முகம் சிரிப்பிழந்து இருண்டு கிடந்தது. என்ன நடந்தது இவனுக்கு என்கின்ற தலையிடி எனக்கு. அவனைப் பார்த்து நானே வலுவில் சிரித்தேன். அவன் உயிரில்லாது சிரித்துவிட்டு மீண்டும் அதே இருண்ட முகத்திற்கு மாறினான். எனக்கு என்ன செய்வதெனப் புரியவில்லை. நான் அவனோடு வில்லங்கத்திற்குக் கதைக்கத் தொடங்கினேன்.

‘என்ன கண்ணன் நீ எப்பிடி இருந்தனீ இப்பிடி ஆகீட்டா?’ என்றேன்.
‘அது வந்து..’

அவனது நா கரையில் போட்ட மீனாகச் சத்தம் இல்லாது துடித்தது. கண்கள் செண்பக நிறத்தில் சிவந்து கலங்கின. அக்கம் பக்கத்தில் இருப்பவரைத் திரும்பிப் பார்த்தான். எனக்கு அவனது சங்கடம் புரிந்தது. ‘வெளியால போவம்’ என்றுவிட்டு நான் எழுந்து நடக்க அவன் என் பின்னால் வந்தான். நாங்கள் ஆட்கள் அதிகம் வராத அந்த மண்டபத்தின் கீழ் தளத்திற்குச் செல்லும் படிக்கட்டில் அமர்ந்து கொண்டோம். இங்கு யாரும் வரமாட்டார்கள். அப்படி வந்தாலும் யார் வருகிறார்கள் என்பதைத் தூரத்திலேயே பார்த்துவிட முடியும். நான் கண்ணனைக் கனிவாகப் பார்த்தேன்,

‘என்னடாப்பா நடந்திச்சு கண்ணன்… அங்… இப்பிடியாகிட்டா?’ என்றேன்.
‘உங்களுக்குத் தெரியாதோ இல்லாட்டித் தெரிஞ்சு கொண்டே விடுப்புக் கேட்கிறியளோ?’ என்றான். எனக்குக் கோபம் வரவில்லை. மனிதர்கள் செய்வதைத்தானே அவன் கேட்கிறான் என்று தோன்றியது.
‘நான் ஒரு தமிழ்ப் பெம்பிளையைக் கட்டித் தமிழரோட இருந்திருந்தா நீ கேட்கிறது நியாயம். நான் மூனாவைக் கலியாணம் கட்டினதால எனக்கும் தமிழருக்கும் இருக்கிற தொடர்பு உனக்குத் தெரிஞ்சதுதானே? அப்பிடி இருந்தும் நீ என்னை நம்பிறாய் இல்லைப் போல’ என்றேன்.
‘எனக்குத் தெரியும் புத்திரன். ஆனா இப்பிடியான செய்தி நெருப்பாய்ப் பரவியிடும். அதனாலதான் கேட்டன்’
‘சத்தியமாத் தெரியாதப்பா’
‘ம்… நான் நம்புறன். அது ஒரு சோகக் கதை புத்திரன். சோகக் கதை எண்டு மாத்திரம் சொல்லேலாது. அவமானமான, அலங்கோலமான, வெக்கக்கேடான என்ர கதை. என்ன செய்யிறது? எல்லாம் என்ர தலை விதி’
‘என்ன சொல்ல வாறாய்?’
‘சொல்லுறன் அவதிப்படாத’ என்றான்.
‘சொறி’

'என்ர முத்தமகள் தவனிய உனக்குத் தெரியுமெல்லே? அவள் இப்பிடி எல்லாம் செய்வாள் எண்டு நான் கனவிலும் நினைக்கேல்லை. பதினெழு வயசாக இருக்கேக்கயே எனக்கு அரசல் புரசாலாகத் சில தகவல் வந்தது. நான் குழந்தைப் பிள்ளை எண்டு நினைச்சன். ஆரோ ஒரு பொடியனோட ஒண்டாத் திரியிறாள் எண்டு பிறகு கேள்விப்பட்டன். அப்பவும் சை... இங்க இப்பிடித்தான் இருக்குங்கள். எங்கட ஊர் மாதிரிப் பொடியளோட பொடிளும், பெட்டையளோட பெட்டையளும் மட்டும் திரியிறேல்லை. இதுகள் ஒண்டு மண்டாத் திரியுங்கள். தொட்டாக் கரண்ட் அடிக்கிற கதையெல்லாம் இங்க செல்லுபடியாகாது. அப்பிடித் திரியிறதைப் பிழையாக அர்த்தப்படுத்தக் கூடாது? இவளும் அப்பிடித்தான் திரியிறாள் எண்டு நினைச்சன். அதால நான் அதைப் பெரிசா நினைக்கேல்லை. அதுக்காக அவளையும் விசாரிக்கேல்லை. அவள் 'சார்வேறிங் கிளாஸ்' தொடங்கினாள். அதை முடிக்கேக்க அவளுக்குப் பதினெட்டு வயசு முடிஞ்சுது. என்ன கதைச்சாளோ தெரியேல்ல, அவளுக்குச் சாஸ் கொட்டலில் வேலையும் கொடுத்திட்டாங்கள். உந்த வேலைக்குப் பெரிய மதிப்பு இல்லை எண்டாலும் எனக்கு அவள் வேல செய்யிறாள் எண்டோண்ணை சந்தோசமாய்த்தான் இருந்திச்சு. கொஞ்ச நாள் போயிருக்கும். வீடு மாறப் போறன் எண்டு வந்து நிண்டாள். எனக்கு எல்லாம் இடிஞ்சு போனமாதிரி இருந்திச்சுது. அப்பவும் முழுசா என்ன நடக்குதெண்டு எனக்கு விளங்கேல்லை. 'ஏன்ரி வீடு மார்றாய்? எங்கட வீட்டில இடம் இருக்குதுதானே?' எண்டு கேட்டன். தான் ஒராளோட 'சம்வூராக' (கலியானம் செய்யாது கூடிவாழ்தல்) இருக்கப் போறன் எண்டு ஒரு குண்டை என்ர தலையில தூக்கிப் போட்டாள்? அதுக்குத்தான் இந்த வீட்டு மாற்றமெல்லாம். 'இதென்னடி கூத்து, சம்வூர், அது இது எண்டு, எங்கட வழக்கத்திலை எல்லாம் கலியாணத்துக்குப் பிறகுதானடி இதெல்லாம் நடக்கிறது' எண்டு கெம்பினன். அவள் தான் நோர்வேயில பிறந்து வளர்ந்தவளாம்... தான் இஞ்சத்தே முறைப்படிதான் நடப்பன் எண்டிட்டாள். அவள் அதைச் சொன்னதோட நிக்கேல்லை. வீட்டைவிட்டு வெளிக்கிட்டுப் போயிட்டாள். நாங்கள் என்ன கெஞ்சியும் எந்தப் பிரியோசனமும் இருக்கேல்ல. அவள் போனது ஒரு பக்கம் வேதனையெண்டா இஞ்ச இருக்கிற தமிழ்ச் சனத்தின்ரை பேச்சும் பார்வையும் இன்னொரு பக்கம் மனிசரைக் கொல்லுது. அது நித்தம் நரக வேதனை.

வீட்டைவிட்டுப் போனவள் அவனோடை எண்டாலும் ஒழுங்காக இருந்திருக்கோணும். அதுவும் நடக்கேல்லை. அவன் ஏதோ சண்டை பிடிக்க இவள் அவனைத் துரத்திப் போட்டாளாம். அதோடை மட்டும் விட்டாளே எண்டா இல்லை. இப்ப வேற யாரோ ஒரு பொடியனை வைச்சிருக்கிறாளாம். எங்கட குடும்பம் ஊரிலை எப்பிடி எல்லாம் வாழ்ந்திச்சுது? இன்னார்ற்ர பேத்தி இப்பிடியெல்லாம் நடக்கிறாள் எண்டா இப்ப கூடச் சனம் அங்க நம்பாது. ஆனா நாங்கள் அந்தக் கொடுமைய நேர அனுபவிக்கிறம். இந்தக் கண்டுறாவிய எல்லாம் பார்த்து இப்பிடி ஒரு வாழ்க்கை நடத்தவா இங்க வந்தம். ம்... அவளை நினைச்சாலே அருவெருப்பாய் இருக்குது' என்றான்.

அவன் உணர்ச்சியைக் கட்டுப்படுத்த முடியாது தவித்தான். கண்களில் நீர் ஆணென்னும் அகங்காரத்தை உடைத்து மணிகளாய் உருண்டு மண்ணை நோக்கிப் பயணித்தன. உதடுகள் வேதனையாற் துடித்தன. எனக்கு அவனைப் பார்க்கப் பரிதாபமாய் இருந்தது. இங்கு வந்தும் ஆணைப் பெற்றவனைவிடப் பெண்ணைப் பெற்றவனின் நிலைமை பெரும் பரிதாபமாய் இருப்பதாய் மீண்டும் எண்ணத் தோன்றியது.

# 10

**இ**யற்கை என்னும் சக்கரத்தில் காலத்தின் கட்டுடைக்க முடியாத ஓட்டம். அதைத் தடுக்கவோ மீறவோ முடியாத மனிதர்களின் பரிதாபமான ஏக்கம். மனித வாழ்வில் மகோன்னத இன்பமும் துன்பமும் தருவது காதல் என்னும் அற்புத உணர்ச்சி. அல்லது சிற்றின்ப ஈர்ப்பு. காதலை அனுபவிக்காதவரைப் பலருக்கு அது காமத்தின் நர்த்தனம். அதனுள் விழுந்தால் ஆத்மாவைப் பீடிக்கும் நோய்.

காதலும் கலாச்சாரத்தோடு தவிர்க்க முடியாது கலியாணம் செய்து கொள்கிறது. அதன் குணம் அந்தத் தாம்பத்தியத்திற்கு ஏற்பத் திரிபடைகிறது. காதல் அல்லது சாதல் என்பதை இங்கு யாரும் வேதமாக எடுத்துக் கொள்வதில்லை. அது முறியும் போது உண்டாகும் வேதனை மட்டும் பலருக்கும் நிஜமானது. சுசான் நித்திமேல் வைத்திருக்கும் காதல் தமிழர்களின் காதல் அல்ல. அவளுக்கு உடல் உறவுக்கும் திருமணத்திற்கும் முடிச்சுப்

போடுவது புரியாது. நித்தியே அதைப் புரிந்து கொண்டவனாய்க் காட்டிக் கொள்ளவில்லை. அவனும் உடலுறவுக்கும் திருமணத்திற்கும் சம்பந்தம் இல்லாதது போலவே சுசானோடு நெருங்கிப் பழகினான். மூனாவுக்கும் இது எந்தவித பாதிப்பையும் ஏற்படுத்தியதாகத் தெரியவில்லை. என்னால் அப்படி இருக்க முடியவில்லை. நித்தி செய்வது என் பார்வையில் சுத்தப் பிறழ்வே. இருந்தும் அவன் வாழும் தளத்தைப் புரிந்து கொண்டதாற் கண்டிக்க முடியவில்லை. எனது வாழ்வை திரும்பிப் பார்த்த போது நான் கண்டிக்கத் தகுதி அற்றவன் என்பதும் புரிந்தது.

தடுமாறிய மனதில் ஆயிரம் சிந்தனைகள். மூனா எந்தச் சலனமும் இன்றி அமைதியாகத் திரிந்தாள். நான் இவளைத் திருமணம் செய்து கொண்டது தவறா என்பது பற்றி இத்தனை வருடங்களுக்குப் பின்பு இப்போது கேள்வி ஒன்று தோன்றியது. நான் எனது மனதின் ஓட்டத்தை வெளியே சொல்லிவிட முடியாது. அப்படிச் சொன்னால் அவள் என்னைப் பார்த்து எள்ளி நகையாடுவாள். ஏளனம் செய்வாள். நான் எனது வெப்பியாரத்தை என்னுள் தகனம் செய்தேன்.

அன்று மூனா வீட்டில் இல்லை. நான் ஏதோ ஒரு புத்தகத்தில் மூழ்கி இருந்தேன். வெளிக் கதவை யாரோ திறந்து கொண்டு உள்ளே வந்தார்கள். மூனாவாய் இருக்க வேண்டும் என்கின்ற நம்பிக்கை பிழைத்துப் போயிற்று. நித்தியும் சுசானும் உள்ளே வந்தார்கள். நான் அவர்களைக் கண்டதும்,

'காய்' என்றேன். அவர்களும் பதிலுக்குக்,

'காய்' என்றார்கள். பின்பு சுசான்,

'என்ன வாசிக்கிறியள்?" என்று கேட்டாள்.

'சும்மா ஒரு கதைப் புத்தகம்' என்றேன்.

'நாங்கள் உங்களைக் குழப்பிறம் போல இருக்குது' என்றாள் சுசான்.

'இல்லை… இல்லை… இருங்க' என்றேன்.

'இல்லையப்பா நான் என்ர அறைக்குப் போறன்' என்றான் நித்தி. சுசான் பேசாது நின்றாள்.

'என்ர றுமுக்கு வா சுசான்' என்று கூறிவிட்டுப் பதிலை எதிர்பாராது நித்தி தனது அறைக்குச் சென்று விட்டான். எனக்கு அவன் செய்கை வருத்தத்தைத் தந்தது. அவன் போன பின்பு சுசானும் அவன் வழி சென்றாள். இவர்களை இனிக் கட்டுப்படுத்த முடியாது. எனது மகனையே என்னாற் கட்டுப்படுத்த முடியாது. இப்படி ஆள்மை இல்லாத உறவை எண்ணி எனக்கு மிகவும் வருத்தமாக இருந்தது. வாழ்க்கையில் தோல்வி அடைந்ததான வருத்தம் மனதில் எழுந்தது. எனது அப்பா அம்மா என்னிடம் தோற்றார்களா? அவர்கள் இரு என்றால் நாம் இருந்தோம். நானும் ஒரு காலத்தில் அந்தக் கட்டுப்பாடுகளை உடைத்து எறிந்தவனே. அப்போது அவர்கள் தோற்றார்கள். நித்தி அதை விரைவாகச் செய்கிறான். பெற்றோர்கள் விட்டுக் கொடுத்துப் போக வேண்டியது காலத்தின் கட்டாயமாகிறது. என்றாலும் நான் அப்பா அம்மா முன்பே காதலியுடன் கூடித் திரிந்தேனா? என்னால் அப்படித் திரிய முடிந்ததில்லை. நாங்கள் வளர்க்கப்பட்ட விதம், எங்களுக்குக் கிடைத்த சந்தர்ப்பம் அப்படி. எங்கள் கலாச்சாரம் எங்கள்மேற் கொண்டிருந்த பிடி அப்படி. அதை மீறுவது அத்து மீறலாய்ப் பார்க்கப்பட்டிருக்கும். இங்கு எனது மகன் நித்தி நான் இருக்கவே அவனது காதலியோடு தனியறையில் இருக்கிறான். இது தப்பா? இங்கே தப்பில்லை. தாலிகட்டினால் தமிழிற்குத் தப்பில்லை. தாலி என்றால் என்ன என்பது தெரியாத சமுதாயத்திற்கு அது ஒரு பொருட்டே இல்லை. தாலிக் கலாச்சாரம் எங்களுடையதா? இரவல்களைத் தத்தெடுத்து அதற்குச் சோரம் போவது எங்கள் இயல்பா? இங்கே தொடர்பு இல்லாததைத் தொடர்பு படுத்தும் என் சிந்தனைதான் பிறழ்வா?

தப்பாய்த் தோன்றாத வரைக்கும் அந்தச் செயலில் யாருக்கும் தயக்கம் இருக்காது. தப்பாய்த் தோன்றுவதுகூடச் சிலவேளை தவுனம் தந்து விடுவது உண்டு. இவர்களிடத்தில் தயக்கம் இல்லை. தப்பு என்கின்ற நடுக்கம் இல்லை. நான் மீண்டும் புத்தகத்திற்குள் மூழ்க முயன்றேன். என்னால் முடியவில்லை. நித்தியும் சுசானும் சிணுங்குவது கீழே கேட்டது. நித்தி கதவைப் பூட்டிவிட்டான். அப்படி இருந்தும் அவர்கள் சிணுங்கலும் அனுங்கலும் எனக்குக் கேட்டது. இது அவர்கள் தப்பா அல்லது என் தப்பா? நான் பண்பான மனிதனின் சுயத்தை அடிக்கடி இழக்கும் சராசரி மட்டமான மனிதன்.

இங்கே பிறந்து வளர்ந்தால் என்ன? நித்தி அரைவாசித் தமிழன் இல்லையா? நான் வெளியே சென்றிருக்க வேண்டும். கோபம் என் நிதானத்தைத் தின்றது. நான் நித்தியின் அறைக் கதவின் முன்னே நின்றேன்.

உள்ளே அனுங்கலும் சிணுங்கலும் தொடர்ந்து கேட்டன. அந்தச் சத்தம் என் கோபத்தை இன்னும் ஓங்கி எரியச் செய்தது. நான் கதவைத் தட்டினேன். உள்ளே திடீர் அமைதி நிலவியது. பின்பு நித்தி தன்னைச் சமாளித்துக் கொண்டு,

'என்ன?' என்றான்.

'கதவைத்திற' என்றேன். நான் செய்வது சரியா என்கின்ற தயக்கம் என்னிடம்.

'என்னப்பா?' என்றான் நித்தி.

'கதவை முதல்ல திற' என்றேன்.

'அப்பா... நான் அலுவலாக இருக்கிறன்?' என்றான் அவன்.

'கதவைத் திற. நான் அந்த அலுவலைப் பார்க்கோணும்' என்றேன்.
அன்று அப்படிக் கேட்டதை இப்போது நினைக்கும் போது வயிற்றைக் குமட்டுகிறது. அவன் கதவைத் திறக்கவில்லை.

'அப்பா இது என்ரை றூம். நான் இன்னும் குழந்தையில்லை' என்றான்.

'பதினெட்டு வயது ஆகாத வரைக்கும் நீ குழந்தைதான். கதவைத்திற பாப்பம்'

'நான் திறக்கமாட்டன்'

'அப்ப நான் உடைச்சுக் கொண்டு வரவே?' நான் பண்பை மறந்து வக்கிரமாகக் கேட்டேன்.

அவனிடம் இருந்து சில கணங்கள் எந்தப் பதிலும் வரவில்லை. உள்ளே அமைதி நிலவியது. குசு குசுவென ஏதோ கதைக்கும் சத்தம் கேட்டது. பின்பு படாரெனக் கதவு திறந்து கொண்டது. சுசான் அரைகுறையாகப் படுக்கைக்குள் ஒளிந்து கொண்டாள். அன்று எனக்கு 'கிந்தமாவின்'(பாண்டுவுக்கு) சாபம் கிடைத்தது. நித்தி சட்டையைப் அணிந்த வண்ணம் முதலில் என்னைப் பார்த்து முழித்தான். பின்பு கோபமாகினான்.

'நீங்க செய்யிறது சரியில்லை அப்பா' என்று அவன் பெரிதாக அதிரும்படி கத்தினான்.

அன்று அவன் சொன்னது சரிதான் என்பது இப்போது புரிகிறது. சாபங்கள் எனக்கு வரங்கள் ஆக்கப்படவில்லை. நான் செய்த மட்டமான செயலின் உண்மை இன்று கூச்சம் தருகிறது. நான் அன்று விடவில்லை. பாவங்கள் சாபங்கள் பற்றிய கரிசனை என்னிடம் அப்போது இருக்கவில்லை.

'அப்ப நீங்க செய்யிறது மாத்திரம் சரியா?' என்று கேட்டேன்.

'காதலிக்கிறவை இங்க வேற என்ன செய்வினம்?'

'காதலைச் சாட்டிக் கொண்டு கண்டதும் செய்யிறேல்லை. அதுகெண்டு ஒரு வயசு இருக்குது' என்றேன் விடாப்பிடியாக.

'நீங்கள் உலகம் புரியாத ஆளப்பா. இங்க எங்களைவிடச் சின்னப் பொடி பெட்டையளே மோசமாக நடக்குதுகள். நீங்கள் எதுக்கெடுத்தாலும் இதையே சொல்லுறியள்' என்றான் சலிப்போடு.

'இதைச் சொல்லாமல் வேற எதைச் சொல்லுறது? எங்கட காலத்தில நாங்கள் உங்கட வயசு தாண்டியும் இப்படிச் செய்யக் கூச்சப்பட்டிருப்பம். உங்களுக்கு பதினேழு வயசே முடியேல்லை. வீட்டில இருக்கிறவைக்குக் கொஞ்சம் மரியாதை இருக்கோணும்' என்றேன்.

'நீங்கள் சும்மா உங்கடை பழைய பல்லவியைப் பாடி எங்களுடைய நேரத்தை வீணடிக்கிறியள்' என்றான்.

'அப்பிடியா? அப்ப நான் சொல்லுறதைக் கவனமாகக் கேள். நீ இப்பிடி நடந்தா இந்த வீட்டிலை இருக்கேலாது' என்றேன். எனது மடமை எனக்கு உடனேயே புரிந்தது.

‘பருவாய் இல்லை’ என்றான் அவன்.

‘நீங்கள் இப்பிடிச் சண்டை பிடிச்சா நான் எங்கடை வீட்டை போறன்’ என்று சுசான் இடையில் புகுந்தாள்.

‘இவன்தான் இப்பிடி எண்டா நீயாவது கொஞ்சம் கட்டுப்பாடாக நடப்பாய் எண்டு நினைச்சன்’ நான் சுசானைப் பார்த்துச் சொன்னேன். அவள் அதற்குப் பதில் சொல்லவில்லை.
சுசான் உடுப்பு மாட்டத் தொடங்கினாள். நித்தி அதைப் பொறுக்க முடியாதவனாய்,

‘பொறு சுசான். அப்பா இப்பிடித்தான். இதை நீ பெரிசுபடுத்தாதை’ என்றான்.
எப்போது மூனா வந்தாள் என்பதை நான் கவனிக்கவில்லை. அவள் குரல் அருகில் அதிர்ந்த போதுதான் அவளின் வரவு எனக்கு உறைத்தது. அவள் என்னைப் பார்த்து,

‘எவ்வளவு நேரமாக இப்பிடி அட்டகாசம் செய்யிறியள்? இது எங்கத்தேப் பழக்கம்? தயவு செய்து அவைய விட்டிட்டு இங்கால முதல்ல வாறியளா?’ என்றாள். அவள் குரலிற் கடுமை தொனித்தது.

‘இல்லை மூனா அவைக்கு இன்னும் அந்த வயசே வரேல்லை’

‘அதெல்லாம் கிடக்கட்டும். இப்ப இஞ்சால வாறியளா இல்லையா?’ என்றாள்.

அவள் வதனம் கோபத்தில் வெந்து, தாமரைப் பூவின் நிறத்தில் அனலாக தகதகத்தது. அதிகம் இரத்தமேறிய பகுதி இலந்தைப்பழ நிறத்தில். நான் அந்த இடத்தைவிட்டு வேறு வழியின்றி நகர்ந்தேன். நித்தி கதவை அடித்துச் சாத்தினான். எனக்கு முகத்தில் ஓங்கி அடித்தது போல இருந்தது. அதன் பின்பு அவர்கள் என்ன செய்வார்கள் என்பது எனக்குத் தெரியும். அதற்கு மூனா ஆதரவாய் இருக்கிறாளே என்பது எனக்குக் கரித்தது. நெஞ்சுக் கூட்டிற்குள் இதயம் அடிபட்ட பறவையாகப் பதற, மூளைக் கலங்களில் எரிமலை வெடிக்க, நான் சோபாவில் அமர்ந்தேன். அவளும் வந்து சோபாவில் அமர்ந்தாள். எங்களுக்குள் இனம் புரியாத அமைதி நிலவியது. அதை யார் உடைப்பது என்பதில் இருவருக்கும் இடையில் நீண்ட தயக்கம். அந்தத் தயக்கத்தை அவளே முதலில் வென்றாள்.

‘நீங்க செய்யிறது கொஞ்சம்கூடச் சரியில்லை’ என்பதாகக் குற்றம் சாட்டுவதோடு தொடங்கினாள்.

‘அப்ப அவை செய்யிறது எல்லாம் சரி, நான் பார்த்துக்கொண்டு இருக்கோணும் எண்டுறாய் நீ?’

‘அவை இந்த வயசில அப்பிடித்தான் இருப்பினம். நாங்கள்தான் கண்டும் காணாமலும் இருக்கோணும்’

‘ஏய்… நீ என்ன கதைக்கிறா? வயசுக்கு வரமுதலே அப்பிடி இப்பிடிச் செய்யுதுகள். அதால ஏதாவது இசகு பிசகாகிட்டா?’ என்றேன்.

‘நீங்கள் எப்பவும் உங்கட காலத்தில இருந்துதான் சிந்திக்கிறியள். அவை இந்தக் காலத்துப் பிள்ளையள். ஸ்கூல்லேயே அவைக்கு இது செய்தா இதுதான் நடக்கும் எண்டு படிப்பிக்கினம். அதில இருந்து எப்பிடித் தப்பிக்கிறது எண்டும் சொல்லிக் குடுக்கினம். நீங்கள் என்னண்டா அவைய ஏதோ குழந்தையள் எண்டு நினைச்சுக் கொண்டு கதைக்கிறியள். அவை அப்பிடி ஒண்டும் குழந்தைகள் இல்லை. அவைக்கு எப்பிடி நடக்கோணும் எண்டு நல்லாத் தெரியும். நீங்க வொறி பண்ணாமல் இருந்தால் சரி’

‘நீ நித்திக்கு அம்மா மாதிரிக் கதை.’

‘புத்திரன்?’

‘பிறகு! ஒரு அம்மாவால இப்பிடிக் கதைக்கேலுமோ?’

‘அப்ப?’

‘ஒரு நல்ல அம்மாவால இப்பிடிக் கதைக்க ஏலாது’

‘ஓ… அப்ப நான் நல்ல அம்மா இல்லையா? நீங்கள் உங்கட அம்மாவை நினைச்சுக் கொண்டு கதைக்கிறியள் எண்டு சொல்லுங்கோ. இங்க அப்பிடி இருக்கும் எண்டு கனவு காணாதேங்கோ’

‘நீதான் கனவு காணுறாய் மூனா. இங்கையும் பலர் இதுக்குச் சம்மதிக்க மாட்டினம். அதுவும் பதினெட்டுக்கு முதல் இங்கையும் அநேகம் சம்மதிக்க மாட்டினம். உன்னால எப்பிடி முடியுது? அதுதான் எனக்கு விசித்திரமா இருக்கு. உன்னுடைய கடவுள் நம்பிக்கைக்கே எதிராய்க் கதைக்கிறாய் நீ’

‘அவை இரண்டுபேரும் பதினெட்டுக்கு முதல் பிள்ளையே பெறப்போயினம்? அதே உங்களுக்குப் பயம்? கொஞ்சம் அவையின்ர ஆசையை அனுபவிக்கினம். நீங்கள் உங்களால இந்த வயசிலை அனுபவிக்க முடியேல்லையே எண்ட

அந்தரத்திலை இப்பிடி அடம் பிடிக்கிறியள். இப்பிடி அடம் பிடிக்கக் கூடாது. எங்கட பிள்ளையின்ர நல்லது கெட்டதை முடிவு செய்யிறது நானும் நீங்களும்தானே?' என்றாள் அவள்.

'என்ர பிள்ளைக்காக முடிவெடுக்கிறது நானாக மட்டும் இருக்கோணும். உனக்கு இப்ப நல்லது கெட்டது தெரியேல்லை' என்றேன் கோபத்தில்.

'என்ன?'

'உனக்கு நல்லது கெட்டது, சரி பிழை தெரியேல்லை. நீ எப்படி அவனைப் பற்றின முடிவெடுக்கலாம்?' என்றேன் மீண்டும்.

'வாய மூடுங்க. இதுவரை காலமும் நான்தான் அனேக விஷயங்களை முடிவு செய்தேன். அதால அவன் கெட்டா போயிட்டான்? புத்திரன் நீங்கள் இப்ப என்ன கதைக்கிறியள்? உங்களுக்கு என்ன பைத்தியமா பிடிச்சிருக்குது?'

'நீ முதல்ல கதைக்கிறது என்ன எண்டு தெரிஞ்சுதான் கதைக்கிறியா?'

'ஓ... புத்திரன், எனக்கும் நித்திக்கும் வித்தியாசம் இல்லை எண்டுறியள்?'

'உன்ர கதையக் கேட்டா அப்பிடித்தான் நினைப்பினம்'

'நீங்க இப்பிடியெல்லாம் கதைப்பியள் எண்டு நான் நினைச்சிருக்கேல்லை'

'நீ குழந்தை மாதிரி கதைச்சா நான் எப்பிடிக் கதைக்கிறது?'

'ம்... நான் குழந்தை மாதிரி? ம்.... நான் இதுவரை பார்த்த புத்திரன் வேற, இப்ப பாக்கிற புத்திரன் வேற. உங்களிட்ட இப்ப எப்பிடி இவ்வளவு வறட்டு எண்ணங்கள் வந்திச்சுது? ஒரு அறிவுள்ள மனிசன் மாதிரியா நீங்கள் கதைக்கிறியள்?' என்றாள் அவள்.

'முட்டாள். என்ர எண்ணங்கள் வறட்டு எண்ணங்கள் இல்லை. நான் இப்பிடித்தான் வாழோணும் எண்டுறன். நீ எப்பிடியும் வாழலாம் எண்டுறா. நித்திய இப்பவே எப்பிடியும் வாழலாம் எண்டு அவன்ர ஸ்ரத்திற்கு விட்டா, அவன் கடைசியில எப்பிடிப் போவான் எண்டே உன்னால கற்பனை செய்யேலாது?' என்றேன்.

'நீங்கதான் தேவையில்லாத கற்பனையில இருக்கிறியள். உங்கட கட்டுப்பாட்டில வளர்ந்தா ஒரு நாளைக்கு எங்க போறன் எண்டதுகூடத் தெரியாமல் அவன் போய்ச் சேர்ந்திடுவான். அதுக்குப் பிறகு இப்ப இருக்கிறதுகூட இல்லாமல் போயிடும்' என்றாள்.

'நல்லது. உன்னை மாதிரித் தாய் தகப்பன் இருந்தா உலகத்தில ஒழுக்கம் எண்டுறது கிலோ என்ன விலை எண்ட மாதிரித்தான் வரும்'

'நிப்பாட்டுங்க புத்திரன். உங்கட இந்தக் கதைக்கு முடிவு இருக்காது. இதை இனிக் கேட்கிறதுக்கு எனக்குப் பொறுமையும் இல்லை' என்று கோபமாகக் கத்திவிட்டு மூனா படுக்கை அறைக்குச் சென்றாள்.

உள்ளே சென்றவளிடம் இருந்து விசும்பல் ஒலி கேட்டது. மூனா எதற்கும் அழுவதில்லை. இன்று அழுதாள். பெண்கள் எந்த நாட்டவராய் இருந்தாலும் ஏதோ ஒரு கட்டத்தில் இப்படித்தான் சாதிக்கிறார்கள். கதைத்தால், வாக்குவாதப்பட்டால் ஏன் அழவேண்டும்? அழுவது பலவீனத்தாலா அல்லது அனுதாபம் பெறுவதற்கா? அழுவது அனுதாபத்தையும் உண்டுபண்ணலாம். மாறாக ஆத்திரத்தையும் உண்டு பண்ணலாம். எனக்கு மூனா அழுவதைக் கேட்கக் கோபம் வந்தது. நான் அதை அடக்குவதற்கு அரும்பாடுபட்டேன். துணைக்கு ஒரு கதைப் புத்தகத்தை இழுத்துக் கொண்டேன். என்னால் அது முடியவில்லை. மனது இப்போது புத்தகத்தில் புதைய மறுத்தது. அமைதி இல்லாத போது மனதால் எதிலுமே கவனம் செலுத்த முடிவதில்லை. எனக்கு மூனாவோடு சென்று கதைக்கவும் பிடிக்கவில்லை. அப்படிக் கதைப்பதென்றாலும் நித்தியைப் பற்றிக் கதைக்க முடியாது. நான் கதைத்தாலும் அவள் என்னோடு கதைப்பாளா என்பது புரியவில்லை. எனது சிந்தனை இடையறுந்தது. நித்தியின் கதவு திறபட்டது. உள்ளே இருந்து நித்தியோடு சுசானும் வெளியே வந்தாள். அவள் என்னை நிமிர்ந்து பார்க்கவில்லை. எப்படிப் பார்க்க முடியுமென நான் எண்ணிக் கொண்டேன். நித்தியும் அவளோடு சேர்ந்து எங்கோ புறப்பட்டுவிட்டான். எனக்கு நித்தியைக் கூப்பிட்டுக் கதைத்தால் நல்லது எனப்பட்டது.

'நித்தி?'

'என்ன?'

‘நான் உன்னோடை கதைக்கோணும்’

‘நானும் சுசானும் இப்ப வெளிய போறோம்’

‘அது எனக்குத் தெரியுது. சுசானை இப்ப அனுப்பு. நீ பிறகு போகலாம்..’ என்றேன்.

‘ஓ கே, நித்தி நான் வாறன்’ என்று கூறியவண்ணம் சுசான் புறப்பட்டாள்.

‘சரி. காத’

‘காத.’

சுசான் அப்பிடிப் போனதில் நித்தி என்னை எரிச்சலோடு பார்த்தான். பின்பு வந்து சோபாவில் அமர்ந்து தொலைக்காட்சிப் பெட்டியை அவசரமாக இயக்கினான். எனக்குக் கோபம் பற்றிக் கொண்டு வந்தது. என்றாலும் அதை அடக்கி,

‘உதை முதல்ல நிப்பாட்டு நித்தி’ என்றேன்.

‘சரி நிப்பாட்டுறன். இப்ப என்ன விஷயம் கதைக்கோணும்?’ என்றான் அவன்.

‘நீ செய்யிறது தப்புத் தெரியுமோ?’ என்றேன்.

‘எது தப்பு?’ என்றான் அவன் அசட்டையாக.

‘நீயும் சுசானும் இப்பிடிச் செய்யிறது’

‘இதை நீங்கள் எற்கனவே கதைச்சிருக்கிறியள்’

‘இது வெளிய தெரிஞ்சா அவமானம்’ என்றேன்.

‘அப்பா, நான் இதுக்கு மேலை உங்களோட இதைப்பற்றிக் கதைக்க விரும்பேல்லை’ கூறிய நித்தி திடீரென எழுந்து சென்றான். நான் சிறிது நேரம் ஸ்தம்பித்துப் போய் அப்படியே இருந்தேன். பிரம்பு முறியும் காட்சி என் மனதில் ஓடியது. அப்படித் தண்டனை கொடுக்க முடியாது சட்டம் இவர்களைப் பாதுகாத்துக் கொள்ளுகிறது. எனது வளர்ப்பு முறைக்கு ஆதரவு இருக்கவில்லை. என்னால் தனித்து நின்று எதுவும் செய்ய முடியவில்லை. நான் அன்றைய வாக்குவாதத்திற்குப் பின்பு அதைப் பற்றி யாரோடும் கதைப்பதில்லை. அநேகமான நேரம் புத்தகத்தோடு சஞ்சரிப்பது எனது வாழ்வாகியது. அதன் மூலம் தனிமையைத் தேடினேன். யதார்த்தத்தை விட்டு எழுந்து ஓடினேன். கண்ணிருந்தும் பார்வையில்லாது இருக்க விரும்பினேன்.

★

அது ஒரு ‘போஸ்கை’ (ஈஸ்ரர்) விடுமுறை. நானும் மூனாவும் வழமை போல மலைக்குப் போவதாய் முடிவு செய்தோம். தேவையான எல்லாப் பொருட்களையும் நான் ‘பிக்கப்பில்’ ஏற்றிவிட்டேன். இப்போது நாங்கள் ஒரு ‘பிக்கப்’ வாங்கி வைத்திருந்தோம். பனிக்கும் சகதிக்கும் அதன் வலு தேவைப்பட்டது. கார்கள் அப்படி இல்லை. சிலவேளை மாட்டிக் கொண்டால் அதை எடுப்பதே பெரும்பாடாகி விடுகிறது.

நான் எல்லாப் பொருட்களையும் ஏற்றிவிட்டு வீட்டிற்குள் வந்தேன். மூனா புறப்பட்டுத் தயாராக நின்றாள். நித்தியைக் காணவில்லை. நான் மூனாவைப் பார்த்து,

‘நித்தி எங்க?’ என்றேன்.

‘நித்தி அறைக்க இருக்கிறான்’ என்றாள்.

‘எங்களோடை வரேல்லையா?’ தொடர்ந்து கேட்டேன்.

‘இல்லையாம்’

‘ஏன்?’

‘அவன் விரும்பேல்லையாம். அதுக்கு மேல நாங்கள் ஒண்டும் செய்ய ஏலாது’

‘சரி நீ போய்ப் பிக்கப்பில இரு’
மூனா வெளியே போக நான் நித்தியின் கதவைத் தட்டினேன்.
‘நித்தி… நித்தி..’
‘என்னப்பா?’
கேட்ட வண்ணம் வந்து கதவைத் திறந்தான்.
‘வாவேன் மலைக்குப் போவம்?’ என்றேன்.
‘நான் வரேல்லை’ என்றான்.
‘அப்ப தனிய இருந்து என்ன செய்யப்போறாய்?’
‘நான் சுசான் வீட்டை போகப் போறன்’ என்றான்.
‘அப்பிடியா. சரி. காத’
‘காத’
‘வந்து கதவைப் பூட்டு’
‘ம்…’

நித்தி வந்து கதவைப் பூட்டினான். எனக்கு அவன் கூறியதில் நம்பிக்கை இருக்கவில்லை. மூனா அப்படியே நம்பி இருப்பாள் என்பதில் சந்தேகம் இல்லை. எனது நம்பிக்கை இன்மைக்கு உரிய ஆதாரமில்லாது அதைக் காட்டிக் கொள்ளுதல் பண்பாகத் தோன்றவில்லை. நான் எதுவும் பேசாது வாகனத்தை எடுத்தேன். கோபத்திற் கால்கள் பலமாக ‘அக்சிலேற்றரை’ அழுத்தியது. சீறிப்பாய்ந்த ஏரிபொருளுக்கு ஏற்ப இயந்திரம் உறுமியது. அழுத்திப் பிடித்த ‘கிளைச்சை’ விடவும் மனிதப் பிடியிலிருந்து விடுபட்ட குதிரையாக வாகனம் முன்னே பாய்ந்தது. இதைப் பார்த்த மூனா, ‘கவனமா ஓட்டுங்க’ என்று என்னை எச்சரித்தாள். நாங்கள் புறப்படும் போது வானம் சலனமற்றுக் கிடந்தது. இன்று நல்ல காலநிலையாக இருக்கும் என்கின்ற கற்பனை என்னிடம். என் கற்பனை பொய்த்தது. எங்கள் தீவை விட்டு வெளியே சென்ற போது வாகனம் வானத்தில் பறப்பதான அவஸ்தை. எங்கும் காற்றோடு கூடிய பனியின் வெள்ளைப் புகாரடிப்பு. வீதி எங்கே தரிசு நிலம் எங்கே? என்கின்ற தடுமாற்றம். எங்கள் பாடு பெரும் தெண்டாட்டம் ஆகியது. அதற்கு மேல் எங்களால் வாகனத்தைச் செலுத்த முடியவில்லை. நான் சிறிது நேரம் வாகனத்தை நிறுத்திவிட்டு அப்படியே காத்திருந்தேன். இப்படியே காத்துக்கொண்டு இருந்தால் எங்களைப் பனி அதே இடத்தில் உயிரோடு சமாதி கட்டிவிடும் என்கின்ற பயம் என்னைப் பிடித்து உலுக்கியது.

‘என்ன செய்யலாம் மூனா? ம்… உதுக்க போகேலும் எண்டு நான் நினைக்கேல்லை. மூனா நீ இறங்கிக் கொஞ்ச இடம் முன்னால நட, நான் உனக்குப் பின்னால ஓட்டியாறன். அப்பிடிப் போகேலும் எண்டாப் போய்ப் பாப்பம். அப்பிடியும் போகேலாட்டித் திரும்பி வீட்டை போவம்’ என்றேன்.
‘சரி’

அவள் இறங்கினாள். தயக்கத்தோடு முன்னே நடந்தாள். அவளைப் பார்க்க எனக்குப் பரிதாபமாய் இருந்தது. குளிரின் அறுவை அரிகல்லால் உரசுவது போல. அது மேலில் படும் போதுதான் தெரியும். வாகனத்தில் சுகமாக இருப்பது போல் அதற்கு முன்பு நடக்க முடியாது. அவள் கொஞ்ச இடம் போனதும் திரும்பி ஓடி வந்து வாகனத்தில் ஏறிக் கொண்டாள். பின்பு அவள் வாகனம் ஓட்ட நான் முன்னால் நடந்தேன். என்னாலும் நடக்க முடியவில்லை. நானும் ஓடிவந்து மீண்டும் வாகனத்தில் ஏறிக் கொண்டேன்.
‘என்ன செய்யிறது?’ மூனா என்னைப் பார்த்துக் கேட்டாள்.
‘திரும்பி வீட்டுக்குப் போகலாம்’ என்றேன்.

காற்று தனது வலிய கைகளால் பனியை அள்ளி விசிறி அடித்தது. உலகத்தையே உறைய வைப்பேன் என்கின்ற இறுமாப்போடு அது நாலா திக்கும் அதிரக் கூவியது. வாகனத்தை விட்டு இறங்குவதை நினைத்தால் பீதி தொற்றிக் கொண்டது. திரும்பிக்கூட எங்களால் போக முடியுமா என்பது புரியவில்லை. பனிக்குள் சமாதியான கதையாக எங்கள் கதை முடியுமா? நான் இதைக்கூறி மூனாவைப் பயப்படுத்த விரும்பவில்லை.

வாகனத்தில் எரிபொருள் உள்ள வரைக்கும் நாங்கள் பாதுகாப்பாய் இருக்கலாம். அதற்குள் யாராவது வரவேண்டும். இந்த குளிரும் காற்று, வெப்பம் இல்லாவிட்டால் அரை மணித்தியாலத்தில் உயிரைப் பலி வாங்கிவிடும்.

'என்ன யோசிச்சுக் கொண்டு இருக்கிறியள்? இதிலையே வைச்சுத் திருப்பட்டே?'
'ம்'

அவள் வாகனத்தைத் திருப்ப 'றிவேசை'ப் போட்டாள். நான் ஆபத்திற்குப் பாவிக்கும் ஆழியைத் தட்டிவிட்டேன். எல்லா மின்குமிழ்களும் விட்டுவிட்டு ஒளிர்ந்தன. ஆளையாள் தெரியாத இந்தப் பனிப் புயலுக்குள் யாராவது முன்னுக்கு நிற்பதே தெரியாது வந்து மோதி விடுவார்களோ என்கின்ற பயம் என்னிடம். மூனா வாகனத்தைப் பின் பக்கமாகத் திரும்பி பார்த்து எடுத்தாள். பயத்தில் கொஞ்சம் அதிகமாக 'அக்சிலேற்றரை' அழுத்திவிட்டாள்.

'நிப்பாட்டு... நிப்பாட்டு..' என்று நான் கத்தினேன். அவள் நிறுத்திய போது வாகனம் வீதியை விட்டு இறங்கிப் பனியில் புதைந்து கொண்டது. 'எஞ்சின்' தொடர்ந்தும் இயங்கியது. அந்தமட்டில் எனக்கு ஒருவித நிம்மதி. அது இயங்கும் வரைக்கும் எந்த ஆபத்தும் இல்லை. நான் அவளை இறங்கி எனது ஆசனத்திற்கு மாறச் சொன்னேன். அவள் என்னை இறங்கி மாறச் சொல்லிவிட்டு தான் ஓட்டுநர் இருக்கையில் இருந்து மற்ற இருக்கைக்குத் தாவினாள். எனக்கு அதைப் பார்க்கச் சிரிப்பு வந்தது. நான் ஓட்டுநர் இருக்கையில் ஏறி இருந்து கொண்டு கதவைச் சாத்திய பின்புதான் எனக்கு நிம்மதி வந்திற்று. என் சிரிப்பு மூனாவை என்னவோ செய்திருக்க வேண்டும்?
'ஏன் சிரிக்கிறியள்?' என்றாள்.
'இல்ல உன்ரை உடம்பை இப்பிடிக் கஸ்ரப்படுத்துறியே? அதுதான்..' என்றேன்.
'முதல்ல நீங்க ஜீப்ப எடுங்க' என்றாள் கோபமாக.

மூனா வாகனத்தின் சக்கரங்களை நேராக வைத்துக் கொண்டு அதை வீதிக்கு எடுக்கவில்லை. நான் இறங்கி வரும்போது அதைக் கவனித்தேன். வாகனத்தில் ஏறியதும் நான் முதல் வேலையாகச் சக்கரங்களை நேராக வரும்படி சரி செய்தேன். நான்கு சக்கரங்களும் வேலை செய்யுமாறு பார்த்துக் கொண்டு மெதுவாக சுளராமல் நேரே எடுக்க வாகனம் வெளியே வந்தது. மூனா சந்தோஷத்தில்,

'வாவ். நீங்க என்னை விட நல்ல ரைவர் ஆகீட்டியள்' என்றாள். 'எப்பவோ நீ நல்ல ரைவராக இருந்த மாதிரி' என்று சொல்லி இருக்க வேண்டும். நோர்வேயில் அப்படி மட்டம் தட்டிக் கதைப்பது புறநடை.
'தாங்ஸ்'

நாங்கள் தப்பினோம் பிழைத்தோமென வீட்டை நோக்கிப் பயணமாகினோம். சிறிது நேரம் வெளியே நின்றதின் விளைவு கைகால் விறைத்து எரிந்தது. வீட்டிற்குச் சென்று அந்தக் கதகதப்பான வெம்மையில் காலைக் கையை நீட்டிக் கொண்டு ஓய்வெடுத்தால் அலாதியாக இருக்கும் என்பது என் கனவாகியது. நான் அந்த அலாதியான சுகத்தை எண்ணிய வண்ணம் வீட்டை நோக்கி வாகனத்தைச் செலுத்தினேன்.

வீட்டுக்கதவைத் திறந்தேன். நித்தி சுசான் வீட்டிற்குச் செல்வதாய்க் கூறி இருந்ததால் அவன் அங்கே சென்றிருப்பான் என்பது எனது எண்ணம். நான் கதவைத் திறந்து உள்ளே வைக்க வேண்டிய பொருட்களோடு நுழைந்தேன். மூனாவும் சில பொருட்களை எடுத்துக் கொண்டு என் பின்னால் வந்தாள். பாதணிகளைக் கழட்டிவிட்டுக் கோலுக்குள் வந்தபோது வெம்மை முகத்தை இதமாக வருடியது. அடுத்த கணமே நான் நெருப்பை மிதித்தவன் போல் அந்தரித்தேன். நித்தியின் அறைக்குள் இருந்து ஒரு விதமான ஒலிகள் வந்தன. சுசானும் அவனோடு இருக்கிறாள் என்பதை அங்கிருந்து வருகின்ற பெண்குரல் பறைசாற்றியது. 'நித்தி இப்போது பொய்யும் சொல்லத் தொடங்கிவிட்டான். சுசான் வீட்டிற்குப் போவதாகக் கூறிவிட்டு இங்கிருந்து கொட்டமடிக்கிறான். சுசான் வீட்டிற்குச் சென்றால் சாதுவான கட்டுக்காவல் இருக்கும். அவளது தாயும் தந்தையும் கண்டபடி இவர்கள் விருப்பத்திற்கு விடமாட்டார்கள்' என்று எண்ணினேன். மூனாவும் இந்தச்

சத்தங்களை ஒரு கணம் செவிமடுத்தாள். பின்பு களைத்திருந்ததால் அப்பாட எனச் சோபாவில் அமர்ந்து கொண்டாள். நித்திக்கும் சுசானுக்கும் நாங்கள் திரும்பி வந்தது இன்னும் தெரியாது. அவர்கள் கத்தலிலோ அனுங்கலிலோ எந்தவித குறைப்பும் இல்லை. எனக்குச் சகிக்க முடியாத சங்கடமாகியது. மூனாவுக்கும் அது இம்சையாக இருந்திருக்க வேண்டும். கோலுக்குள் இருந்த வண்ணம் உரத்துக் குரல் கொடுத்தாள்.

'நித்தி… நித்தி… கொஞ்சம் சத்தத்தைக் குறைக்கிறியளே?' என்றாள்.
அவள் பெரிதாகக் கத்தியதும் உள்ளே சிறிது அமைதி நிலவியது. பின்பு நித்தி திருப்பிக் குரல் கொடுத்தான்.
'என்ன?' என்றான்.
'சத்தமாகக் கதைக்கிறதைக் குறையுங்க'
'நீங்க மலைக்குப் போகேல்லயே?'
'இல்லை'
'ஏன்?'
'வெதர் சரியில்லை'
'வெதர் சரியில்லையோ இல்லாட்டி வேவு பார்க்க வந்தியளோ?'
'என்ன? உங்களை வேவு பார்க்கிற அளவுக்கு நீங்கள் உங்க என்ன செய்யிறியள்?'

அந்த வசனம் மூனாவை எரி குழம்பாகச் சுட்டது. அவள் பொறுமை எல்லை தாண்டியது. அவள் கோபம் சோடா போல்ப் பொங்க, இருக்கையை விட்டுப் பறக்க நினைத்தது போல் எழுந்தாள். என்ன செய்யப் போகிறாள் என்கின்ற கேள்வியோடு நான் நிற்க, அவள் மேலே சென்றாள். நானும் அவளுக்குப் பின்னால் சென்றேன். அவள் நித்தியின் அறைக் கதவைப் பலமாகத் தட்டினாள்.

'என்ன வேணும்?' என்று உள்ளே இருந்து சூடாக நித்தியின் குரல் வந்தது.
'நான் உங்களோடை கதைக்கோணும். கதவைத் திறவுங்க பாப்பம்' என்றாள் மூனா.
'பிறகு கதைக்கலாம் அம்மா' என்றான் நித்தி.
'இல்லை. நான் இப்ப கதைக்கோணும் கதவைத் திறவுங்க பாப்பம்' என்றாள் மூனா.
'சும்மா ஆக்கினைப் பண்ணாதேங்க. பிறகு வாங்க' என்றான் நித்தி.
'அப்பிடி எண்டா நீங்க என்ன செய்யிறியள் உள்ள?' மூனா மறு முறையும் கேட்டாள்.
'ஒண்டுமில்லை சும்மாதான் இருக்கிறம்' என்றான் நித்தி.
'அப்ப கதவைத்திற'
'இப்ப திறக்க முடியாது' என்று நித்தி தொடர மூனாவால் பொறுக்க முடியவில்லை.
'மடையா. அப்பா இங்க பக்கத்திலதான் நிக்கிறார்' என்றாள்.
நான் குரல் கொடுத்தேன்.
'நித்தி… கதவைத்திற.'
'..'
'நித்தி… கதவைத்திற'

இம்முறை கடுமையாகவே உறுக்கினேன். சிறிது நேரத்தின் பின்பு கதவு திறந்தது. உள்ளே அவசர அவசரமாய்ச் சுசான் ஆடைகளை அணிந்து கொள்வது தெரிந்தது.

'இது மூனாவால் வந்த வில்லங்கம். இவள்தானே எல்லாவற்றிற்கும் ஒத்துப் பாடிக் கொண்டு இருந்தவள். அப்பவே கண்டித்திருக்க வேண்டிய விடையங்கள் இது' என்பதாக என் எண்ணம். நித்தி ஒருவிதமாக முழித்தான். அவன் ஏன் அப்படி முழிக்கிறான் என்பது எனக்குப் புரிந்தது. நித்தியின் அறைக் கதவைத் திறந்த உடனேயே மது வாசனையும், புகை வாசனையும் வந்ததை நான் உணர்ந்து கொண்டேன். நித்தி அரசல் புரசலாகப் புகைப்பது

தெரியும். இப்போது அறைக்குள்ளேயே புகைக்கிறான் என்றாலும் எதுவும் செய்துவிட முடியாது. ஆனால் மது வாசனை? எனக்குக் கோபம் பற்றிக் கொண்டு வந்தது. அவனைக் கோபமாகப் பார்த்த வண்ணம்,

'என்ன செய்து கொண்டு இருந்தனியள் உள்ள?' என்றேன்.

'சும்மா சிகரெட்ப் பத்திக் கொண்டு..' என்று இராகம் இழுத்தான் நித்தி.

'அப்படித் தெரியேல்லை'

'அப்ப?' வியப்பாக என்னைப் பார்த்துக் கேட்டான் நித்தி.

'என்ன குடிச்சனியள்?'

'ஒண்டுமில்லை'

'உன்ர வாய் மணக்குதே?'

'இல்லையே... மணக்கேல்லயே' என்றவன் அவசரமாகத் தன் வாயைப் பொத்திக் கொண்டான்.

'சுசான் சொல்லு, என்ன குடிச்சனியள்' என்று சுசானைக் கேட்டேன்.
அவள் தலையைக் குனிந்து கொண்டாள். என்னைப் பார்க்கவில்லை.

'சொல்லு சுசான். என்ன குடிச்சனீங்க. ம்... சரி சொல்லமாட்டியளா?'

'..'

எனக்கு எரிச்சல் வந்தது.

'நித்தி! என்ன குடிச்சனீங்கள் எண்டதை நீயாகக் காட்டுறியா, இல்லாட்டி நான் தேடி எடுக்கவா?' என்று கேட்டேன்.

'பொறுங்க' என்றுவிட்டு படுக்கைக்குக் கீழே இருந்த வெறும் வியர் போத்தல்களை எடுத்தான்.

'இது வாங்குகிறதுக்கு, இதைக் குடிக்கிறதுக்கு, உங்களுக்குப் பதினெட்டு வயசாகோணும். இப்ப எப்பிடி இதை வாங்கினீங்கள். யார் உங்களுக்கு வாங்கித் தந்தது? கொஞ்சம் விட்டுத்தந்தா நீங்கள் ஆக ஓவராகத்தான் போகிறியள் போல இருக்குது' என்றவாறு மூனா இடையில்ப் புகுந்தாள். நான் மீண்டும் தொடர்ந்தேன்.

'சொல்லு நித்தி, யார் வாங்கித் தந்தது?'

'ஒருத்தரும் இல்ல'

அவன் கூறிய அந்தப் பதில் எனக்குக் கோபத்தை உண்டு பண்ணியது.

'கன்னம் பளிச்சிடும். மரியாதையாகச் சொல்லடா. யார் வாங்கித் தந்தது' என்று கர்ச்சித்தேன்.

'நான் சொல்லமாட்டன்'

நான் எனது நிதானத்தைக் கோபத்திடம் பலி கொடுத்தேன். கைகால்கள் நடுங்கின. முகத்தில் இரத்தோட்டம் கூடி வெப்பம் பிறந்தது. நான் என்ன செய்கிறேன் என்பதை மறந்தேன். எது செய்ய வேண்டும் என்கின்ற நிதானத்தை இழந்தேன். இதனால் பின்பு என்ன பாதிப்பு வரும் என்கின்ற சிந்தனை அற்றேன். கோபமாகிய சத்திராதி என்னை மிருகமாக்கியது. மனித குணம் மரித்துப் போனது. மொழி மறந்து போனது. நா சொற்கள் பிடிபடா உணர்ச்சியில் மரத்துப் போனது. நான் எட்டி அவன் கன்னத்தில் ஒரு அறை விட்டேன். மூனா கத்திய வண்ணம் என்னைப் பிடித்து வெளியே இழுத்தாள். நித்தி சிலகணங்கள் விறைத்தவன் போலச் சிலையாக நின்றான். பின்பு பெரிதாக,

'சாத்தான். சாத்தான் இருக்கிற வீட்டில குடி இருக்கேலாது'

கத்திய வண்ணம் என்னை விலத்திக் கொண்டு அறைக்கு வெளியே சென்றான். மேலங்கியையும் பாதணிகளையும் மாட்டிக் கொண்டு வெளிக் கதவை படாரென அடித்துச் சாத்திவிட்டு வெளியே சென்றான். சுசான் எதுவும் பேசாது சிறிது நேரம் அப்படியே இருந்தாள். பின்பு யாரையும் நிமிர்ந்து பார்க்காது வெளியே சென்றாள். கதவு மீண்டும் இதயங்களை நொறுக்கின.

'உங்களுக்கு அறிவில்லை. பிள்ளையளோட எப்பிடிப் பழகோணும் எண்டு தெரியேல்லை' மூனா என்னைப் பார்த்துத் திட்டினாள். கதைத்தால் நான் மேலும் மிருகமாகலாம் என்கின்ற பயம் என்னுள். சத்திராதி தணிய வேண்டும். அதன் பின்பு கதைக்க வேண்டும். நான் ஆடைகளைக் களைந்துவிட்டுப் படுக்கையில் போய் விழுந்தேன்.

நித்திரை வரவில்லை. மனது விண்ணுக்கும் மண்ணுக்கும் ருத்திர ரூபம் எடுக்க நான் முகட்டை வெறித்த வண்ணம் படுத்திருந்தேன். கண்கள் அப்படியே அயர்ந்திருக்க வேண்டும். இரண்டு மணித்தியாலம் சென்றிருக்கும். என்னை மூனா எழுப்பினாள். நான் துடித்துப் பதைத்து எழுந்தேன். பின்பு என்னைச் சமாளித்துக் கொண்டு,

'என்ன?' என்றேன்.

'நித்தியும் சுசானும் உங்களோட கதைக்கோணுமாம்'

'என்ன?' என்றேன். மைந்தனுக்குத் தந்தை பதில் சொல்லவேண்டிய நிலை வந்தது எனக்குப் புரிந்தது.

'அவை இரண்டுபேரும் திரும்ப வந்திருக்கினம். உங்களோடை கதைக்க வேணுமாம்' என்றாள் மூனா.

நான் அவசர அவசரமாக ஆடைகளை அணிந்து கொண்டு வெளியே போனேன். கோலில் நித்தியும் சுசானும் ஏதோ முடிவுக்கு வந்தவர்களாய்த் தோன்றினார்கள். நான் போய்ச் சோபாவில் இருந்ததும் நித்தியே கதைக்கத் தொடங்கினான்.

'அப்பா நான் ஒண்டும் குழந்தைப் பிள்ளை இல்லை. நீங்கள் என்னை அப்பிடி நடத்த முடியாது'

'உங்களுக்கு இன்னும் பதினெட்டு வயது ஆகேல்லை எண்டது ஞாபகம் இருக்க வேணும்.'

'அது சரிதான். ஆனா நீங்கள் இண்டைக்கு நடந்து கொண்ட விதம் சரியில்லை. நான் என்ன செய்தாலும் என்நிலை கைவைக்க உங்களுக்கு எந்த அதிகாரமும் கிடையாது. நான் பொலிஸில சொன்னா என்ன நடக்கும் எண்டு உங்களுக்கே தெரியும். ஆனா நான் அப்பிடிச் செய்யமாட்டன். நீங்களும் ஒண்ட விளங்கோணும். எங்களை எங்கட ஸ்ரத்திற்கு இங்க இருக்க விடோணும். இல்லாட்டி எங்களுக்கு ஒரு வழிதான் இருக்குது'

அவன் பயமுறுத்துவது போல நிறுத்தினான். நான் எதுவும் பேசாது இருந்தேன். அவன் மீண்டும் தொடர்ந்தான்.

'நீங்கள் எங்கட சுதந்திரத்திலை தலையிடுவியள் எண்டா நான் வேறை இடம் பார்த்துக் குடி போக வேண்டி வரும்' என்றான் பெரிய மனிதனாக.

'நித்தி?'

'நான் உண்மையாகத்தான் சொல்லுறன்' என்றான்.

எனக்கு அவன் கருதுவதின் ஆழம் புரிந்தது. இது இங்கு சகஜமாய் நடப்பது. அது என் வீட்டில் நடந்தால்? அந்த எண்ணத்தை என்னாற் தாங்கிக் கொள்ள முடியவில்லை. என்னைப் பொறுத்தமட்டில் நித்தி எங்கள் வீட்டில் இருக்க வேண்டும். அதற்காக அவன் விடையத்தில் தலையிடக் கூடாது என்பது பெரும் தண்டனை. தப்பு செய்யும் போது தட்டிக் கேட்க முடியாத தகப்பனாக இருப்பது எப்படி என்று எனக்குப் புரியவில்லை. இனி நான் அவனைத் தட்டிக் கேட்டால் அவன் என்னை விட்டுப் போய் விடலாம். அது மிகப் பெரிய தண்டனையாகிவிடும். நான் இன்று கை நீட்டி இருக்கக் கூடாது. அது நான் செய்த மிகப் பெரிய முட்டாள்தனங்களில் ஒன்று. அதுவும் சுசான் முன்பு கை நீட்டியது மிக மிகப்பெரிய முட்டாள்தனம்.

'அப்பா என்ன பேசாமல் இருக்கிறியள்?' என்றான்.

'இப்ப என்ன செய்யோணும் எண்டுறாய்?'

'நீங்கள் இனி எங்கட விஷயத்திலை தலையிடக்கூடாது'

'ம்... எங்களுக்கே தட்டிக் கேட்க உரிமை இல்லையா? நல்ல நாடு. சரி ஏதோ நடக்கட்டும்'

இதுவரை மௌனமாய் இருந்த சுசான் இப்போது வாய் திறந்தாள்.

'சும்மா சொன்னாச் சரிவராது. நீங்க சத்தியம் பண்ணோணும்' என்றாள்.

'ஓகே. சத்தியமா நான் உங்கட விஷயத்திலை இனித் தலையிடேல்லை' என்றேன்.

'தாங்ஸ்'

'ஒரு விஷயம் சுசான்?'

'என்ன?'

‘நீங்களும் சட்டத்தை மீறுகிற வேலையள் செய்யக் கூடாது’

‘ஏலுமானவரைக்கும் அதை நாங்கள் செய்யாமல் தவிர்க்கிறம்’

இதுவரை பேசாது என்ன நடக்கிறது என்பதைப் பார்த்துக் கொண்டிருந்த மூனா  கதைக்கத் தொடங்கினாள்.

‘நல்லது. இப்பிடித்தான் இருக்கோணும். இனி அப்பா உங்கட விஷயத்திலை  தலையிட மாட்டார். அதே மாதிரி நீங்களும் கூடியமட்டும் உங்கடை  வரையறைக்க நிண்டாச் சரி. என்ன?’’ என்றாள்.

‘சரி’ என்ற வண்ணம் இருவரும் தலையை ஆட்டினார்கள்.

பின்பு இருவரும் மகிழ்ச்சியாகத் தமது அறைக்குச் சென்றார்கள். நான் சிறிது  நேரம் கண்ணை மூடித் தியானிக்க எத்தனித்தேன்.

# 11

**நி**த்தியும் சுசானும் சுதந்திரத்தோடு தமது விருப்பில் தம்பதியாகினர். எங்கள் எதிர்ப்புகள் அத்தோடு வழியில்லாது ஓய்ந்து போயிற்று. இளமை விடை கேட்பதாக வாழ்வில் நிறைய மாற்றங்கள். நிரந்தரம் என்பது நிரந்தரம் இல்லாத நித்தியம் புரிந்ததில் ஒருவித அவஸ்தை. பதியப்படாத அறிவு அழிந்து போய்விடும் என்கின்ற உண்மை உறைத்தது. பதிவதற்கு என்னிடம் அபூர்வ அறிவு எதுவும் இருக்கவில்லை. எனது அலங்கோலத்தை எழுத்தில் கோலமாக்கினால் அதுவே பெரும் சாதனையாகும். அதைச் செய்ய வேண்டும் என்கின்ற வெறி என்மனதில் விழுதுான்றியது. காலப் போக்கில் அது ஆழமாகப் புதைந்து என் இருப்பைத் தாங்குகிறது.

நேரம் கிடைக்கும் போது அமைதியாக வாசிப்பது எனக்குப் பிடித்திருந்தது.  புத்தகங்கள் என்னைப் புத்தனாக்குகிறதா? புத்த போதனை படித்தவர்கள் யுத்தபோதனை நிகழ்த்தும் காலம் அல்லவா இது? தத்துவ அறிவுகள் மனிதனின் ஆசையின் தாக்கத்தைக் குறைக்கிறதா? அவனைத் திருத்துகிறதா? அல்லது அவன் வன்மத்தை நிலை நாட்டுவதற்கு அது ஒரு ஆயுதமாகப் பலியாகிறதா? போதனைகள் பலவும் படித்த அடுத்த கணமே மறக்கப்படுகிறதா? அலசல்களுக்கு நிரந்தர விடை கிடைப்பதில்லை. மாற்றங்களைத் தாண்டிய நிலையான கருத்து எதுவும் இல்லை என்பதாக எனக்குத் தோன்றியது.

சிந்தனையோடு நான் ஒரு தனி உலகத்திற்குள் புகுந்து விட்டதான சித்தப் பிரமை? சிந்திப்பவர் உலகு தனி உலகமாக இருக்குமா? மூனர் அவள்  இன்னொரு தனியுலகம். அமைதியாக அரை மணித்தியாலம் இருந்து ஏதாவது  ஒரு புத்தகத்தைப் படிப்பதென்றால் அவளுக்குத் தலை வெடித்துவிடும்.  அவளால் வீட்டுக்குள் அடைந்து கிடக்க முடியாது. புத்தகத்தைப் போதிமரமாகக் காதலிக்க முடியாது. வேலையில்லாத கோடீஸ்வரியாகச் சுதந்திரமாகக் கேளிக்கைகளில் ஈடுபட வேண்டும். இன்றும் அவள் அப்படித்தான். என் பிரசன்னம் பற்றி அக்கறைப்படாமல் அடிக்கடி வெளியே சென்று வருவாள். இருவருக்கும் தற்போது இருவிதமான உலகம் பிடித்துக் கொண்டது. எனக்குப் பிடித்தது இப்போது அவளுக்குப் பிடிக்கவில்லை. தொடர்ந்து வீட்டிற்குள் இருப்பது சிறை என்பாள். எனக்கு வெளியே செல்வது பிடிப்பதில்லை. புத்தகம் வாசிக்கும் ஒவ்வொரு கணத்தையும் இழப்பது என்னைப் பதற வைக்கும். வெளியே போய் விடுதிகளிலே மற்றவரின் வாயைப் பார்ப்பது வாழ்வையே வீணாக்குவதாய்த் தோன்றும். மற்றைய மனிதர்கள் தாங்களே யாவும் அறிந்தவர்களாய்க் கதைக்கிறார்கள். அதில் ஓரளவு அறிவும், மீதிக் கற்பனையும், கணிசமான தற்பெருமையும் கலந்து கிடக்கும். மனித வாழ்க்கை சிறிய காலம் என்பது புரிந்தது. அதை வாய் பார்ப்பதில் அநியாயம் செய்யக் கூடாது எனத் தோன்றியது. உலகத்தில் அறிவதற்குக் கடல் போல அறிவு இருக்கிறது. அதை அறிய வேண்டும் என்கின்ற வெறி அடங்காது அடிமனதில் ஆர்ப்பரிக்கிறது. நான் இந்த வெறியை விட விரும்பவில்லை. என் வெறிக்கு எதிர் வெறி அவளிடம் வளர்வதையும் கவனிக்காமல் இருக்க முடியவில்லை.

அவளுக்குக் காலம் வெளியே கழிய வேண்டும். வரவர அதிக நேரம் அவள் வெளியே  செலவழிக்கிறாள். அதிலே அலாதி இன்பம் பெறுகிறாள். என்னையும் அப்படித்  தன்னோடு வருமாறு பலமுறை அழைத்திருக்கிறாள். என்னால் அப்படி நேரத்தை  வீணடிக்க முடியாது. நான் அவளுக்காக நேரம் செலவழிப்பது உண்டு. நல்ல  வெறியில் வந்து முதுகு தடவுகின்றவளை அள்ளி அணைத்து ஆசை தீர்ப்பதுண்டு.  அவள் கண் செருகி அனுபவிப்பாள். கண்ணை மூடிய வண்ணமே புத்திரன் புத்திரனென எனது பெயரை மனப்பாடம் செய்வாள். எனக்கும் அவளுக்கும் இருந்த

இறுக்கம் அப்படியே இருப்பதாய் நான் எண்ணியிருந்தேன். 'ஏட்டுச் சுரைக்காய் கறிக்குதவாது' அன்று வெள்ளிக்கிழமை. மாலைச் சாப்பாடு முடிய நான் ஒரு புத்தகத்தில் ஆழ்ந்து போய் இருந்தேன். மூனா வழமை போல வெளியே போனாள். பின்பு எதற்காகவோ திரும்பி வந்தாள்.

'புத்திரன்?'

'என்ன மூனா?'

'இப்பிடியே புத்தகத்தோட இருக்காமல் நீங்களும் வாங்கோ, போயிட்டு வருவம்' என்றாள்.

'இல்ல மூனா… நீ போயிட்டுவா. நான் அதுக்குள்ள இதைப் படிச்சு முடிச்சிடுவன்' என்றேன்.

'இப்பிடி இருந்தியளெண்டா மண்டையில தட்டீடும்'

'அந்த அளவுக்கு நான் ஒண்டும் படிக்கேல்லை'

'என்னையும் யோசியுங்க. தனியப் போயிருக்க அநாதை மாதிரி வெறுப்பாகவும் அலுப்பாகவும் இருக்குது புத்திரன்'

'அப்ப நீயும் இங்கேயே இரு'

'ம்… நீங்களும் குடிக்கிறியளா?'

'ஆகக் கூடினது இரண்டு கிளாஸ் வையின். அதோடை சரி'

'மணக்கக் காணுமா? அதிலும் பார்க்க குடிக்காமலே இருந்திடலாம். சும்மா பகிடி பண்ணாமல் குடிப்பியளா?' என்றாள்.

'இரண்டு கிளாஸ் எண்டு சொன்னனே… அதைக் குடிக்கிறன்' என்றேன்.

'ச்… நித்தியும் சுசானும் எப்பிடி எல்லாமோ இருக்கினம்?'

'அவங்களுக்கு அனுபவிக்க வேண்டிய வயசு. அவங்களோடை எங்களை ஒரு நாளும் ஒப்பிடக்கூடாது'

'எனக்கொண்டும் வயசு போகேல்லை. அப்படியான பிரமை என் மனதில இல்லை'

'ஏன் நான் உனக்குப் படுக்கையில ஏதாவது குறை வைச்சனா?'

'அது தனியவா வாழ்க்கை? நீங்கள் அப்பிடியா நினைச்சிருக்கிறியள்?'

'நான் அப்பிடிச் சொல்ல வரேல்லை'

'ம்… படுக்கையில உங்களை யார் குறையாகச் சொல்லேலும்?'

'அப்ப?'

'இப்பிடிச் சின்னச் சின்னச் சந்தோஷங்களை வேண்டாம் எண்டுறியள்'

'நான் வாசிக்கிறன்?'

'நெடுக என்ன வாசிப்பு வேண்டிக்கிடக்குது?'

''கற்றது கையளவு கல்லாதது உலகளவு' எண்டு தமிழில ஒரு பழமொழி இருக்குது'

'உண்மை. இதையே அனுபவிச்சது கையளவு அனுபவிக்காதது உலகளவு எண்டு மாத்திப் போட்டுச் சிந்திச்சுப் பாருங்க' என்றாள். அவள் கற்பனை நன்றாக இருந்தது.

'நல்லாக் கதைக்கிறா?' என்றேன்.

'ம்… நீங்கதானே சொல்லித்தாறியள். சரி உங்களோட கதைச்சுச் சரிவராது. நான் போயிட்டு வாறன்'

'காத.'

'காத.'

நான் செய்வது சரியா என்கின்ற வாதத்திற்கு இடம் இல்லாது அதன் பழுது புரிந்தது. புரிந்தும் என்னால் மாற முடியவில்லை. என்னால் சனக்கூட்டத்தின் மத்தியில் சஞ்சரிக்க முடிவதில்லை. அமைதியாகப் புத்தகத்தோடு காலம் தள்ளுவது சுகமாகப்படுகிறது. எனது விருப்பு அவளது விருப்பிற்குத் தடையானது மனதை வருத்தியது. இதை நான் திருத்திக் கொள்ள வேண்டும். அவளோடு சிறிது நேரமாவது செலவிட வேண்டுமென எண்ணிக் கொண்டேன்.

அன்று பன்னிரண்டு மணிவரையும் நான் காத்திருந்தும் மூனா வீட்டிற்கு வரவில்லை. அவள் என் புறக்கணிப்பை வேறு விதமாக எண்ணி இருப்பாளோ என்கின்ற நெருடல் மனதில். மறு வேளைகளில் அவள் இந்நேரம் வந்து விடுவாள். அதுதான் எங்கள் ஒப்பந்தம். இன்று ஏன் வரவில்லை? அது எனக்குப் புரியவில்லை. எதற்காக எங்கள் ஒப்பந்தத்தில் இருந்து அவள் பின்வாங்கினாள்? ஒரு மணிவரையும் நான் மேலும் பொறுமையோடு காத்திருந்தேன். அதன் பின்பு காத்திருக்க எனக்குப் பொறுமை இல்லை. நான் போய்ப் படுத்தேன். நான் நல்ல தூக்கத்தில். எங்கள் அறைக்குள் எலி விறாண்டுவது போலச் சத்தம் கேட்டது. விழித்துப் பார்த்த போது மூனா அலுமாரிக்குப் பக்கத்தில் நின்று உடுப்பு மாற்றினாள். நேரத்தைப் பார்த்தேன். மூன்றைக் கடந்து இருந்தது. எதற்காகப் பிந்தி வந்தாய் எனக் கேட்கவில்லை. அப்படிக் கேட்டால் அது இங்கே தப்பாய் முடியும். அது புரியாத மடையன் அல்ல நான். அவளுக்கு அதிக தாகமாய் இருந்திருக்க வேண்டும். சமையல் அறைக்குச் சென்று நீர் அருந்திவிட்டு வந்தாள். அதிகமாக விஸ்கி குடித்தால் இப்படித்தான் பின்பு நீர் குடிப்பாள்.

அவள் 'டீன'ரைத் தூக்கி உள்ளே புகுந்து என்னோடு அடைக்கலமானாள். நான் மெதுவாக அவள் முதுகில் கைவைத்தேன். பின்பு வருடினேன்.

'ச் வேண்டாம்' என்றாள்.

'அலுப்பாக இருக்கா?'

'ம்..'

'நிறையக் குடிச்சிட்டாய் போல இருக்குது'

'முஸ்பாத்தியாகக் கதைச்சுக் கதைச்சு நிறையக் குடிச்சாச்சுது'

'சரி அப்ப படு' என்றேன்.

நான் சாதுவாகத் தள்ளிப் படுத்துக் கொண்டேன். எனக்கு அவள் செய்கை சுருதி தவறியதாய்த் தோன்றியது. அவள் குடித்துவிட்டு வந்து அலுப்பென்று படுப்பது இதுதான் முதற் தடவை. வழமையாக அவளுக்குக் குடித்தாற்தான் குசியேறும். அந்தக் குசியில் என் மீது ஏறியிருந்து சவாரி செய்வாள். இன்று மாத்திரம் ஏன் சோர்ந்து போய்ப் படுத்தாள்?.

'சீ... எனக்கு என்ன வந்தது? ஏன் இப்படி எல்லாம் சிந்திக்கிறேன்? அற்ப விஷயத்திற்கே அறிவிலி போன்று சந்தேகமாக?' என்னைப் பற்றி எண்ண எனக்கே வெட்கமாய் இருந்தது. நான் அத்தோடு அந்த நினைவுகளை மூட்டை கட்டி வைத்து விட்டு நன்றாகக் குறட்டை விட்டுப் படுக்கத் தொடங்கினேன். ஒவ்வொரு மனிதனின் ஆசைகளும், எதிர்பார்ப்புகளும் விதியெனும் பெரும் சுழிக்குள் அகப்பட்டு, அது எங்கே இழுத்துச் செல்லப்படும் என்பதை யாரும் அறியார். நேற்றுச் சாதாரணமாய் இருந்தவள் இன்று புரியமுடியாத புதிராகி விடுகிறாள். அல்லது அந்த மாற்றம் என் கண்ணுக்குப் புலப்படாமல் ஏற்கனவே நடைபெற்றிருக்கிறது. பதுமையாகத் தோன்றும் பாவைகள் பத்திரகாளியாய் மாறுவதற்கு எத்தனை காலம் தேவைப்படுகிறது? பசுவென்னும் வேசத்திற்குப் பின்னால் நரிகள் பதுங்குவதை யார் அறிய முடிகிறது? மனித மாற்றங்கள் விந்தையானவையே. எந்த மனிதன் எப்படி மாறுவான் என்பது அதைவிட விந்தையானது. அது சாதாரண மனித அறிவுக்கு எட்டாதது. பெண்கள்... இன்னும் விசித்திரமானவர்கள். வேஷம் போட்டால் அவளை நம்புவர்கள் நாசமாக வேண்டியதுதான். வேஷம் போடுபவர் யார் என்பதை அறியும் ஞானம் எத்தனைபேரிடம் உள்ளது?

இயற்கை விசித்திரமானது. இயற்கையின் படைப்பான இந்த மனிதனும் விசித்திரமானவன். அதிலும் ஐரோப்பியர்கள் மேலும் விசித்திரமானவர்கள். எப்படி, எப்போது மாறுவார்கள் என்பது எனக்குப் பிடிபடவில்லை. என்னவளில் இப்போது ஏதோ மாற்றம் இருப்பதாய் எனக்குத் தோன்றியது. இது திடீரென வந்த விசித்திரமான மாற்றமா? சிறிது சிறிதாய் வேரூன்றிய மாற்றமா? வாய் திறந்து ஏன் என்று கேட்க முடியாத பண்பாடு என்னும் அவஸ்தை. உறவில் விரிசல் வரும் போது மௌனம் வழியாகாது. நான் முடிவு செய்து கொண்டாலும் தயக்கம் என்னைப் பிடித்து வைத்திருந்தது. என் தலை வெடிப்பதற்கு முன்பு அதற்கு விடைகாண வேண்டும்? எப்படி? புரியாத சங்கடம் தொடரலாயிற்று.

நோர்வேயில் பெண்களுக்கு இருக்கும் சுதந்திரம் எங்கள் நாடுகளைவிட அதிகமானது. கதைக்கப் போய் உறவு நிரந்தரப் பிரிவில் வந்தும் முடியலாம். அதற்காக சூத்தை விழுந்ததை வைத்துச் 'சோக்'காட்டிக் கொண்டு இருப்பதா? அடுத்தநாட் காலை நான் எழுவதற்கு முன்பே மூனா எழுந்துவிட்டாள். நல்லது இன்று காலைச் சாப்பாடு தயாராக இருக்குமென எண்ணிய வண்ணமே சமையல் அறைக்குப் போவதற்காய் கோலுக்குள் கால் வைத்தேன். மூனா யாருடனோ தொலைபேசியிற் கதைத்திருக்க வேண்டும். என்னைக் கண்டதும் அவசர அவசரமாய்ப் போனைத் துண்டித்தாள். அவள் போனைத் துண்டித்த விதமும், என்னைப் பார்த்த பார்வையும் ஏதோ குற்றம் செய்துவிட்டு மறைப்பதாய் எனக்குத் தோன்றியது.

குற்றம் செய்வதும், அதைப் பிடிப்பதும் அல்ல ஆணுக்கும் பெண்ணுக்குமான உறவு. நண்பர்களாய்ச் சல்லாபிக்கும் எங்கள் உறவில் என்றுமில்லாத குழப்பம். நான் மட்டும் குழம்புகிறேனா அல்லது அவளும் குழம்பிவிட்டாளா? விளங்காத எனது ஐயங்களை ஒதுக்கி வைத்துவிட்டு நான் அவளுக்குக் காலை வணக்கம் சொன்னேன்.

'குமோர்கன். நித்தி எங்க?'

'அவன் சாப்பிட்டிட்டுப் போயிட்டான்'

'நீ சாப்பிட்டியா?'

'இன்னும் இல்லை'

'அப்ப சாப்பிடுவமே?'

'ம்..'

அவளும் என்னுடன் சாப்பிட உட்கார்ந்தாள்.

'நல்லா இருக்குது'

'தாங்ஸ்'

'யாரிந்தக் காலமையில?'

'அதுவா?'

'ம்...?'

'அது யொனி எண்டு ஒரு பிரெண்ட்'

'யார் யொனி?'

'புதிசா... இப்ப பள்ளிக்கூடத்துக்கு வந்திருக்கிற வாத்தியார்? நேற்று பெப்பிலை முஸ்பாத்திதானே? அதுதான் கேட்டார்'

'ஓகே. நான் முகம் கழுவோணும்' கூறிய வண்ணம் எழுந்து கொண்டேன். மூனா மீது இருந்த சிறிதளவு நம்பிக்கையும் சற்று முன்பு தொலைந்து போயிற்று. அவளது வார்த்தைகள் பொய்யில் தோய்ந்த புழுவாகத் தோன்றின. எனது முகவோட்டத்தை அவள் படிப்பதை நான் விரும்பவில்லை. எழுந்து குளியல் அறைக்குள் சென்று பல்லைத் தீட்டிய வண்ணம் சிந்தனையில் மூழ்கினேன்.

இவள் என்ன செய்கிறாள் என்பதைக் கையும் களவுமாகப் பிடிக்க வேண்டும் என்கின்ற ஒரு மூர்க்கமான எண்ணம் எழுந்தது. அவள் அறியாது அதைக் கண்டு பிடிக்க வேண்டும். அவளை 'டிஸ்கோ' போகாதே, 'விஸ்கி' குடிக்காதே என்று சொல்ல முடியாது. அது இங்கே பெரிய குற்றமும் இல்லை. இங்கே பிறந்து வளர்ந்தவளுக்கு உள்ள அந்த உரிமையை மறுத்தால் நான் மடையனாகப் பார்க்கப்படுவேன். எனக்குக் குடுமி கட்டுவதை மட்டும் பொறுக்க முடியாது. நான் நினைப்பது போலத்தான் அது நடக்கிறதா? அல்லது என் மனது எல்லாவற்றையும் விபரீதமாய்க் கற்பனை பண்ணுகிறதா?

★

நித்தி இப்போது நிறையத் துணிந்து விட்டான். அவன் எங்கள் வீட்டில்தான் தொடர்ந்தும் வாழ்கிறான். மற்றும்படி தான் ஒரு குடும்பம் போலவே நடந்து கொள்கிறான். நான் நினைத்ததைவிடச் சுசான் நல்லவளாக இருந்தாள். குடிக்கிறாள். புகைக்கிறாள். அது இங்கே குற்றம் இல்லை. அதற்காகக் குடியே கதியெனக் கிடப்பவளாய்த் தெரியவில்லை.

அன்று நான் ஒரு புத்தகத்தில் மூழ்கிப்போய் இருக்கும் போதுதான் அவர்கள் இருவரும் வந்தார்கள். நான் அவர்கள் வந்ததைக் கவனிக்கவில்லை. இதை நித்தி கவனித்துவிட்டு,

'சொறி அப்பா?' என்றான்.

'ம்... என்ன?' என்றேன். எதற்காக அவன் மன்னிப்புக் கேட்டான் என்பது புரியவில்லை.

'சொறி எண்டன்?'

'என்னத்துக்கு?'

'நாங்கள் உங்களோடை கதைக்கோணும்?'

'இதுக்கெல்லாம் பெமிசன் கேக்கோணுமே? என்ன விஷயம் சொல்லு?'

'இல்லை நீங்கள் புத்தகம் வாசிச்சுக் கொண்டு இருந்தியள், அதுதான்'

'ம்..'

'என்னப்பா யோசிக்கிறியள்?'

'ஒண்டுமில்லை. நீ சொல்ல வந்ததைச் சொல்லு?'

'என்னையும் சுசானையும் பற்றி என்ன நினைக்கிறியள்?'

'நான் என்ன நினைக்கேலும். இரண்டு பேரும் சந்தோஷமாய் இருந்தாற் சரிதான்'

'நாங்கள் இரண்டு பேரும் அம்மாவிட்டையும், உங்களிட்டையும் ஒரு விஷயம் சொல்ல வேணும் எண்டு ஆசைப்படுகிறம்'

'சரி... அதைச் சொல்லு'

'அம்மா எங்கப்பா?'

'அவா எங்கையோ வெளிய போயிட்டா?'

'இப்ப அவா வீட்டிலை நிற்கிறது குறைவு போல இருக்குது?' அவனது அவதானிப்புச் சரி என்றாலும் அதை ஒத்துக் கொள்ள விரும்பாது,

'அது அவாவுடைய சுதந்திரம்' என்றேன்.

அவளின் நடத்தையில் எனக்கிருக்கும் சந்தேகத்தையே நான் இன்னும் உறுதி செய்யவில்லை. அதற்கிடையில் இவன் வேறு மோப்பம் பிடித்து விட்டானா? அவளின் ஏதோ ஒரு செயல் அவளைக் காட்டிக் கொடுக்கிறதென எண்ணிக் கொண்டேன்.

'அப்பா நாங்கள் சொல்ல வந்ததை உங்களிட்டை எண்டாலும் சொல்லுறம்' என்றான் நித்தி.

'ம்... சொல்லுங்க' என்றேன்.

'எனக்குச் சுசானை நிறையப் பிடிச்சிருக்குது'

'அது என்ன புதிசே? உனக்கும் இவனை நிறையப் பிடிச்சிருக்கா சுசான்?' என்று நான் அவளைப் பார்த்துக் கேட்டேன்.

'என்ன செய்யிறது... பழகியாச்சே புத்திரன்' என்று கூறிவிட்டு நித்தியைப் பார்த்து விஷமமாகச் சிரித்தாள். அவன் கோபமானான். பின்பு 'எனக்கு எல்லாமே நித்திதான்' என்றாள்.

'சந்தோஷம். அப்பிடித்தான் இருக்கோணும்' என்றேன்.

'எங்களுடைய சோடிப் பொருத்தம் பிடிச்சிருக்கா?' என்று நித்தி கேட்டான்.

நான் சிரித்தேன்.

'ஏன்னப்பா சிரிக்கிறியள்?'

‘எனக்குச் சோடி பிடிக்கிறதே முக்கியம்? உங்களுடைய மனம் பொருந்தி இருக்கோணும். அதுதான் முக்கியம்’ என்றேன்.

‘மனம் நல்லாப் பொருந்தி இருக்குது அப்பா’

‘அப்ப என்னத்துக்குச் சுத்தி வளைக்கிறியள்?’ என்றேன்.

‘நாங்க இரண்டு பேரும் கலியாணம் செய்யப் போகிறம்’

‘வாவ்… இதுக்கே இவ்வளவு தயங்கினியள்?’

கூறிய வண்ணம் நான் எழுந்து நித்தியைக் கட்டிப் பிடித்தேன். சுசானும் அதற்குள் சேர்ந்து கொண்டாள்.

‘என்னுடைய வாழ்த்துக்கள். இரண்டுபேரும் சந்தோஷமாய் இருக்கோணும்’ என்றேன்.

‘தாங்ஸ்’

இருவரும் ஒரே குரலிற் கூறினார்கள்.

‘இனி நான் உங்களுடைய பிரச்சனைக்குள் தலையிடத் தேவையில்லை. சொன்னாப் போல எப்ப கலியாணம் செய்யிறதா உத்தேசம்?’

‘வாற மாதம் இருபதாம் திகதி றியிஸ்ரேசன் செய்யலாம் எண்டு நினைக்கிறன். ஹோட்டலில அண்டைக்கு இரவுக்கு ஒரு பாட்டி வைக்கலாம். நிறையச் செலவழியுமே அப்பா?’

‘பருவாய் இல்லை… நான் அதுக்கு உதவி செய்யிறன்’

‘தாங்ஸ் அப்பா… தாங்ஸ்’

நித்தி தழுதழுத்தான்.

‘உனக்குத்தானே நான் சேர்க்கிறது எல்லாம். உன்னை விட்டால் வேறு யாருக்கடா இது?’ என்றேன்.

‘அப்பா நாங்கள் இன்னும் சுசான்ர தாய் தகப்பனோடை கதைக்கேல்லை’

‘சரி… முதல்ல அவையோடையும் கதையுங்க. கதைச்சுப் போட்டு எத்தினையாம் திகதி எண்டு சொல்லுங்க. மற்றைய ஏற்பாடுகளை நான் கவனிக்கிறன்’

அலுவல்கள் நடந்தன. நான் சில தமிழருக்கும் அழைப்பு விடுத்தேன். எல்லோரையும் அழைக்கவில்லை என்பதாகக் குறைகள் வந்தன. எல்லோரையும் அழைத்து என்னால் விடுதிக்குப் பணம் கட்ட முடியாது. கலியாண வீட்டிற்குத் தமிழ்ச் சாப்பாட்டைக் கொடுத்து, எங்கள் முறைப்படி செய்வதென்றால் எவ்வளவு ஆட்களையும் கூப்பிட்டிருக்கலாம். அவர்கள் முறைப்படி செய்து, விடுதியில் விருந்து கொடுப்பது காசைத் தண்ணியாக இறைக்கும் வேலை. இறைப்பதற்கு என்னிடம் வற்றாத கிணறு இல்லை. இவ்வளவும் செலவழிப்பதே பெரிய காரியம். இங்கு சில பெற்றோர்கள் பிள்ளைகளின் திருமணத்திற்கு விருந்து சாப்பிட மட்டுமே போவார்கள். எனது இறைப்பும் ஒத்துழைப்பும் நித்திக்கு ஏகப்பட்ட புழுகம் தந்தது. இப்போது அவன் அடிக்கடி ‘அப்பா அப்பா’ என வழிந்தான். சுசானும் நிறையவே அன்பொழுகினாள்.

திருமணம் இனிது நிறைவேறியது. கலியாணம் செய்த சில மாதங்களில் தாங்கள் வேறு வீடு பார்க்கப் போவதாக இருவரும் வந்து கேட்டார்கள். தாராளமாய்ப் பாருங்கள் என்றேன். அவர்கள் வீடோன்று பார்த்துத் தனியாகப் போன பின்புதான் நான் அதற்குச் சம்மதித்தது மடமையெனத் தோன்றியது. நித்தி வீட்டில் இருந்த பொழுது அவனோடு இடைக்கிடை சண்டை பிடித்தாலும் பொழுது கலகலவென்று சந்தோசமாய்ப் போனது. அவன் சென்ற பின்பு எல்லாமே சூனியமாய் உறைந்ததாய்ப் பிரமை தட்டிற்று. தனிமை என்னும் கடலில் தத்தளிக்கும் படகாக என் கணங்கள் முடிவின்றி நீண்டன.

யாருக்காகவும் நான் உயிர் வாழ்தல் இல்லையென்று ஆகிவிடாது. இளம் தம்பதிகள் தனிமையை விரும்புவது இயற்கையின் வேட்கை. எனது பரம்பரையின் எதிர்கால அஸ்திவாரம். உறவின் இறுக்கத்திற்குச் சிலவேளை சிறிது தூர இடைவெளி தேவைப்படுகிறது. நித்தியும் சுசானும் சந்தோஷத்தின் உச்சியில். சல்லாபத்தின் இடையறாத் திளைப்பில். என்மனதில் இனம்புரியாத அமைதி. அவர்கள் சந்தோஷம் என் சந்தோஷம் போன்றதான உணர்வு.

நித்தியின் கலியாணத்தோடு மூனா அதிகமாக வீட்டில் தங்கினாள். வெளியே போவது அரிதாகிற்று. நான் மூனா மறிவிட்டதாய் எண்ணிக்கொண்டேன்.

# 12

**ம**த்தியானச் சாப்பாட்டை முடித்துக் கொண்டு எனது எழுத்துப் பணியைத் தொடர ஆவலாய்க் காத்திருந்தேன். குமரேசன் இன்று எதுவும் பேசாது இருந்தான். அவன் அப்படி இருப்பது என்னிதயத்தைப் பிசைந்தது. ஏன் இவன் இன்று இப்படி இருக்கிறான்? என்னுள் எழுந்த கேள்விக்கு விடை காண முயன்றேன்.

'என்ன குமரேசா ஒரு மாதிரியாக இருக்கிறாய்?' என்றேன் அவனைப் பார்த்து.

'ஒண்டும் இல்லை' என்று சமாளித்தான்.

'இல்லை... ஏதோ இருக்குது. நீ மறைக்கிறாய்' என்றேன்.

'இல்லை. ஒண்டுமில்லை'

'சரி நான் அப்ப அறைக்குப் போறன்' என்றேன்.

'இரடா புத்திரன்' என்றான்.

'அப்ப என்னெண்டு சொல்லு?'

'இராத்திரி கனவு ஒண்டு கண்டன். எனக்கு ஏதோ பயமாக இருக்குது?'

'என்ன கனவடா?'

'எல்லாம் சரியாக ஞாபகம் இல்லை. என்னை ஆமிக்காரர் குளறக் குளற இழுத்துக் கொண்டு போற மாதிரி இருக்குது. நான் கெதியாச் செத்திடுவன் போல இருக்கடா' என்றான். அவன் பயந்திருப்பது போல இருந்தது.

'டேய் மடைத்தனமாய் யோசிக்காத. நாங்கள் எங்களுடைய நாட்டுப் பிரச்சனையில ஆமியைப் பார்த்துப், பார்த்து அது இப்பவும் கனவில வருகுது... இதுக்குப் போய் அலட்டிக் கொண்டு இருக்கிறாய்' என்றேன்.

'நாங்கள் எங்க பார்த்துப்... பார்த்து?' என்றான் அவன்.

'சரி பாக்காட்டியும், கேட்டுக் கேட்டு எண்டு வைச்சுக் கொள்ளுவம்' என்றேன்.

'எனக்கு என்னவோ நிம்மதி இல்லை' என்றான்.

'சும்மா அதைப் பற்றியே மண்டையைப் போட்டு உடைக்காமல் வேற ஏதாவது பிராக்குப் பார்' என்றேன்.

இராணுவத்தைக் கனவில் காண்பது சாவிற்குக் கூப்பிடுகிற மாதிரி என்று அம்மா சொல்வது எனக்கு ஞாபகம் வந்தது. இது நல்ல கனவு இல்லை. அப்படி ஏதாவது நடந்துவிடுமா? கனவுகள் பலிப்பதுண்டா? இங்கு இருக்கும் எனது ஒரு உயிர் நண்பனையும் இழந்து விடுவேனா? அவன் இறப்பைவிட என் இழப்பு எனக்குப் பெரிதாகிவிட்டது. மனிதனின் சுயநலத்தின் பின்புதான் மற்றைய நலன்கள் அணிவகுக்க முடியும்.

அவனுக்கு ஒன்றும் நேரக்கூடாதென நான் தன்னிச்சையாக கடவுளை வேண்டிக் கொண்டேன்.

'என்ன பேசாமல் இருக்கிறாய்?' அவன் கேட்டான்.
நான் கதையை மாற்ற விரும்பினேன். முடியவில்லை. அந்தக் கதையின் ஊடாகவே அவனுக்குத் தயிரியம் ஊட்ட விரும்பினேன்.

'உனக்குச் சாவை எண்ணிப் பயம் வந்திட்டுதா?'

'ஏன் உனக்கு இல்லையே?' என்றான் அவன்.

'தப்பேலாது எண்டு தெரியும்... பிறகு பயந்து என்ன செய்யிறது?' என்றேன்.

'ஆனா உனக்கும் அந்த நேரம் வரேக்க கலக்கம் வரும்' என்றான் அவன்.

'சிலது பிரியோசனம் இல்லையெண்டு தெரிஞ்சாலும் விட முடியிறது இல்லை. அதுமாதிரி இதுவும்'

‘எதை மாதிரியோ? சாவெண்டா யாருக்குத்தான் பயம் இல்லை?’ என்றான் அவன்.

‘இறப்பு எண்டுறது ஒவ்வொரு உயிருக்கும் நிச்சயம். அதுக்குப் பயப்பிடுகிறதிலை அர்த்தமில்லை. கமோன் குமரேசா’ என்றேன்.

‘சரி அதை விடு. அனுபவம் வரேக்க சில தத்துவங்கள் தொலைந்து போயிடும். உன்ர எழுத்து வேலை எவ்வளவுவில இருக்குது?’ என்றான்.

‘பருவாய் இல்லை. ஓரளவுக்கு எழுதீட்டன். ஆனா இன்னும் முடிக்கேல்லை. நான் போறத்துக்கிடையில அது வெளிவரோணும்’

‘நானும் அதைப் பார்க்கோணும்’

‘கட்டாயம்’

‘காய்’

‘காய்’

கூறிய வண்ணம் திரும்பிப் பார்த்தோம். ஒரு தாதி வந்து நின்றாள். அவள் பக்கத்திலே குமரேசனின் மகனும் மருமகளும் நின்றார்கள். அவர்கள் இங்கிருந்து தூரத்தில் வசிக்கிறார்கள். குறைந்தது ஆறு மணித்தியாலங்களாவது பிரயாணம் செய்து வந்திருக்க வேண்டும். அந்தளவில் அவர்கள் பாசத்தை நான் பராட்டினேன். நான் நினைவில் மூழ்க முடியவில்லை. அவர்களும் எங்களைப் பார்த்துக்,

‘காய்’ என்றார்கள்.

‘காய்’ நான் முதலிற் கதைத்தேன்.

‘அப்பாவின்ர நினைவு வந்திட்டுது போல?’

‘ம்..’ அவர்கள் தலையை ஆட்டினார்கள்.

‘சரி இருந்து கதையிங்க. நான் அறைக்குப் போகப் போறன்’

‘இல்லையங்கிள்... நீங்களும் இருங்க’ என்றனர்.

‘தாங்ஸ். ஆனா எனக்குக் கொஞ்ச வேலை இருக்குது’

‘ஓ கே. காத’

‘காத’

நான் எனது அறைக்கு வந்தேன். கணினி நித்திரை கொள்வதாய்த் தோன்றியது. அதை நித்திரையால் தட்டியெழுப்பினேன். அது இசையோடு உயிர் பெற்றுக் கொண்டது. அதற்கு இனி எழுத்து எழுத்தாகப் பாடம் கூற அது தனது ஆழ்மனதில் பதிந்து வைத்துக் கொள்ளும். நான் ஒவ்வொரு எழுத்தாக எனது நண்பனின் வாழ்க்கையை அதன் மனதில் பதியத் தொடங்கினேன்.

குமரேசனும் ஒரு வெள்ளைப் பெண்ணைப் பிடித்தான். கதரீனாவுடன் சில இரவுகளை இன்பமாகக் கழித்தான். கதரீனாவும் அந்த இன்பத்தை நன்கு அனுபவித்தாள். அவள் ஆணும் பெண்ணும் சேரும் போது ஏற்படும் இன்பம் மனித வாழ்க்கையின் தேவைகளில் ஒன்று என்கின்ற அடிப்படையோடு நின்று கொண்டாள். நாங்கள் அதை அப்படி எண்ணுவதில்லை. அதற்குத் தாம்பத்தியம் என்கிற பெயரைச் சூட்டி பெரிய பாரமாய்த் தலையில் தூக்கி வைத்துக் கொள்கிறோம். அதுவே கலாசாரக் கௌரவமாய் எங்களைக் கட்டிப் போடுகிறது. எங்களுக்குத் திருமண பந்தமும் உடல் உறவும் வேறல்ல. இங்கே கூடுதலும், கூடியபின் பிரிந்து போதலும் வாழ்க்கையின் ஒரு இயல்பான சம்பவம். அது அடிக்கடி அரங்குகள் மாறி மாறி நடைபெறும். நடந்ததை நினைவு வைத்துத் தொடர்பவர்கள் மிகவும் சிலரே. அது புறநடையே.

கதரீனா அதை ஒரு இன்பமான கூடலாய் எடுத்துக் கொண்டு குமரேசனை வெட்டி விட்டாள். அவள் ‘ஒஸ்லோ’ சென்ற இடத்தில் இன்னொருவருடன் தொடர்பு என்பதெல்லாம் வேறு கதை. குமரேசன் நிலைமைக்கு ஏற்பத் தன்னை மாற்றிக் கொள்பவன். குமரேசன் இங்கு வாழ்ந்த போதுதான் வினோதினி வந்தாள். ஒரு காலத்தில்

இலங்கையில் இருந்து அங்கொன்றும் இங்கொன்றுமாய்ப் படிப்பதற்குத் தமிழ் ஆட்கள் வந்தார்கள். கொலம்பஸ் அமரிக்காவைக் கண்டு பிடித்தது போல அரியாலையார் நோர்வேயைக் கண்டு பிடித்து, மாமன் மச்சானென வயது வித்தியாசம் இல்லாது, நான்கு கழுதை வயது தாண்டியும், படிப்பதாக வளம் தேடி இங்கு வந்து சேர்ந்தார்கள். பின்பு அதில் ஒரு பகுதி விசாவிற்காக அகதிகளாய் மாறியது வேறு ஒரு கதை. அகதிகளாக வந்தவர்களிடம் தாங்கள் படிக்க வந்தவர்கள் என்று 'பவுசு' காட்டியவர்கள் இன்னொரு பகுதி. வினோதினியும் படிப்பதற்காய் நோர்வேயைக் கண்டு பிடித்தவர்களில் ஒருத்தி.

தனது பாடசாலைக் காலங்களில் மனதையும், மாண்புமிகு கற்பையும் கண்ணகி போல அடைகாத்து வைத்திருந்தவளுக்கு, இங்கு வந்த பின்பு, இயற்கை ஏறிமிதிக்கும் அதே நேரத்தில் குமரேசனையும் கண்டுவிட, அந்தப் பிரமச்சாரியத்தைத் துறந்து குஞ்சு பொரிக்கும் தாம்பத்திய வாழ்வு நாடினாள்.
ஒரு கோடை காலத்தில்தான் வேலைக்காக வினோதினி இங்கு வந்தாள். அவள் வந்த காலத்திலும் இதே போல நாள் முழுவதும் சூரியனின் ஓயாத சர்வாதிகாரம். நித்திரை வராத நீண்ட இரவுகள். குமரேசன் உருபிலாதவன் கண்களாற் புண்பட்டுத் தனிமையில் புழுவாகத் துடித்த காலம். குமரேசன் அப்போது தொழிற்சாலையின் விடுதியில் தங்கி இருந்தான். அந்த விடுதியில் அப்பொழுது தங்கி இருந்த ஒரே ஒரு துருவத்து அகதித் தமிழன் என்கின்ற பெருமை அவனுக்கு. மற்றையவர்கள் 'பின்லாண்ட்' நாட்டைச் சார்ந்தவர்கள். ஒரு சிலர் சுவீடன் நாட்டைச் சார்ந்தவர்கள். இந்த இரு நாட்டவர்களுக்கும் நோர்வேக்கு வருவதற்கு விசாத் தேவையில்லை. 'ஸ்கண்டேநேவியன்' கூட்டமைப்புச் சட்டங்கள் அதற்கு வழிவகை செய்திருந்தன. இந்த விடுதியில் அபூர்வமாக ஒரு நோர்வே நாட்டைச் சார்ந்தவனும் வசித்து வந்தான். அவனுக்கு மீனையும் வொட்காவையும் தவிர எதைப் பற்றியும் கவலை இல்லை.

கோடைக்கால வேலைக்காக வந்த வினோதினிக்கும் அதே விடுதியில் ஒரு அறை கிடைத்தது. தமிழ்ப் பெண் வந்திருக்கிறாள் என்பதை அறிந்தவுடனேயே உருபிலாதவன் ஜக்கற்றையும் மாட்டிக்கொண்டு நிரந்தரமாக வடதுருவம் வந்துவிட்டான். அத்தால் காய்ந்த மாடு கம்பம் கொல்லையில் விழுந்தது போலக் குமரேசன் பாய்ந்தடித்து அவள் அறைக்குச் சென்றான். அவனைக் கண்ட வினோதினியும் தனது பத்தினித் தன்மையைக் காட்ட, அடங்கி ஒடுங்கி அளவுக்கு அதிகமாக வெட்கப்பட்டு, ஓர் இரு வசனத்தில் சம்பாசனையை முடிக்க, வாழ்க்கை வெறுத்தவனாய்க் குமரேசன் மனம் சோர்ந்து தனது அறைக்குத் தேரை இழந்து திருப்பிய இலங்கை வேந்தனைப் போல்த் திரும்பி வந்தான். அந்தக் கடுப்பில் குமரேசன் இனி இவளோடு வலியப் போய்க் கதைப்பது இல்லை என முடிவு கட்டிக் கொண்டான். அதன்படியே அந்த விரதத்தைக் காப்பாற்றினான்.

வினோதினியால் அதிக காலம் மன்மதனின் யுத்தத்தைத் தாங்க முடியவில்லை. இயற்கை தனது படைப்பின் நோக்கத்தை உணர்த்தலாயிற்று. மூன்றாம் நாள் தனது வெட்கத்தைக் கழற்றிப் பெட்டிக்குள் பௌத்திரமாகப் பூட்டி வைத்துவிட்டுக் குமரேசனின் கதவைத் தட்டிய போது குமரேசன் இது வினோதினியாக இருக்குமென எண்ணவில்லை. அவன் வேண்டா வெறுப்பாகத்தான் கதவைத் திறந்தான். அவளைக் கண்டதும் மின்சாரம் மின்னலாக மூளையில் தாக்கியதான அதிர்ச்சி அவனுக்கு.

'நான் எதிர் பார்க்கேல்லை... வாங்க... வாங்க உள்ள... வாங்க..' அவன் உளறினான்.
'வந்து?' அவள் நளினமாகக் கண்களில் ஆச்சரியம் காட்டினாள்.
'உள்ளுக்கு முதல்ல வாங்க'
அவள் உள்ளே வந்ததும் பாய்ந்து கதவைச் சாத்தினான். அவள் அவனைச் சங்கடமாய்ப் பார்த்தாள்.
'பயப்பிடாதேங்க... நான் ஒண்டும் உங்களைக் கடிச்சுத் தின்னமாட்டன்' என்றான்.
'நீங்கள் நரமாமிசம் சாப்பிடமாட்டியள் எண்டு எனக்குத் தெரியும். அதாலதான் நம்பி வந்திருக்கிறன். ஏன் நீங்க பிறகு என்ர றுமுக்கு வரேல்லை?' என்றாள் அவள்.
'உண்மையைச் சொல்லவோ பொய்யைச் சொல்லவோ?' என்றான் குமரேசன்.
'உண்மையே சொல்லுங்கோ. அதுதான் எப்பவும் நிலைக்கும்' என்றாள் அவள்.
'இல்லை... அண்டைக்கு நான் வந்து கதைக்கப் பெரிசாப் பவுசடிச்சியள் அதாலதான் வரேல்லை' என்றான் குமரேசன்.

‘ஐயோ அப்பிடி இல்லை’ என்று அவள் பதறினாள்.

‘அப்ப எப்பிடி?’ என்றான் குமரேசன்.

‘வெக்கத்திலதான் நான் அண்டைக்குக் கதைக்கேல்லை’ என்றாள் அவள்.

‘என்னை உங்களுக்குப் பிடிக்கேல்லையாக்கும் எண்டு நினைச்சிட்டன்’ என்றான் குமரேசன்.

‘நீங்க இனிமேலைக்கு அப்பிடி நினைக்காதீங்க’ என்றாள் அவள் அன்பொழுக.

‘ம்..’

‘இங்க வேற தமிழாக்கள் இருக்கினமே?’ என்று அவள் கேட்டாள்.

‘எனக்குப் போட்டியாவா?’

‘ஐயோ... நான் பெரிய அழகி... எனக்காகச் சுயம்வரம் நடக்கப் போறதா உங்களுக்கு நினைப்போ?’ என்றாள்.

‘உங்களுக்குச் சுயம்வரம் தேவையில்லையா?’ என்றான் குமரேசன்.

‘அந்தப் பேராசை எல்லாம் எனக்குக் கிடையாது. ஏக விரதனைத்தான் நான் பாப்பன். சீதா இரம விவாகம். அது சரி யாரும் இருக்கினமா?’ என்றாள் மீண்டும்.

‘இருக்கினம்.’

‘யார்?’

‘புத்திரன் எண்டு என்ர பிரண்ஸ் ஒருத்தர் இருக்கிறார். அவர் ஒரு ‘நொஸ்கிய’ கலியாணம் கட்டி இருக்கிறார்’

‘ஆ..’

அவள் முகத்தில் ஒரு வெறுப்பின் நெளிவை அவன் அவதானித்தான்.

‘ஏன் ‘நொஸ்கிய’ கலியாணம் கட்டுறது உங்களுக்குப் பிடிக்காதோ?’ என்றான்.

‘அப்பிடி எண்டில்லை’

‘அப்ப?’

‘எங்கடை அண்ணனும் ஒருத்தர் அப்பிடிதான் அவுஸ்ரேலியாவில கலியாணம் செய்தவர். பிறகு அவர் ஊர் பக்கமே வரேல்லை. அவற்றை தாய் தகப்பன் ஏக்கத்திலேயே செத்துப் போச்சினம்’ என்றாள்.

‘அவர் ஒருத்தர் செய்தா எல்லாரும் அப்பிடிச் செய்வினமா?’

‘நீங்க என்ன நினைக்கிறியள்?’

‘அடியட சக்கை எண்டானாம். நான் தான் முதல் கேள்வி கேட்டன்’

‘..’

‘என்ன பேசாமல் நிக்கிறியள்? பதில் சொல்லுங்க’ என்று குமரேசன் நெருக்கினான்.

‘ஏன் தேவையில்லாமல் வாழ்க்கையில பிரச்சனைப்படோணும். எங்கடை சனத்துக்குள்ளேயே கட்டிட்டா வீட்டிலும் பிரச்சனை இல்லை. எங்களுக்குள்ளேயும் பிரச்சனை இல்லை’

‘ம்... எங்களுக்குச் சாதி இருக்கே?’

‘அதைப்பற்றி இப்ப வேண்டாம். சரி இப்ப நீங்கள் என்ன நினைக்கிறியள் எண்டு சொல்லுங்க’ என்று அவள் கேட்டாள்.

‘அவையவையின்ர விருப்பம். அவன் விரும்பிச் செய்தா அது அவனளவிலை சரியானது. ஒவ்வொரு மனிசனுக்கும் அந்தச் சுதந்திரம் இருக்குது. ஒரு தனி மனிசன்ர சுதந்திரத்திலை மற்றைய மனிசர் தலையை நீட்டுகிறது அவ்வளவு நல்லாய் இல்லை எண்டு நினைக்கிறவன் நான். ஓகே, நான் உங்களுக்கு ரீகூடத் தராமல் என்னவெல்லாமோ கதைச்சுக் கொண்டு நிக்கிறன்’

‘அதைவிட இன்னொரு விஷயம்’

‘என்ன?’

‘அறிமுகமே இல்லாத நாங்கள் கொஞ்ச நேரத்துக்குள்ள என்ன கதையெல்லாம் கதைக்கிறம் பார்த்தியளா?’

குமரேசன் சிரித்தான். அவன் ஏன் சிரிக்கிறான் என்பது வினோதினிக்குப் புரியவில்லை. சிரிப்பின் இரகசியம் புரியாவிட்டால் தலை வெடித்துவிடும் என்கின்ற தவுனம் வினோதினியிடம். அவள் அவனை விட்டுக் கலைத்துக் கொண்டு சென்றாள். அவன் அந்த விடுதியில் இருந்த பொதுவான சமையல் அறைக்குச் சென்றான்.

'ஏன் சிரிக்கிறியள்?'

'ஒண்டுமில்லை'

'அப்பிடியெண்டா நீங்கள் பைத்தியமா? இல்லை நீங்கள் எதையோ மறைக்கிறியள்'

'ச்... என்னைப் பைத்தியம் ஆக்கீட்டீர். வேற வழியில்லாட்டிப் பழகத்தானே வேணும்?' என்றான் அவன்.

'அப்பிடி எண்டா?'

'இங்க இருக்கிற ஒரே ஒரு பிறியான தமிழன் நான் தானே?'

'ம்... உண்மைதான். 'ஆலையில்லா ஊருக்கு இலுப்பம் பூ சர்க்கரை' என்ன செய்யிறது ஆட்களோடை கதைக்காமல் அறைக்குள்ள அடைஞ்சு கிடக்கத் தலையே வெடிச்சிடும் போல இருக்குது'

குமரேசன் தேநீர் தயாரிக்கத் தொடங்க, வினோதினி பறித்துத் தான் தயாரித்தாள்.

'நீங்கள் ஆம்பிளையள்... சமைச்சு எல்லாம் கஸ்ரப்படுறதா?' என்றாள். குமரேசனுக்கு அவள் நையாண்டி பண்ணுகிறாளோ என்கின்ற சந்தேகம் முதலில்.

'நோர்வேயில வாழ்ந்து கொண்டும் மாற்றமே இல்லாமல் இருக்கிற யாழ்ப்பாணத்து வாரிசா நீங்கள்? தனிய வெளிக்கிட்டு வந்தா என்ன செய்யிறது? இதெல்லாம் செய்துதானே ஆகவேணும்?' என்றான் அவன்.

இப்படித் தொடங்கிய நட்பு மிக விரைவிலேயே இறுகியது. இயற்கை தன்பணி செய்யும். அனேகமாக இருவரும் யாராவது ஒருவரின் அறைக்கு உள்ளேயே அதிக காலம் செலவிட்டனர். படுக்கைக்கு மட்டுமே பிரிந்து சென்றனர். அப்படிப் பிரிவதைக்கூட அவர்களால் அதிக காலம் தாங்க முடியவில்லை. அந்தப்பிரிவுக்கு வினோதினி முடிவுகட்டினாள்.

★

அவள் மறுபடியும் பாடசாலைக்குச் செல்வதற்கு இருபது நாட்கள் இருந்தன. அன்று வழமை போல இருவரும் கதைத்துக் கொண்டு இருக்கும் போது வினோதினி அந்தக் கதையைத் தொடக்கினாள்.

வினோதினி எப்போதும் மனந் திறந்து பேசுவாள். அவள் உள்ளம் அழுக்கற்றதாயும், வாய் ஓட்டையாகவும் இருந்தது. அங்கே களவுக்கு இடம் இல்லை. எந்த உண்மையையும் மறைக்காத குழந்தை போலக் கக்கிவிடுவாள். இந்தப் பண்புகள்தான் குமரேசனை அதிகம் மயக்கியது. அவன் அவளிடம் மண்டியிட்டான்.

சரி, நான் விட்ட இடத்திற்கு மீண்டும் வருகிறேன்.

'குமரேசன்?' என்றாள் அவள்.

'என்ன?'

'நான் ஒரு கனவு கண்டன்'

'மண்டைக்குள்ள மூளை இருந்தாற் கனவு வரத்தான் செய்யும்? அதிலை என்ன புதுமை?' என்றான்.

'உங்கடை அறுவைய விட்டிட்டு நான் சொல்லுறதைக் கேக்கிறியளா?' என்றாள் அவள்.

'சரி சொல்லும்'

'நானும் நீங்களும் ஊரில நிக்கிறம். இரண்டு பேரும் விரும்பி இருக்கிறம். அதுக்கு இரண்டு வீட்டிலையும் சம்மதிக்கேல்ல. நீங்கள் உங்கடை உடுப்புப் பையோட 'ஏசியா' சைக்கிளில எங்கடை ஒழுங்கேக்க வந்து

நிக்கிறியள். நானும் என்ர உடுப்பு, நகையெல்லாம் எடுத்துக் கொண்டு களவு களவாப் பயந்து பயந்து உங்களைத் தேடி வாறன். உங்கடை சைக்கிளைக் கண்டோண்ணை ஏகப்பட்ட சந்தோஷம் எனக்கு. ஓடிவந்து சைக்கிளில ஏறி இருக்கிறன். நீங்களும் சந்தோஷமா 'ஆகாயப் பந்தலிலே பொன்னுஞ்சல் ஆடுதம்மா' எண்டு பாடிக்கொண்டு சைக்கிளை மிதிக்கிறியள். நாங்கள் ஒழுங்கைக்கு வெளிய வரேக்கை ஒழுங்கையை மறைச்சுக் கொண்டு ஊரே நிக்குது. பயந்து போய் நாங்கள் அப்பிடியே அசையாமல் நிண்டிட்டம். என்னை அப்பா இழுத்து நிலத்திலை தள்ளிக் காலாலை உதைக்கிறார். நான் ஐயோ ஐயோ எண்டு கத்த முழிப்பு வந்திட்டுது' என்று அவள் தன் கனவைச் சொல்லி முடித்தாள்.

'முழிப்பு வந்திருக்காட்டி கலியானமே செய்து வைச்சிருப்பார். விட்டா நீ ஒரு சினிமாப்படத்துக்கே கதையெழுதுவீர் போல இருக்குது. என்ன நல்ல காலம் எண்டா இஞ்ச வந்து கொப்பர் உதைக்க மாட்டார். நீர் பயப்பிடத் தேவையில்லை'

'பகிடிய விடுங்க'

'ஏய்... அப்ப நீ கனவை சீரியஸ்சா எடுத்திட்டியா?'

'..'

'என்ன பேசாமல் இருக்கிறா?'

'நான் ஒண்டு கேட்டா சீரியஸ்சாப் பதில் சொல்லுவியளா?'

'நீ கேக்கிறதைப் பொறுத்தது அது' என்றான் குமரேசன்.

'இல்லை... இது முக்கியம்'

'சரி கேள்'

'உங்களுக்கு என்னைப் பிடிச்சிருக்கா?'

'பிடிக்காமலா இவ்வளவு பழகிறன்?'

'நான் அந்த அர்த்தத்தில கேக்கேல்லை'

'அப்ப?'

'யூ லவ் மீ ? ம்....?'

'ம்..'

'வில் யூ மரி மீ?'

'என்ன இங்கிலிசுக்குத் தாவிட்டா?'

'நான் கேக்கிறதுக்குப் பதில் சொல்லுங்க. என்னைப் பிடிச்சிருக்கா?'

'ம்... பிடிச்சிருக்கு. எத்தினை தரம் சொல்ல வேணும்? உன்னை ஏனோ மொத்தமாய்ப் பிடிச்சிருக்குது. வண்டில் சில்லிலை அகப்பட்டு நெளிஞ்ச பால்ப்பேணி மாதிரி முகம் இருந்தும் எனக்கு ஓகே. வயசும் பருவாய் இல்லை. என்னைப் பொறுத்தவரையில எல்லாம் ஓகேதான்' என்றான் குமரேசன்.

'என்ர முகம் நெளிஞ்ச பால்ப்பேணியாட்டமா இருக்குது?' அவள் செல்லமாகக் கோபித்துக் கொண்டாள்.

'இந்த கோபத்தைப் பார்க்கோணும் எண்டுதான் அப்பிடிச் சொன்னன்.'

'அப்ப என்னைக் கலியாணம் கட்டுவியளா?'

'அப்பா அம்மா என்ன சொல்லுவினமோ தெரியாது?' என்றான் குமரேசன்.

'குமரேசன்...?' அவள் அவனிடம் இருந்து அந்தப் பதிலை எதிர்பார்க்கவில்லை.

'நீதானே யாழ்ப்பாண டயலக் அடிக்கிறா. அதுதான் சும்மா. ஆனா வேற ஒரு பிரச்சனை இருக்கு?' என்றான் பின்பு.

'என்ன?'

'தங்கச்சிமாருக்குக் கலியாணம் முடியும்வரையும் நான் கலியாணம் செய்ய ஏலாது'

'நான் அதுவரைக்கும் காத்திருக்கத் தயார்' என்றாள் அவள்.

'அப்ப என்ன பிரச்சனை?' என்றான் குமரேசன்.

'நீங்க எனக்குப் புறோமிஸ் பண்ணோணும்'

'பிறமிஸ் பண்ணுறதை விட மனச்சாட்சிதானே உண்மையை உறுத்தும் சாட்சி'

'நான் இல்லை எண்டு சொல்லேல்லை. அதோட புறோமிஸ்சும் பண்ணித் தாறியள்'

'ஓ கே புறோமிஸ்'

★

இயற்கை தனது விருத்தியை எண்ணி உயிரினங்களில் ஏற்றி வைத்திருக்கும் வேதனையான இன்பம் காமம். சிற்றின்பமாய்த் தணியும் அந்த வேதனையான இன்பம் மீண்டும் மீண்டும் ஏக்கமாய் வீறு கொண்டு எழுந்து நிற்கும். இயற்கையின் பிடியில் இருந்து மனித ஜென்மங்கள் தப்பிவிட முடிவதில்லை. துருவத்தில் வாழும் இந்த ஆணுக்கும் பெண்ணுக்கும் அது விதி விலக்கல்ல.

வினோதினி வாய் விட்டுச் சொல்ல முடியாத ஆசைகளோடு படுத்திருந்தாள். யாழ்ப்பாணத்துப் பெண்ணானவள் காமம் கிளர்ந்தாலும் கலாச்சாரம் பேணவேண்டும் என்று இரத்தத்தில் ஊறிய எழுதப்படாத சட்டம் அவளிடம். அந்த எண்ணம் இளமையிடமும், இயற்கையிடமும் தோற்பதை உணரும் பரிதாபம். பரிதவிப்பு.

பெண்ணை மாத்திரம் இயற்கையும், இளமையும் சீண்டுவதில்லை. குமரேசன் புரண்டு படுக்க முயற்சித்தான். வினோதினி வேண்டும் என்றது அவன் உள்ளமும் உடலும். எனக்கு நீ உனக்கு நான் என்கின்ற ஒப்பந்தம் செய்து கொண்ட போது இங்கே பிரிந்து கிடப்பதற்கு என்ன தேவை என்கின்ற எண்ணம் அவன் மனதில் எழுந்தது. கூடவேண்டும். கூடிக் காமம் தீர்க்க வேண்டும். தனிமையில் வாடிய கணங்கள் போதும் என்று அவன் முடிவு செய்து கொண்டான்.

சட்டை ஒன்றை மேலுக்குப் போர்த்திய வண்ணம் வினோதினியின் அறைக்கு முன்னால் குமரேசன் நின்றான். பின்பு மெதுவாக அவளது கதவைத் தட்டினான். உள்ளே ஆசைகளோடு படுத்திருந்த வினோதினிக்கு அதையும் மீறி உள்ளம் திடுக்குற்றது. தனது கதவை இந்த நேரம் யார் தட்ட முடியும் என்பது அவளுக்குத் தெரியும் என்றாலும் அவள் ஏமாளியாக இருக்க விரும்பவில்லை.

'யாரது?'

'நான்தான்.'

குமரேசனின் குரல் பதிலாக வந்தது. ஆச்சரியப்படுபவளாய் வதனத்தை வைத்துக் கொண்டு கதவைத் திறந்தாள்.

'என்ன குமரேசன்... என்ன நடந்திச்சுது?' என்றாள் புரியாதவள் போல.

'ம்... ஆடும் மாடும் அம்மணமாய் நடந்திச்சுது. நான் உள்ளுக்கு வரலாமோ?' என்றான் அவன்.

'கேட்டா உள்ளுக்கு வரோணும்?'

உள்ளே போகும் போது கதவைச் சாத்திவிட்டுச் சென்றான். அது தானாகத் தாளிட்டுக் கொள்ளும் கதவு.
அவள் வதனத்தில் மோகம். செய்கையில் தடுமாற்றம்.

'இருங்க' என்றாள்.

அவள் தனது இரவு உடுப்பை தன்னிச்சையாகச் சரி செய்து கொண்டாள். குமரேசனுக்கு அதைப் பார்க்கச் சிரிப்பு வந்து விட்டது.

'ஏன் இப்ப சிரிக்கிறியள்?' என்றாள் கோவமாக.

'இண்டைக்குத்தானே எனக்கு நீ, உனக்கு நான் எண்டு சத்தியம் வாங்கினாய். இப்ப யாரோ அன்னியனைக் கண்ட மாதிரி நடுங்கிறா. கொய்யகத்தை அவசரமாக இழுத்து விடுகிறாய்' என்றான் அவன் முழு உரிமையோடு.

'இல்ல. அதில்லை'

'அப்ப, முதல்லை கிட்ட வந்து எனக்குப் பக்கத்தில இரு பாப்பம்'

'குமரேசன்' அவள் தயங்கிய வண்ணம் அவனைப் பார்த்து விழித்தாள்.

‘என்ன?’

‘இது சரியா?’

‘என்ன நம்புறா எல்லே?’

‘ம்..’

‘அது உண்மையெண்டா எனக்குப் பக்கத்தில வந்திரு. இங்க இது சரிதான்’

‘சத்தியம் பண்ணினது உண்மைதான். ஆனாத் தாலி கட்டினாப் பிறகுதான் எல்லாம்’ என்றாள் அவள்.

‘எல்லாம் எண்டா?’

‘சும்மா என்ர வாயக் கிண்டாதேங்க’

‘அப்ப காலமை பண்ணின சத்தியத்திலை உனக்கு நம்பிக்கை இல்லையா?’

‘இருக்குது’

‘அப்ப கிட்டவா’

‘குமரேசா?’

குமரேசன் அவளை அண்டி இருந்தான். அவள் அசையாது அப்படியே இருந்தாள். அவள் இரு மொழி பேசினாள். அவள் வாய் மறுத்தது. மனதும் உடலும் எடுத்துக்கொள் என்று அவனை அழைத்தது.

‘இதால ஏதாவது இசகு பிசகு ஆகிட்டா?’ என்றாள் தன் கலாச்சார எல்லையை மீறி.

‘என்ன சினிமாப் படத்தில காட்டுற மாதிரியே?’

‘அப்பிடியும் நடக்கலாம்தானே?’

‘நாளைக்கே அதுக்கு ஒழுங்கு செய்யலாம்’

கூறிய வண்ணம் அவன் அவள் கையை எடுத்துத் தனது கைமேல் வைத்து மெதுவாகத் தடவினான்.

‘இது பிழைதானே?’ என்றாள் அவள்.

‘அது இருக்கும் இடத்தையும், கிடைக்கும் சந்தர்ப்பத்தையும் பொறுத்தது. இஞ்சை யாரும் இதைப் பிழையா நினைக்கிறேல்லை. உனக்கு இதை நான் சொல்லத் தேவையில்லை. உங்கட ஸ்கூல்லிலேயே பார்த்திருப்பாய்’ என்றான் குமரேசன்.

‘அது அவங்களுக்குச் சரி. நாங்கள் இஞ்சத்தே ஆட்களில்லை. எங்கடை கலாச்சாரம் வேறை’

‘நீ நேரத்தை வேஸ்ற் பண்ணுறா வினோதினி’

காமத்தில் பொறுமை கரைந்து போக, அவன் தனது மன்மதச் சேட்டைகளை மேற்கொண்டு தொடர்ந்தான். அவள் அதைத் தடுக்காது அவனைப் பார்த்துக் கொண்டு இருந்தாள். இயற்கை, இளமை, தனிமை வெல்ல முடியாத அந்தக் கணங்களில் தோற்றுப்போன அவர்களும், அவர்கள் காவி வந்ததும்.

★

அடுத்த நாள் விடிந்த பின்பும் குமரேசன் மெத்தையை விட்டு இறங்க விரும்பாது அப்படியே இன்ப நினைவுகளில் கிடந்தான். அவனோடு அவளும் அப்படியே. சிற்றின்பம் அவர்களை மேலும் இறுக்கிப் பேரின்பத்திற்கான திறவுகோலைக் கொடுத்ததா? பின்பு வந்த நாட்களில் இரு முறை குமரேசன் அவளை எங்கள் வீட்டிற்கும் கூட்டி வந்தான். மூனா அவளுக்குத் தனது வித்தைகளைக் காட்டி அறுப்பாள்.

சில காலத்தில் பாடசாலை தொடங்க வினோதினி அங்கே செல்ல வேண்டியதாகிவிட்டது. அனுபவித்த குமரேசனால் அதிக காலம் தனிமையைத் தாக்குப்பிடிக்க முடியவில்லை. அவளிடம் தேடி ஓடியவன் அப்படியே அங்கேயே அடைக்கலமாகி விட்டான். இருவரும் அனேக காலம் ஒன்றாக இருந்தார்கள். தங்கைகளின் கலியாணத்திற்காய் மகப்பேற்றைத் தள்ளிக் கொண்டே வந்தார்கள். வினோதினிக்குப் பரந்த மனது. குமரேசனுடன் சேர்ந்து அவன் வீட்டுப் பொறுப்புக்களை மிகவிரைவிலேயே முடித்து வைத்தாள். அதற்குப் பின்புதான் சட்டரீதியான பதிவுத் திருமணம்

செய்து கொண்டு பிள்ளை ஒன்றைப் பெற்றார்கள். 'இரமேஸ்' அவனுடைய பெயர். மழலை அழகுதான். அதுவும் அருமையாக ஒன்றாய் இருந்துவிட்டால் தேய்வீகக் குழந்தைதான். வினோதினி குடும்ப வாழ்க்கை என்று வந்த போது இந்த நாட்டுத் தாம்பத்திய வாழ்வை வரித்துக் கொண்டதான தோற்றம். அதை ஈடுசெய்வது போலத் தமிழ்க் கலாச்சாரத்தில் கொள்ளைப் பிரியம் வைத்திருந்தாள். அந்தப்பிரியம் அவளை மகன் விஷயத்தில் பைத்தியமாக்கியது. அவன் இங்கே வளர்ந்ததால் அவனது செயற்பாடுகள் இங்கு உள்ளவர்கள் போன்றே இருந்தது. வினோதினியோ தாங்கள் தவறியதையும் சேர்த்து நீ தமிழன் போல் வாழ வேண்டும் என்கின்ற விட்டுக் கொடுப்பில்லாத பிடிவாதம் காட்டினாள்.

ஒருத்தரால் மற்றவருக்கு விட்டுக் கொடுக்க முடியவில்லை. அவள் தமிழ்த் தாய் போலப் பாசத்தையும், திணிப்பையும் ஊட்டி வளர்த்தாள். அவன் உலகம் வேறு ஆகிற்று. எல்லாவற்றையும் எடுத்தெறிந்து நடந்தான். கடைசியில் தாய் தகப்பனை விட்டுப் பிரிந்தே சென்றான். அதையடுத்து வினோதினி மனநோயினால் பாதிக்கப்பட்டாள். பின்பு உலகத்தில் உள்ள நோயெல்லாம் அவளிடம் உறவு பூண்டன. இந்த உலக வாழ்வில் இருந்து விடுதலைப் பெறுவதே அவளது நோய்களுக்கும் முற்றுப்புள்ளியாகியது. அவள் தனது உத்தரிப்பிற்கும் அத்தோடு முடிவு கண்டாள்.

இளமையில் விட்ட பிழைகளின் குற்ற உணர்வு அவனை இன்று வாட்டுகிறது. அத்தால் இவ்வளவு தூரத்தில் அப்பா இருந்தும் இங்கு ஓடி வந்திருக்கிறான். பிராயச்சித்தம் கிடைக்கும் என்கின்ற நம்பிக்கையாக இருக்கலாம். ஒவ்வொரு பரம்பரையின் உலகமும் ஒவ்வொரு திணிசாக இருக்கிறது. அந்த இடைவெளிக்குள் பிழையானது சரியாகவும் சரியானது பிழையாகவும் மாற்றங்கள் நிகழ்கின்றன. அது அவனவன் வாழும் சமுகத்தைப் பொறுத்ததாக அமைகிறது.
எனக்குத் தூக்கம் வருவது போல இருந்ததால் கணினியை முதலிற் தூங்கச் செய்துவிட்டு நானும் படுக்கையை நோக்கி விரைந்தேன்.

# 13

புள்ளிகளுக்கு இடையேயான அசைவுகளின் கணிப்பில் உருவாகும் காலம் என்னும் காலாவதியான கணங்களில், கற்கள் மலராகவும் மலர்கள் கற்களாகவும் மாறிவிடுவதுண்டு. என்றும் இனியவள் என்றிருந்த மூனா. அவள் என் இதயத்தை ஜென்மங்களுக்கும் கவர்ந்தவள். ஈற்றில் ஜென்மங்கள் வருடங்களாகச் சுருங்க, என் இதயத்தைக் கல்லாக்கியவளும் மூனாதான். என் வாழ்க்கை எனது கலாச்சார வேரில் இருந்து தடம் மாறியது. மூனா என்கின்ற பெண்ணால் அது திசை மாறியது. நான் ஒரு தமிழ்ப் பெண்ணைத் திருமணம் செய்திருந்தால், எனது வாழ்வு வேறு திசையில் சென்றிருக்கலாம் என்கின்ற ஏக்கம் சாகாவரம் பெற்று மனதின் ஒரு மூலையில்.

என் அடிமனசில் தமிழன் என்கின்ற வெறி இருந்தாலும் நடைமுறையில் நான் தமிழனாய் வாழ முடியாது போய்விட்டது. என் வழியில் மூனா குறுக்கிட்டாள். அல்லது மூனாவின் வாழ்வில் நான் நுழைந்தேன். அழியும் என்னை நான் காப்பாற்ற எடுத்த முயற்சிகள் தோல்வியைச் சந்தித்தன. கிழடெய்திய பின்பும் தமிழுக்காக அங்கலாயிக்கிறேன். நானும் மூனாவும் தமிழராய் வாழ முடியாது இருந்தாலும் ஓர் நோர்வேஜிய கிறிஸ்தவராய் என்றாலும் வாழ்ந்து இருக்கலாம். அதுகூட எங்களால் முடியாது போய்விட்டது. மூனாவின் கைங்கரியம் அதையும் தகர்த்தது.

மூனா வித்தியாசமானவள். அவள் ஆசைப்பட்டால் அனுபவித்து விடவேண்டும் என்கின்ற தத்துவத்தை வேதவாக்காய் எடுத்துக் கொள்பவள். குடும்பம் என்பது நித்தி திருமணம் செய்த பின்பு அவளுக்குத் தடுப்புச் சுவராய்த் தோன்றவில்லை. உறவு என்பதைப் பாம்புச் செட்டையை கழற்றுவது போல பலரும் செய்வதைப் பார்த்தவள். இறுதியில் தானும் அப்படி மாறிவிட்டாள். நான் தப்பாய்க் கூறுகிறேன். அவள் அப்படி நடப்பதுதான் இந்நாட்டு யதார்த்தம். என்னால் எம் நாட்டு யதார்த்தத்தைக் கைவிட முடியவில்லை. ஐந்தில் பழகிய பழக்கமே ஐம்பது தாண்டியும். இன்றும் தேர்முட்டியை நினைத்தால் சொர்கத்தை நினைப்பதாய் ஒருவித ஆனந்தம். அது மனிதனே கடவுளையும் படைத்து கடவுள் பெயரால் தனக்கும் படைத்துக் கொண்ட சொர்கம். புழுங்கும் வெயிற் காலத்திலே தேர்முட்டியில் ஏறியிருக்க இலுப்பையையும், மருதையும், ஆலையும், அரசையும் தழுவி வரும் காற்றின்

சுகத்திற்கு ஈடு என்ன என்பது எனக்கு இன்னும் புரியவில்லை. இளமையிற் கிடைத்த அந்த இன்பங்கள் ஒருவழிப் பாதை போல. எமது நாடு பூவுலக சொர்க்கம். அந்தச் சொர்க்கம் நரகமாகியது சோகமான எங்கள் நாட்டின் முடிவு.

வாழ்க்கையில் எப்போதும் வசந்தம் வீசுவதல்ல. எதிர்பாராத நேரத்தில் புயல்கள் வீசும். உயிர் என்ற உறவுகள் முறிந்து அதுவே எதிரியாகும். வேதனையும் சோகமும் வாழ்வின் மறுபக்கம் காட்டும். மனதைக் குழப்பும். செப்பனிடும். மூனாவும் நானும் பிரிய வேண்டிய காலம் வந்தது. ஆரம்பத்தில் யேசுவின் சீடனாய் என்னோடு வாழ்ந்து வந்தாள். பின்பு சாத்தானின் சேவகியாகத் திரிபுபட்டுப் பிரிந்து போனாள்.
நித்தியின் கலியாணம் நிச்சயித்த நாள் தொடக்கம் வீட்டில் இருந்தாள். அப்போது எங்களுக்குள் இந்தச் சம்பாசனை நடந்தது.

'என்ன... இப்ப குடிக்க போறேல்லையே?' என்று நான் கேட்டேன்.

'இல்லை அதுக்குப் பதிலாக உங்களைக் குடிக்கிறன்' என்றாள். தொடர்ந்து என்னை அணைத்துக் கொண்டாள். அந்தப் பிடி இரும்புப் பிடியாய் இருந்தது. நானும் அதை அவள் என்மீது கொண்ட அன்பாய் எண்ணித் திளைத்தேன். அவள் அதீதம் எனக்கு அப்போது புரியவில்லை. அன்று எல்லாவற்றையும் மறந்து இன்பத்தில் திளைத்தேன். நித்தியின் கலியாணம் முடியும் வரையும் இடையறாத இன்பத்தில் திளைத்தோம். பெண் மனதைப் புரிய முடியாதெனப் பேதைமையால் பேசாது விட்டேன். பேசி இருந்தாலும் எதுவும் செய்திருக்க முடியாது. எடுத்த முடிவில் எந்த மாற்றமும் வந்திருக்க முடியாது. பிரிவது இன்னும் விரைவாக நடந்திருக்கும். நித்தியின் கலியாணவீடு முடிவடைந்து அடுத்த கிழமை மூனா பொப்பிற்குச் சென்றாள். மூனா பொப்பிற்கு மாத்திரம் சென்றால் அதை யாரும் கேட்க முடியாது. அது அவளுடைய சுதந்திரம். அவள் பொப்பிற்கு மாத்திரம்தான் செல்கிறாளா என்பதில் எனக்குச் சந்தேகம். அன்று அவள் பொப்பில் இருந்து வந்த போது அதிகாலை நான்கு மணி இருக்கும். நான் வேண்டும் என்றே கையைப் போட்டேன். வேண்டாமென அவளிடம் இருந்து பதில் வந்தது.

'எனக்கு வேணும்' என்று தனகினேன்.

'வேண்டாம். வேண்டாம்' அவள் உறுக்கிக் கத்தவும் நான் விலகிக் கொண்டேன். தொடர்ந்தும் பக்கத்தில் படுத்திருந்தபடியே,

'ஏன் வேண்டாம்' என்றேன்.

'வேண்டாம் எண்டா விடுங்களேன்' என்றாள் அசண்டையாக.

எனக்கு ஆத்திரம் ஆத்திரமாய் வந்தது. எதையும் ஆதாரம் இல்லாது கதைக்கக் கூடாது. நான் ஆதாரங்களைச் சேர்த்தாக வேண்டும் என்று முடிவெடுத்தேன்.

அடுத்த வெள்ளி மூனா பொப்பிற்குப் புறப்பட்டாள். அவள் போய்க் குடிப்பதைத்தான் முதலில் செய்வாள். அதைப் பார்ப்பதற்கு இப்போது போகத் தேவையில்லை. முதலிற் குடித்து வெறியேறிய பின்புதான் வீட்டிற்குச் செல்வார்கள். இவள் அனேகமாக அப்படி ஏதாவது செய்வது என்றால் எப்போது புறப்படுவாளென எனக்கு ஒரு ஊகம் இருந்தது. நான் வீட்டிலேயே இருந்தேன். மனது அமைதி இழந்து தவித்தது. பிழையெது சரியெது என்கின்ற போராட்டம். இருவரும் செய்வது தப்பாய்ச் சில கணங்கள் தோன்றின. பின்பு நம்பிக்கைத் துரோகம் செய்பவள் அவள்தானே என்பதாக மனது கறுவியது. விருப்பம் இல்லை என்றால் நேரே சொல்ல வேண்டும். இரட்டையாட்டம் ஆடக் கூடாது. பிரிந்த பின்பு நீ என்ன கொட்டமடித்தாலும் அது தப்பில்லை. இந்நாட்டு வாழ்க்கை வித்தியாசமாய்ச் சிந்திக்க வைக்கிறது.

எதை வைத்து அவள்மேற் குற்றம் சொல்கிறாய்? ஊகங்கள் எல்லாம் உண்மையாகிவிடுமா? நான் இப்படி எண்ணுவது தப்பல்லவா? கீழ் நிலை அல்லவா? அவள் பிடிபடும் வரையும் நிரபராதி. நிரபராதியை அவமதிக்கலாமா? தப்பென நிரூபித்த பின்புதானே குற்றம்சாட்ட முடியும். அதற்கு முன்பே குற்றம் சாட்டுவது அநீதியல்லவா? மனம் தன்பாட்டில் உளரத் தொடங்கியது. நான் அதை என் கட்டுப்பாட்டிற் கொண்டுவர முயற்சித்தேன். அது என் வயப்பட மறுத்தது. இதுதான் போராட்டம். மனிதன் மனதைத் தன் வயப்படுத்துவதுதான் பெரும் போராட்டம். மகா இம்சையான ஓயாத போராட்டம். வெற்றி என்று இறுமாந்து இருக்கும் போது தலைகுப்புற விழவேண்டி வரும் போராட்டம். இந்த மனதிற்குக் கடிவாளம் போட, தன் கட்டுப்பாட்டில் வைத்திருக்க ஆயிரம் முறைகளை முன்னோர்

சொல்லித் தந்தார்கள். மனித ஜென்மங்களால் எந்த முறையிலும் வெற்றிபெற முடிவதில்லை. இந்தக் குதிரை அடங்கிவிட்டதென எண்ணிக் கொண்டு இருக்கும் போது திடீரென அது மீறி விடுகிறது. என் மனமும் அடங்காத குதிரை. எனக்கு அடங்குவதாகப் பாசாங்கு காட்டும் தந்திரக் குதிரை. நான் அடங்கிவிட்டது என்று ஏமாந்து இருந்துவிட அது அதன் பாட்டில் சவாரி செய்யும். அந்தக் குதிரையை நான் அடக்க முயற்சிக்கிறேன். எனது பார்வையைத் தொலைக் காட்சிமேல் பதிய விடுகிறேன். நேரம் நத்தை ஊர்வதாய் ஊர்கிறது. அதற்கும் எப்போது மின்னலாய்க் கழிய வேண்டும் எப்போது கழுத்தறுக்க வேண்டும் என்பது தெரியும். நேரம் என்னைக் கழுத்தறுத்ததோ இல்லையோ சுவர் மணிக்கூட்டைப் பார்த்துப் பார்த்து என் கழுத்து உளைந்தது. இது மகா கொடுமையான கணங்களாய் எனக்குத் தோன்றின. அது கழிய வேண்டும். காத்திருந்தேன்.

நரகத்தில் நடந்து அந்த நாளிகளைக் கழித்து... ஒருவாறு மணி பன்னிரண்டு ஆகியது. கவசங்களை அணிந்து கொண்டு வெளியே இறங்கினேன். குளிர்காலப் பனி கரைந்து ஓடும் ஈரமெங்கும். கோடைக் காலம் கதவைத் தட்டுவதாய் அர்த்தம். வளைகுடாவில் இருந்து வரும் காற்று தன்னோடு வெப்பத்தையும் அள்ளிக்கொண்டு வருகிறது. சிலர் வெப்பத்தை மாத்திரம் அது கொண்டு வருவதாய் எண்ணிக் கொள்வார்கள். வெப்பத்தை மாத்திரம் அல்ல நுண்ணுயிர்களையும் அள்ளிக் கொண்டு வரும் இரகசியம் சிலருக்கு மட்டும் புரியும். இந்தக் காற்று வந்தால் குளிர் குறையும். இதமாய் இருக்கும். சிலவேளைக் காய்ச்சல் வரும். தடிமன், இருமல் பிடிக்கும். ஒரே காற்றின் இரண்டு விளைவுகள். ஒருவனுக்கு இன்பம். மற்றையவனுக்குத் துன்பம்.

மூனா இன்று இன்ப வெள்ளத்தில் மிதப்பதற்காய் பொப்பிற்குச் சென்றாள். நான் அவளைத் தேடி அலையவேண்டி இருக்கிறது. அவளது இன்பம் எனது அவஸ்தை ஆகிற்று. இதை எண்ண எனக்கே சிரிப்பு வந்தது. நான் சிரித்து விட்டேன். தெருவால் சென்ற இளசுகள் என்னை ஒரு மாதிரிப் பார்த்துக் கொண்டு சென்றனர். அவர்கள் தங்களைப் பார்த்துச் சிரிப்பதாக எண்ணி இருப்பார்கள் போலும். நான் எனது வாகனத்திற்குள் அடைக்கலமாகி அதற்கு உயிரளித்தேன். அது கனைத்துக் கொண்டு கண்ணைச் சிமிட்டியது.

இந்த வாகனச் சந்தையில் ஆரம்பத்தில் அமெரிக்கர்கள், ஐரோப்பியர்கள் கோலோச்சினர். பின்பு ஜப்பானியர்களின் ஆதிக்கம் கொடி கட்டிப் பறந்தது. இப்போது மெல்ல மெல்லக் கொரியர்கள் அதை ஆக்கிரமித்துக் கொள்கிறார்கள். இனி வரும் காலத்தில் யார் அந்த இடத்தைப் பிடிப்பார்கள்? சீனா? இந்தியா?
மனதிடம் மனிதன் எப்போதும் தோல்வி அடைகிறான். நான் அந்த மனதைச் சிறிது நேரம் புறக்கணிக்கலாம் என்கின்ற எண்ணத்தோடு வாகனத்தைச் செலுத்தினேன். நான் விடுதியடிக்குச் செல்லும் போது பன்னிரண்டு பத்தாகிவிட்டது. விடுதிக்குச் சற்றுத் தூரத்தில் இருந்த இருள் படர்ந்த இடத்தில் எனது வாகனத்தை நிறுத்தினேன். அதன் விளக்கை அணைத்தேன். வாகனம் உயிரோடு இருந்தது. அது உயிரோடு இருந்தால் மட்டுமே அதன் வெப்பத்தில் என்னால் சுகம்காண முடியும். அந்தப் 'பொப்' வழமை போல மிகவும் சுறுசுறுப்பாக இயங்கியது. உள்ளே போவோரும் வெளியே வருவோருமாய்ச் சனங்களின் நடமாட்டம். வாசலிலே பெரிய மின்சார விளக்குகள். அது ஆட்களை அடையாளம் காட்டுவதற்காக. காவலாளி உள்ளே செல்பவர்களிடம் பணம் வசூலித்து மிகவும் கவனமாக அவர்களைப் பரிசோதித்து அனுப்பி வைக்கிறான். இந்த வகையான 'பொப்'பிற்குள் அதிக பிரச்சனைகள் நடைபெறுகின்றன. உள்ளே கத்தியைக் கொண்டு போய் வெறியிலே குத்துப்பட்டால் என்கின்ற பயம் இப்போது இங்கும் பரவத் தொடங்கிவிட்டது. வன்முறை மிக வேகமாகத்தான் இந்த உலகை விழுங்கிக் கொண்டு வருகிறது என்கின்ற பிரமை எங்கும். கடற் கொள்ளையை மறந்து அன்பிற்கும், பரிவிற்கும் உதாரணமாய் இருந்த வடதுருவ நாடுகள் அவதி அவதியாக மாறிக் கொண்டே வருவதான தோற்றம்.

பொருளாதாரத்தை வைத்தே பொழுது போக்கையும் கட்டிப்போட்ட சமுதாயம். இழந்த வாழ்வைப் பிடிப்பதற்கான தேடலில் களியாட்ட நிலையங்களை நோக்கிப் படையெடுக்கும் கூட்டம். மதுவில் மயங்கி, மறுபாலில் உரசி, ஆட்டத்தில் குதித்து அதனால் அலுத்து வீடுபோய்ச் சேரும் ஒரு களியாட்டம். சிலருக்கு இந்தத் தருணங்களில் துணை இல்லாது ஒரு நாள் இணை வாய்ப்பது உண்டு. எனது காத்திருப்பு அவஸ்தையான பெருமூச்சுக்களாக... ஒவ்வொரு மனிதனும் தனது வாழ்க்கையிற் காத்திருக்கும் அவஸ்தையை அனுபவித்து இருப்பான். எனக்கும் அது இப்போது முடிவு காண முடியாத தொடர்கதையாக...

தூரத்தில் யாரோ தமிழர் வருவது போலத் தோன்றிற்று. யார் என்று உன்னிப்பாகப் பார்த்தேன். அகதிகளாக வந்த தமிழர்கள் சிலர் இங்கும் வந்து வேலை செய்கிறார்கள். அப்படி இங்கு வந்த முருகேசு வந்தான். இவன் என்னைக் இங்கே கண்டாற் கிண்டாமல் விடமாட்டான். அவன் கிண்டலுக்கு ஈடுகொடுக்க முடியாது. அதைவிடத் தனது ஊகத்தை வைத்தே ஒரு கதை உருவாக்கி விடுவான். இவனிடம் இருந்து தப்ப வேண்டும். நான் வாகனத்தின் உயிரை முற்றுமாகப் பிடுங்கினேன். ஆசனத்தில் கிடையாகப் படுத்தேன். இந்த நேரத்தில் மூனா எங்காவது சென்றுவிட்டால்? அந்த அலமலக்கம் என்னை அவஸ்தைப் படுத்தியது. வாடகைக் கார்களின் நடமாட்டம் இப்போது கூடிவிட்டது. இனி உதிர்பவர்கள் உதிரத் தொடங்குவார்கள். நான் சில நிமிடங்கள் அப்படியே படுத்திருந்தேன். பின்பு மெதுவாக எழுந்து பார்த்தேன். அவனைக் காணவில்லை. மூனா என்ன ஆனாள் என்பதும் புரியவில்லை. ஆனாலும் வாகனத்திற்கு மீண்டும் உயிர்கொடுத்து எதிர்பார்ப்போடு காத்திருந்தேன்.

மீண்டும் நான் சிந்தனைச் சுழலில் சிக்கித் தவித்த போது திடீரென மூனாவின் தோற்றம் என்னைக் கவர்ந்தது. நான் சிந்தனைச் சுழலில் இருந்து விடுபட்டேன். அவள் முற்றி வெடித்துப் பறக்கும் குறிஞ்சா விதை போல அந்தக் களியாட்ட நிலையத்திலிருந்து விடுதலைப் பெற்று வெளியே வந்தாள். முதலில் அவள் தனியே வருவதாக நான் நினைத்தேன். பின்பு ஒரு குறிஞ்சாவிதை பறக்க அதை இன்னொரு விதை விட்டுக் கலைப்பது போல அவளை அவன் கலைத்துக் கொண்டு வந்தான்.

யாரவன்? அவர்கள் காமக் காற்றிலா அல்லது மோகக் காற்றிலா பறக்கிறார்கள்? என் ஆத்ம விசாரணைக்கு அதிக நேரம் இருக்கவில்லை. அவர்கள் இருவரும் வந்து நின்ற வாடகை வண்டிக்குள் அவசரமாகப் புகுந்தார்கள். அது நகரத் தொடங்கியது. நானும் அதைப் பின்தொடர்ந்தேன். காரில் பிரயாணம் செய்தால் ஐந்து நிமிடங்களில் இந்த நகரத்தின் எல்லைகளைத் தொட்டுவிடலாம். நான் இடைவெளி விட்டு அவர்களை அவதானமாகப் பின்தொடர்ந்தேன். தெருக்களில் மது மயக்கத்துடனே அங்கொருவர் இங்கொருவரென மனிதர்களைக் காண முடிந்தது. வாடகை வண்டி ஒரு இடத்தில் நின்றது. நான் அவர்கள் என்னை அடையாளம் கண்டு கொள்ளாதவாறு வாகனத்தைத் தூரத்தில் நிறுத்தி அவர்களை அவதானித்தேன்.

இருவரும் வாடகை வண்டியில் இருந்து வேகமாகப் பிரசவமாகினர். இனி என்ன செய்யப் போகிறார்கள்? கேள்வி எழுந்தது. காத்திரு என்றது என் மூளையின் ஒரு பகுதி. நான் காத்திருந்தேன். அவர்கள் என்ன செய்கிறார்கள் எனப் பார்த்திருந்தேன். நான் எதிர்பார்த்ததை அவர்கள் செய்தார்கள். என் மனதில்தான் அழுக்காறா என்கின்ற கேள்வி பனியாகக் கரைந்து கானல் நீராக மறைந்து போயிற்று. இப்படிச் செய்வது பிழையா? புதிதாய் ஒரு கேள்வி என்மனதில் புழுவாய் நெளியத் தொடங்கியது. எந்த நாட்டில், எந்தவகையில் பார்த்தாலும் தப்புதானே? நம்பிக்கைத் துரோகம்தானே? எது நம்பிக்கைத் துரோகம்? எப்படி நம்பிக்கைத் துரோகம்? கேள்வி மனதில் குடையும் புழுக்கள்தான். அது புழுக்கத் தொடங்கினால்... பெருகத் தொடங்கினால்... ஆயிரமாயிரமாய்ப் பெருகி மூளைக்குள் நெளியத் தொடங்கினால்... அம்மா... என்ன அவஸ்தை இது? அவஸ்தை, அருவருப்பு, அசிங்கம், கோபம் எல்லாம் சேர்ந்து என்னுடலை முறுக்கியது. நான் அதைக் கட்டுப்படுத்திக் கொண்டு அந்த வீட்டை நோக்கி நடக்கத் தொடங்கினேன். உள்ளே திடீரென இருட்டிற்கு அடி நடந்தது. வெளிச்சத்தோடு போரிட முடியாத இருட்டுக் குளறிக் கொண்டு பேயாக வெளியே ஓடியது. வெளிச்சத்தின் ஆட்சியில் அவர்கள் நிழல்களாகத் தெரிந்தார்கள். அந்த நிழல்களிலேயே அவர்கள் செய்யும் சிலுமிசங்கள், இறுக்கங்கள் எனக்குத் தெரிந்தன. அவர்களின் இறுக்கம் எனக்குள் கோபத்தை அனலாகப் பற்ற வைத்தது. கோப அனலுக்கு நான் இடம் கொடுக்க முடியாது. அதைக் கட்டுப்படுத்தியாக வேண்டும். நான் ஒருவாறு அதைக் கட்டுப்படுத்தினேன். அவர்கள் நிழல் உருவங்களைக் கவனித்தேன். அவர்கள் நாரைகளாய்ப் பின்னிப் பிணைந்து இறுதியில் அவன் இவளைத் தூக்கிக் கொண்டு வேறு ஒரு அறைக்குள் புகுந்தான்.

அவனை எனக்குத் தெரியும். பெயர் சரியாகத் தெரியாது. அந்த அறையில் இருந்தும் இருட்டு இப்போது அலறிக் கொண்டு ஓடியது. நான் பொறுத்திருந்தேன். சரியான சமயத்தில் தட்ட வேண்டும். கையும் களவுமாகப் பிடிக்க வேண்டும் என்கின்ற வெறி என்னிடம். அது பாவம் இல்லையா? மீண்டும் கேள்விகள் மூளைக்குள் புழுவாக நெளிந்தன. நெளிந்த புழுக்களைக் கோபம் எரித்தது. கோபச் சுவாலையில் மென் புழுக்கள் சுருண்டு மடிந்தன. எனது பொருளே திருட்டுப் போன பின்பு நியாயம் நீதி பார்க்க முடியுமா? மீண்டும் ஏதோ ஒரு ஓரத்தில் புழுத் தோன்றியது. நான் கதவை ஓங்கித் தட்டினேன். உள்ளே இருந்து பதில் இல்லை. நான் தொடர்ந்தும் ஓங்கித் தட்டினேன். யாரோ வருகின்ற அரவம் கேட்டது. நான் வீமனைப் போல் விறைப்பாய் நின்றேன். கதவைத் திறந்தவன்

முகத்தில் ஆயிரம் மின்னல்கள் ஒரே நேரத்தில் வெட்டியதான அதிர்ச்சி. அவன் உறைந்து போய் நின்றான். அவன் என்னை எதிர் பார்த்து இருக்கமாட்டான். களவு செய்பவன் பிடிபடமாட்டேன் என்கின்ற துணிவில்தான் செய்கிறான். பிடிபடும் போது திகைக்கிறான்.

சிறிது நேரத்தில் அவன் தன்னைச் சமாளித்துக் கொண்டு என்னைப் பார்த்தான். அவன் பார்வையில் 'விழுந்தாலும் மீசையில் மண்ணொட்டவில்லை' என்கின்ற மெத்தனம். நான் பேசாது அவனையே கோபமாகப் பார்த்தேன். ஆடை எதுவும் இன்றி எனது சொந்தத்தை, சொத்தை அபகரித்தவன், அவசரத்தில் மேலாடையை மாத்திரம் போர்த்த வண்ணம் வந்திருந்தான். அவன் நிற்பதற்குப் பொறுமை இல்லாது தவித்தான். அது தவிப்புதான். எனக்குப் பாண்டுவின் சாபமா? அவன் தவிப்பு அணை கடந்திருக்க வேண்டும். தவிப்பு அவஸ்தைதான். அதை அணைக்குள் வைத்திருப்பது அதைவிட அவஸ்தைதான். அவன் பொறுமை இழந்தவனாய்,

'என்ன?' என்றான்.

'மூனாவ வெளிய அனுப்பு' என்றேன்.

'அப்பிடி இஞ்சை யாரும் இல்லை' என்றான்.

'வீணாப் பிரச்சனை வேண்டாம். ஒண்டில் என்னை உள்ள விடு. இல்லாட்டி அவளை வெளிய விடு' என்றேன். அதைத் தொடர்ந்து நான் அசாதாரணமாய் அவன் கையைத் தள்ளிவிட்டு உள்ளே நுழைந்தேன்.

'இது நல்ல வேலையில்லை. நான் நினைச்சா உன்னை அடிச்சுத் தூக்கி எறியலாம்' என்றான் அவன்.

'தெரியும். ஆனா அதைவிட இன்னொரு நல்ல வேலை செய்யலாம்' என்றேன்.

'என்ன அது?' என்றான்.

'நாங்க இருந்து கதைக்கலாம். கதைச்சு ஒரு முடிவுக்கு வரலாம். அதுக்குதானே வாயும் மொழியும் இருக்குது' என்றேன்.

நான் அவன் படுக்கை அறைக்குள் நுழைந்தேன். மூனா அவசர அவசரமாக ஆடைகளை அணிந்தாள். அவள் முகத்தில் ஆத்திரம், வெறுப்பு, கோபம் என்கின்ற அனல் கக்கும் ஓட்டங்கள். நான் சில கணங்கள் அவளையே பார்த்தேன். இன்னும் அவள் அழகு குறையவில்லை. ஆசையும் காமமும் பெருகி வழிகிறது. அந்நியனின் அறையிற் பார்த்த அவமானம் அதையும் வென்றது.

நான் கோவப்பட வேண்டும். அவள் கோவப்படுவதாய்க் காட்டிக் கொள்கிறாள். இங்கு அதீத உணர்ச்சியைக் காட்டுவதில் பிரயோசனம் இல்லை. இவளோடு வீட்டிற்குச் சென்று அங்கே கதைப்பதே நல்லது.

'வீட்டை போய்க் கதைப்பமோ? இல்லாட்டி இஞ்சயே கதைப்பமோ?' நான் அவளிடம் கேட்டேன்.

'வீட்டை போவம்' என்றாள்.

அவளிடம் கோபம் தணிந்து அமைதி குடி வந்திருந்தது. களவு செய்பவரிடமும் அமைதி சிலவேளை குடிகொள்ளச் செய்கிறது. தான் செய்த களவை எப்படி மறைப்பது என்பதான சிந்தனையில் இருக்கலாம். அல்லது எப்படி நியாயப்படுத்துவது என்பதாய் இருக்கலாம். களவும் பித்தலாட்டமும் செய்பவர்கள் சிலவேளை இதற்கு எதிராய் நடந்தும் தங்களது களவை மறைத்துக் கொள்வது உண்டு. அதற்காக உரத்துக் கத்தி உண்மையை மறைப்பது உண்டு. அநியாயத்தை மேலும் பொய் சொல்லி நியாயமாக்குவதும் உண்டு. இவள் தனது முடிவைப்பற்றிச் சிந்திக்கிறாள். எங்களுடைய ஒப்பந்தத்தை என்ன செய்வது என்பது பற்றிச் சிந்திக்கிறாள். ஒருவர் ஒப்பந்தத்திற்குத் துரோகம் செய்ய இன்னொருவர் அந்த ஒப்பந்தத்தைத் தொடர்ந்து காப்பாற்ற முடியுமா?

வீட்டிற்குள் வந்ததும் அவள் சோபாவில் தொப்பென்று விழுந்தாள். அதன் பின்பு சில கணங்கள் தண்டனையான நிசப்தம். அவஸ்தை தரும் அந்த நிசப்தம் எனக்குப் பிடிக்கவில்லை. நான் அதைப் புறக்கணிப்பது போலக் குளிர்சாதனப் பெட்டியைத் திறந்து இரண்டு பியர்களை வெளியே எடுத்தேன். பின்பு அவற்றைத் திறந்து ஒன்றை

நான் எடுத்துக் கொண்டு மற்றயதை மூனாவிடம் கொடுத்தேன். அவள் அதை வாங்கிக் கொண்டு நன்றி சொன்னாள். அவள் கண்களில் எதற்காகவோ சிறு கலக்கம். நான் சோபாவில் அமர்ந்தேன்.

'மூனா நீ எதையும் நேரடியாகக் கதைச்சிருக்கலாம். நீ வழமையாக அப்படித்தானே கதைப்பாய். இப்ப என்ன வந்திச்சுது?' என்றேன்.
'நான் சொல்லோணும் எண்டுதான் இருந்தன். அது இப்ப பிந்திப் போச்சு. நீங்க மோப்பம் பிடிக்கிறதிலை முந்தீட்டியள்' என்றாள் அவள்.
'அப்ப நீ என்ன முடிவுக்கு வந்திருக்கிறாய்?'
'நான் யோனியோட கொஞ்ச நாளைக்கு இருக்கப்போறன்'
'மூனா நீயா இப்படி மாறினாய்? சரி அது உன்ர விருப்பம். நான் அதில தலையிடேல்லை. ஆனா நீ யொனியோட இருக்கப் போறன் எண்டுறியே அது என்ன விதத்தில? அதை ஒருக்கா எனக்கு விளங்கப்படுத்தேலுமா?'
'கொஞ்ச நாளைக்கு அவரோ பிரண்டா இருந்திட்டு வருவன்'
'இல்லை. அதெல்லாம் சரிவராது'
'ஏன்?'
'என்ன விட்டிட்டுப் போறதெண்டா நிரந்தரமாப் போயிடு. நீ பிறகு என்னிட்டைத் திரும்பி வரவேண்டிய அவசியம் இல்லை. என்னால அதுக்குப் பிறகு உன்னோடை குடும்பமா வாழுகிறதை நினைச்சுப் பார்க்க முடியாது'
'ஏன் முடியாது?'
'முடியாது எண்டா முடியாதுதான். அது என்னுடைய விருப்பம்'
'அப்ப என்ன முடிவு எடுக்கலாம்?'
'அதை நீ ஏற்கனவே எடுத்திட்டாய்.'
'ம்... விளங்குது. எண்டாலும் நான் யோசிக்கோணும்'
'நல்லாய் யோசி'
'நாங்கள் பிரியேக்கையும் நண்பர்களாப் பிரியோணும்'
'நிச்சயமா. அப்பிடி எண்டா நீ பிரியிறதா முடிவு செய்திட்டீயோ?'
'நான் முடிவு செய்யேல்லை. அதுக்கு முதல்ல நல்லா யோசிக்கோணும். ஆனாப் பிரியிறதைத் தவிர வேறு வழி இருக்காது எண்டு நினைக்கிறன்'
'சரி நாளைக்கு உன்ர முடிவச் சொல்லு. அப்ப படுப்ப மே?'
'யா'

நான் சென்று படுத்தேன். அவளைத் திரும்பிப் பார்ப்பதற்கே மனதிருக்கவில்லை. தனிமையில் இருந்து அழவேண்டும் என்கின்ற அந்தரமாய் இருந்தது. அவள் சிறிது நேரத்தில் தூங்கிவிட்டாள். மதுவின் மயக்கம் மிக விரைவிலேயே அவளைத் தூக்கமாய் அணைத்துக் கொண்டது. மாறாக என்னைத் தாங்க ஒண்ணாத் துக்கம் அணைத்துக் கொண்டது. நித்திரை எட்டி எட்டி உதைக்க நான் படுக்கையில் முடிவில்லாது புரண்டேன்.

எனது வாழ்க்கையில் இனி அதிகமான துன்பங்களைச் சந்திக்க வேண்டி வரலாம். துணை பிரிந்தால் இரண வேதனைப்படும் இதயத்தின் ஓலத்திற்கு விதி விலக்கேது? தற்கொலை செய்யச் சொல்லும் பிரிவின் ஆறாச் சோகம். பைத்தியமாக்கும் சோகத்தில் பரிதவிக்கும் நாளில், உன்னைப் பைத்தியமென்று எண்ணி பச்சாதாபப்படும் சகமனிதர்கள். தனிமை போய் பின்பும் தனிமை வந்தால்? ஔவைக்கு அது அனுபவத்தில் தெரிந்திருக்கவில்லை.

மூனாவைப் போல் நானும் இன்னொருத்திக்கு அலைய முடியாது. விவாகரத்து என்றால் ஏகப்பட்ட பிரச்சனைகள் வரலாம். எது எது யாருக்கு என்பதில் பேதம் உருவாகலாம். பிரிவுகள் பிரச்சனைகளை உருவாக்கும். கேள்விகளும், சந்தேகங்களும் முளைத்து எழும். பெண்களுக்கு இதில் சலுகைகள் அதிகமா? நோர்வேயில் அப்படித்தான் இருக்கிறது. பொதுவாகப் பிள்ளையைப் பாதுகாக்க வேண்டி இருப்பதால் அப்படி இருக்கலாம்.

மூனாவுக்குப் பிள்ளையைப் பாதுகாக்க வேண்டிய அவசியம் இல்லை. விவாகரத்துத்தானா இதற்கு முடிவு? கேள்விகள் என்னைக் வழமைபோற் குடைந்தன. நித்திரை என்னைக் கண்டு ஓடியது. நான் அவஸ்தையாகப் படுக்கையில் அங்கும் இங்கும் தொடர்ந்தும் புரண்டேன். பின்பு அப்படியே தூங்கி விட்டேன். விழித்த பொழுது நேரம் பகல் பன்னிரண்டைக் காட்டியது.

★

படுக்கையால் எழுந்ததும் என் மனது நினைவுகள் என்னும் சகதிக்குள். இலங்கையில் இருந்திருந்தால் நான் என்ன ஆட்டம் ஆடியிருப்பேன். இந்த நாட்டு வாழ்க்கை என் குணத்தை நலமடித்து இருக்கிறது. ஆட்டம் போடுவது இங்கு அழகாய்க் கருதப்படாது. நான் இப்போது பல்லிழந்த பாம்பைப் போன்றவன். சட்டத்தை மதிக்கும் சமுதாயத்தில் சண்டித்தனம் செல்லுபடியாகாது. இலங்கையாக இருந்திருந்தால் நாயேயென எட்டி உதைந்திருக்கலாம். அடியால் அவளைத் துடிக்கச் செய்து இருக்கலாம். சொல்லால் அவளைச் சித்திரவதைப் படுத்தி இருக்கலாம். மனித முகத்தை மறந்துவிட்டு மிருக குணத்தை தாராளமாய்க் காட்டி இருக்கலாம். இப்போது என்னால் அப்படிச் செய்ய முடியவில்லை. ஆச்சரியமாய் இருந்தாலும் என்னால் மனித குணத்தை விட்டு மிருக குணத்திற்கு மாற முடியவில்லை.

நான் கீழே போன போது அவள் காலைச் சாப்பாடு சாப்பிட்டுக் கொண்டு இருந்தாள். அவள் வதனத்தில் இருட்டு இல்லை. கலக்கம் இல்லை. மிகவும் தெளிவாய் இருந்தாள். என்னைக் கண்டு எந்தக் களங்கமும் இல்லாது மென்னகை புரிந்தாள். இதை ஒரு தமிழ்ப் பெண் செய்ய மாட்டாள். அவளால் செய்ய முடியாது. அவர்கள் வளர்க்கப்படுவது அப்படி. நான் சிரமப்பட்டுச் சிரிப்பை வலுவிற்கு இழுத்தேன். என்னதான் வேஷமிட்டாலும் என்னால் இவர்களைப் போல் வாழமுடியாது. வாழ முடியுமெனப் பலர் பாவனை காட்டலாம். பாவனைக்கும் நிஜத்திற்கும் வித்தியாசம் உண்டு. நான் நானாகத்தான் வாழ முடியும். அவள் அவளாகத்தான் வாழ முடியும். நடைமுறைக்காகச் சிலவற்றை மாற்ற முடியும். அல்லது மாற்றியதாய் நடிக்க முடியும்.

'காய்' அவளே முதலிற் சொன்னாள்.

'காய். நீ வடிவா இருக்கிறாய்' என்று உண்மையை ஒப்புக்கொண்டேன்.

'தாங்ஸ்'

மீண்டும் மௌனம் திமிறிக் கொண்டு வந்து நின்றது. அதை உடைக்க வேண்டும். மௌனத்தை, போலியான உறவை, உடைக்க வேண்டும். நேர்மை இல்லாத உறவிலே நிம்மதி இருப்பதில்லை. இதைவிடப் பிரிவு நிம்மதியைத் தரலாம்.

'என்ன பேசாமல் இருக்கிறியள்?' என்றாள் அவள்.

'நீதான் சொல்லோணும். இரவு யோசிச்சியா? நடந்தது எல்லாம் ஞாபகம் இருக்குத்தானே?'

'கிண்டல் வேண்டாம்'

'ஓ கே... நான் கிண்டல் பண்ணேல்லை... விஷயத்துக்கு வருவம். என்னவா முடிவு எடுத்திருக்கிறாய்?'

'நாங்க பிரண்சாகவே பிரிஞ்சிடுவம்'

'நித்தி?'

'அவனைப்பற்றி இனிக் கவலைப்படத் தேவையில்லை. அவன் கலியாணம் செய்து போயிட்டான். எங்களோடை இருந்திருந்தா யோசிக்க வேண்டிய ஒண்டுதான். இப்ப பிரச்சனை இல்லையே?'

'நித்தியின்ர பிள்ளை கேட்டா?'

'அது வருங்காலம். அதுக்காக இண்டைக்கே கவலைப்படேலாது'

'பிரண்சா பிரிஞ்சுடுவம் எண்டுறா?'

'ம்..'

அவள் எந்த வேதனையும் இல்லாது சொன்னாள். உறவு என்பது பிரிவே இல்லாதது என்று எண்ணி இருந்தால் வேதனைதான். மூனா ஞானம் உள்ளவளா? உறவு பிரிவுக்காக எப்போதும் காத்திருப்பது என்பதைப் புரிந்தவளா? அவள் ஞானி போலப் பிரிவை ஏற்றுக் கொண்டாள். அவளுக்கு இன்னொரு உறவு வந்தாகிற்று. அத்தால் இது மகிழ்வாகியது. மூனாவுக்கு இன்னொரு வகையில் ஞானம் கிடைக்கப் போகிறது. இதில் அவள் கவலைப்பட எதுவும் இல்லை. புது வகையான ஞானம். புது வகையான அனுபவம். எனக்கும் விருப்பம் இருந்தால், இயலும் என்றால், புதுவகையான அனுபவத்தைப் பெறலாம். என்னால் இயலுமா?

'நல்லது. சொத்தை நாங்களே பிரிச்சுக்கலாமோ அல்லது 'அற்வக்கேற்' வேணுமோ?' என்றேன்.

'நண்பராய்ப் பிரியிறது எண்டு முடிவு எடுத்திருக்கிறம். இதுக்கு என்னத்துக்கு 'அற்வக்கேற்'. நாங்களாப் பிரிச்சுக்குவம்' என்றாள்.

மூன்று நாட்களில் நானும் அவளும் பிரிந்தோம். என்னிடம் வீட்டை ஒப்படைத்துப் பணத்தைப் பெற்றுக் கொண்டாள். பேரங்களும் கலந்துரையாடல்களும் சுமுகமாகவே முடிந்தன. சாமான் ஏற்ற வரும்போது புதிய காதலன் கைதந்தான். 'யொனி'யெனத் தன்னை மீண்டும் நட்பாக அறிமுகம் செய்தான். நாங்கள் நண்பர்களாய்ப் பிரிந்தோம். மூனா இப்போது எனது வாழ்க்கையின் இறந்த காலமானாள்.

# 14

மூனா எனது வாழ்க்கையின் இறந்த காலமானாள். நான் நடப்பு வாழ்க்கையில் தனி மரமாகி நடைப் பிணமானேன். அவள் திட்டத்தோடு பிரிந்து தேடிக் கொண்ட துணையோடு இன்பமாய் வாழ்ந்தாள். எதிர்பார்க்காத என்னிடம் வேதனையும் தனிமையும் மிஞ்சியது. அவள் எங்கள் உறவைத் தாமரை இலையின் நீர் போல எடுத்துக் கொண்டாள். அவள் என்னிடம் இருந்து பிரிந்து போகும் போது வேறொன்றையும் என்னிடம் அனுப்பிவிட்டுச் சென்றாள். எனக்குச் சில நாட்கள் அது புரியவில்லை. பின்புதான் அது புரியத் தொடங்கியது. புரியத் தொடங்கியதும் வேதனை மேலெழுந்தது. வேதனை மேலெழவும் துடிப்பு அதிகமாகியது. துடிப்பு அதிகமாகவும் அவள் தந்ததைத் தூக்கி எறிய வேண்டும் என்கின்ற வெறி வந்தது. வெறி வரலாம். வெறியைத் தணிப்பதற்கான வழி தெரியாது வெறி வரலாமா? வந்த வெறியைத் தணிக்க முடியாது தவித்தேன். மனம் அமைதியில்லாது அலை மோதியது.

மூனாவும் நித்தியும் இல்லாத வீடு முடிவில்லாத வெறுமை தந்தது. வெறுமை எனக்குப் பயத்தைத் தந்தது. பயம் தனிமை மீதே வெறுப்பைத் தந்தது. இந்த வீட்டை விற்றுவிட்டு எனது நாட்டிற்குச் சென்று நிம்மதியாகச் சாகலாம் என்கின்ற எண்ணம் வந்தது. கடைசிக் காலத்தை எனது நாட்டில்... உயிர் தந்த அந்த மண்ணிலேயே உடலையும் அர்ப்பணித்து, எண்ண எண்ண மனதில் ஆசை பிறந்தது. இங்கே தனிமையாக இருந்ததால் வந்த வெறுப்பு அதற்குத் தூபம் போட்டது. நித்தி ஒருமுறை வீட்டிற்கு வந்த போது விடயத்தை அவனிடம் கூறினேன். அவன் மூஞ்சை தொட்டால் சிணுங்கியாகச் சுருங்கிற்று. பின்பு கோபமானான். அவனது கோபத்திற்கு நான் பயப்படுபவன் அல்ல. அவன் கடைசியாகச் சொன்ன சொல்லு என்னைக் கதிகலங்க வைத்தது. அன்று நான் அவனது கோபத்தைப் பார்த்துவிட்டு,

'என்னடா கோவம் வருகுதோ?' என்றேன்.

'வராதோ? அம்மா செய்தது பிடிக்கேல்லை. அதால எனக்கு அம்மாவைவிட உங்களைத்தான் அதிகம் பிடிக்கும். நீங்களும் நாட்டுக்குப் போனா நானும் அநாதை மாதிரித்தான். உங்களுக்கு அதுதான் விருப்பம் எண்டா நீங்க போகலாம். எனக்குப் பிறக்கிற பிள்ளையளுக்குப் பேரன் பேத்தியின்ர அரவணைப்புக் கிடையாதெண்டு நினைக்கிறன். சொறியப்பா. நான் இப்படிக் கதைக்கிறது தப்பு. அவையவையின்ர விருப்பம் அவையவைக்கு முக்கியம். உங்களுக்கு இப்ப நாட்டுக்குப் போகவேண்டியது முக்கிமாக இருக்கலாம். நான் கேட்டதுக்குச் சொறியப்பா. என்னை மன்னிச்சிடுங்க' என்ற வண்ணம் அவன் உணர்ச்சியில் கண் கலங்கி நின்றான்.

அதன் பின்பு நான் இலங்கைக்குப் போக வேண்டும் என்கின்ற எண்ணத்தைக் கைவிட்டேன். பிள்ளைப் பாசம் பொல்லாதது என்பது புரிந்தது. அது என்னை இங்கே கட்டிப் போட்டது. பிள்ளை மனது அன்று போல் என்றும் இருக்கவில்லை. காலத்தின் இழுப்பில் கரிசனைகள் குறைந்துவிட்டன. கடைசி நேரத்தில் உங்களுக்கு முதியோர் மடம்தான் வசதியென முடிவாகிற்று.

மகனின் பாசத்திற்காய், பேரப்பிள்ளைகளின் அழைவுக்காய், தங்கி விட்ட என்னைத் தனிமை அதிகம் வாட்டியது. முதுமையில் தனிமை கொடியது என்பதை நான் அனுபவரீதியாக உணர முடிந்தது.

★

அரவம் கேட்டது. அதைத் தொடர்ந்து கேள்வி வந்தது.

‘என்ன கடுமையா யோசிச்சு எழுதிறுயள் போல இருக்குது? எப்ப எழுதி முடிப்பியள்?’

‘கெதியா… இந்தக் கை ஓயிறத்துக்குள்ள’

‘ஓ… அப்பிடி எல்லாம் நினைக்காதீங்க’

‘நினைக்காதவன் முட்டாள். நினைச்சு நினைச்சு அதுக்காக வருத்தப்படுறவனும் முட்டாள். யதார்த்தத்தைப் புரிஞ்சுகொண்டு அதுக்கு ஏத்தமாதிரி நடக்கிறவன் புத்திசாலி. அவன்தான் சிந்திக்கத் தெரிஞ்ச மனிசன்’

‘ம்… உங்கட அனுபவத்திற்கு என்னை விட மூன்று மடங்கு வயசு’

‘ம்…. சரி என்ன விஷயம்?’ என்றேன் அந்த அழகிய தாதியைப் பார்த்து.

‘குமரேசன் அங்க இருக்கிறார். உங்களோடை கதைக்கோணும் எண்டு சொன்னார்’

‘ஓகே போவமே?’

அவள் என்னைத் தள்ளிக்கொண்டு சென்றாள். வண்டில் வாழைப்பழத் தோலில் கால் வைத்தது போல வழுக்கிக் கொண்டு சென்றது. பல கதவுகள் திறந்து கிடந்தன. எனது பார்வை அவ்வறைகளுக்குள் தாவி உலாவிப் புதினம் சேகரித்தது. நான் வந்த புதிதில் இருந்தவர்களில் இப்போது பாதிப்பேர்தான் உயிரோடு இருக்கிறார்கள். கண்ணின் தேடல் மனதிற்கு ஒரு பாடத்தைப் புரியவைத்தது. இந்த வாழ்க்கையின் நிரந்தர இன்மை புரியத்தொடங்கியது.

இங்கே வருபவர்களுக்கு தங்கள் முடிவு தெரிந்திருக்கலாம். அது எப்போது என்பதுதான் யாருக்கும் தெரியாத மர்மம். இறப்பு எப்போது வரும் என்பது எவருக்கும் தெரியாத சுவாரசியமே இன்றைய வாழ்க்கை. அது நான் எழுதத் தொடங்கியதை எழுதி முடிக்க வேண்டும் என்கின்ற உந்தலைத் தருகிறது.
அவள் என்னைக் கோலுக்குள் கொண்டு வந்தாள். அங்கே இருப்பவர்களின் கண்களில் ஏதோ ஒருவித ஏக்கம் இருப்பதாய் எனக்குத் தோன்றியது. ஏனிந்த ஏக்கம்?

கொஞ்சித் திரிந்து… கொழுத்து வளர்ந்து… மிஞ்சிவிட்ட பருவ உணர்ச்சியால் நித்தம் அலைந்து… அதற்கு வடிகாலாய் அவரவர் வழி தேடி… காமத்தை வெல்வதாய் கட்டுண்டு, கூத்தாடி, அவரவர் அழுக்கில் அங்கே ஒன்று உருவாகி, அதைக் கொஞ்சி மகிழ்ந்து, அதற்கும் இதுதான் வழியெனக்காட்டி, அவர் பெற்றதையும் எடுத்து மோர்ந்து, இறமாந்திருந்து, எல்லாம் முடிய இந்தக்கட்டை இனி எமக்கு உதவாது என்கின்ற நிலையில் இங்கே கொண்டு வந்து போட்டாலும், இவ்வுலகத்தில் இன்னும் வாழ வேண்டும் என்கின்ற அவா அடங்காது, ஏக்கத்தோடு நாட்களை எண்ணும் இந்த ஜீவன்களை எண்ணி என்ன செய்யலாம்?

மனித ஆசை எல்லையற்றது. பிறந்த மனிதன் இந்த உலகில் நிரந்தரமாய்த் தங்கிவிடுவான் என்றால் புழுக்களைவிட அவன் பெருக்கம் அதிகமாக இருந்திருக்கும். உலகில் உண்பதற்கு எதுவும் இருந்திருக்காது. நரனை நரன் உண்ணும் நாசம் நடந்திருக்கும். நோய், முப்பு, இறப்பு, இயற்கை அழிவு ஆகியன இயற்கையின் அற்புதம். அது தன்னைத் தானே செதுக்கிக் கொள்கிற யுக்தி. யுத்தம்? மனிதன் தன்னைத் தானே மொட்டை

அடித்துக் கொள்வது. இறப்பு என்பது இல்லாது கிழங்கள் மட்டும் இந்த உலகில் பெருகினால் எப்படி இருக்கும்? தோல் சுருங்கிய கூட்டத்தைத் தொடுவாரற்றுப் போனால்?

'நீங்கள் கனக்க யோசிக்கிறியள்' வண்டிலை நிறுத்திய வண்ணம் அவள் சொன்னாள். நான் சிரித்தேன். அவளும் ஏதோ விளங்கியதாய்ச் சிரித்தாள். பின்பு எதையோ நினைத்தவளாய் அங்கிருந்து அவசரமாக மறைந்தாள். அவள் பின்னழகில் என்விழிகள் பதிந்திருந்தன.

'காய்' எனது விழிகளைக் குமரேசனின் குரல் அதில் இருந்து பெயர்த்து எடுத்தது. அவனைப் பார்த்தேன். அவன் என்னைப் பார்த்துச் சிரித்தான்.

'காய் குமரேசா எப்பிடி இருக்குது?" என்றேன்.

'எப்ப எண்டுதான் தெரியேல்லை?" என்றான்.

'என்ன?"

'இல்லை... எனக்கு எது கடைசி நாள் எண்டது தெரியேல்லை எண்டுறன்'

'ம்... யாருக்குக் கடைசி எண்டது இல்லாமல் போகும் சொல்லு பார்ப்பம்? அரசன் எண்டாலும் உண்டு. ஆண்டி எண்டாலும் உண்டு. அழகி எண்டாலும் உண்டு. அரக்கி எண்டாலும் உண்டு. பத்தினிக்கும் உண்டு. வேசைக்கும் உண்டு. யாரால் அதிலை இருந்து தப்பிக்க முடியும்? அதுக்காக உன்னை மாதிரி எல்லாரும் யோசிக்கத் தொடங்கினா இந்த உலகம் ஸ்தம்பிச்சுப் போயிடும். இந்த உலகத்தோட நிரந்தரமாக ஒட்டலாம் எண்டு யாரும் கனவு காணேலாது. எங்களுக்கு எண்டு ஒரு ஆயுட்காலம் இருக்குது. அதை எல்லாரும் ஏத்துக்கத்தான் வேணும். ஏத்துக்காதவையின்ர பாடு நிறைய அவஸ்தையாக இருக்கும். அது தேவையில்லாத அவஸ்தை. வாறது வாற நேரம் வரட்டும் எண்டிட்டு நாங்கள் எங்கடை கடமையைப் பார்க்க வேணும். போன காலம் திரும்பி வராது. விஞ்ஞானத்திலை ஏதோ போன காலத்துக்குத் திரும்பிப் போகலாம் எண்டு ஒரு கோட்பாடு உண்டு. அது சாத்தியமா? பறக்கிறதை விட்டிட்டு நடக்கிறதைப் பற்றி யோசிக்கலாம் இல்லையே?" என்றேன் நான்.

'நீ கொஞ்சம் விஷயம் தெரிஞ்ச மனிசனப்பா. எல்லாத்தையும் ஈசியாச் சொல்லுறா? என்ன கண்டுறாவி மனமோ என்ர மனம்? என்னாலை அப்பிடி எடுக்க முடியிறேல்லை'

'மனதைக் கட்டுப்படுத்துகிறதும் அதைக் கந்தறுந்து போக விடுகிறதும் உன்னிட்டதானே இருக்குது. நீ தப்பாகப் போகும் போது உன்னை அது நல்வழிப்படுத்த முயல்வதோ அல்லது அந்தத் தப்பிற்கு ஊக்குவிப்பதோ உன்னிடம்தான் தங்கியிருக்கிறது. நீ முயற்சி செய்தா நீ இடும் கட்டளை மூலம் எல்லாம் கைகூடும். இழப்புக்களை, அது சொல்லும் உண்மையை, அப்பிடியே ஏத்துக் கொண்டு அதிலை இருந்து இனி எப்பிடி விடுபடுகிறது, இல்லாட்டி அதை எப்படிச் சமாளிக்கிறது எண்டு முயற்சிக்கோணும்' என்றேன்.

'நீ சொல்லுகிறது கேட்கிறதுக்கு ஏதோ நல்லாத்தான் இருக்குது' என்றான் அவன்.

'உண்மைதான். தன்ர முறையிலை வரேக்க பலருக்கும் தடுமாற்றம் ஏற்படத்தான் செய்யும். நீ சொல்லுகிற மாதிரி எனக்குக்கூடத் தடுமாற்றம் ஏற்படலாம்'

'ம்..'

குமரேசன் சிறிது நேரம் திடீர் அமைதி காத்தான். பின்பு அவனாகவே மீண்டும் கதைக்கத் தொடங்கினான்.

'உனக்கு ஞாபகம் இருக்கே? நாங்கள் இஞ்சை வெளிக்கிடுறத்துக்கு முதல் நாள் சாராயத்தோடை வீச்சுக்குப் போனது. அப்ப வழியிலை விமலாவைப் பார்த்தமல்லே? அவள் அப்ப எப்பிடித் தளதளவெண்டு மினுங்கிக் கொண்டு நிண்டாள். எனக்கு அதை நினைச்சா இப்பவும் என்னவோ போல இருக்குது. நான் அவளைத் தள்ளிக் கொண்டு போகோணும் எண்டு அப்ப நினைக்கிறனான். ஆனா எங்களைச் சுத்தி எத்தினை ஆயிரம் பிரச்சனைகள் இருந்திச்சு? அந்தப் பயத்திலை எதையுமே செய்யேல்லை. எதையுமே செய்ய முடியேல்லை? இது ஒருவித ஏக்கமான ஏமாற்றம். அந்த விமலா இப்ப எத்தினை பிள்ளைகளைப் பெத்து, எப்ப பாட்டியாகி, பாடையேறினாளோ இல்லையோ? காலம் எப்பிடி உருண்டோடிட்டுது? தொடர்புகள் எப்பிடித் தொலைஞ்சு போயிட்டுது?"

‘என்ன விமலாவைப் பற்றித் திடீரென இவ்வளவு ஆதங்கம்? நீ சொல்லுகிறதைப் பார்த்தா அவளிலதான் உனக்கு முதல்ல காதல் வந்திருக்குது போல? எனக்குச் சொல்லாமல் மறைச்சிருக்கிறா என்ன?’ என்றேன்.

‘உண்மைதான். ஆனா அது அப்ப இருந்த நடைமுறைக்குச் சரிவராது எண்டு தெரியும். அதுதான் மனசுக்கையே சமாதி கட்டீட்டன். சமாதி கட்டினா என்ன அந்த நினைவுகள் அடிக்கடி சமாதியை உடைக்கத்தான் செய்யுது. அடிக்கடி என்னையும் மறந்து அவளில ஆசைப்படச் செய்யுது. அவள் இப்ப இருக்கிற கோலத்தைப் பார்த்தா நிச்சயமாக ஆசைப்படமாட்டன் எண்டு நினைக்கிறன். என்ர மனசிலை நர்த்தனமாடுகிற அவளின்ர உருவம் அந்த நாள் இளமையுருவம். மேடுபள்ளம் துருத்திக் கொண்டு நிண்ட உருவம். அவள் இப்ப எப்பிடி இருப்பாள்? எங்களை நாங்களே ஆழமுடியாத உலகம். யார் தான் நினைச்சபடி நடக்க முடியுது? விதி. அதன்படிதான் எல்லாம் நடக்கும். நாங்கள் எத்தினையோ கனவுகளோட இருக்கிறம், அதிலை எத்தினை நடக்குது? தன்னுடைய சொந்த வாழ்க்கை எப்பிடி அமையும் எண்டு ஒருத்தராலும் நூறு வீதம் சொல்ல முடியாது. நாங்கள் எப்பிடி எப்பிடி எல்லாம் இருக்கோணும் எண்டு நினைச்சிருப்பம். கடைசியில எப்பிடி எப்பிடி இருந்தம்? மனித வாழ்க்கை எண்டுறது கடலில விடுகிற காகிதக் கப்பலைவிட நிரந்தரமற்றதா இருக்கு. ஒரு நொடியிலை ஒருத்தன்ர வாழ்க்கையில எவ்வளவு மாற்றம் வருகுது?’ என்றான் குமரேசன். அவனது சிந்தனை என்னை வியப்படைய வைத்தது.

‘வாவ். இது குமரேசனா? எவ்வளவு அழகான தத்துவங்கள் உன்னிட்ட இருக்குது. அதையெல்லாம் அப்பிடியே அமுக்கி வைக்கிறதில இலாபம் இல்லை. ஆகக் குறைஞ்சது இப்பிடிக் கதைக்கிற நேரத்திலையாவது எடுத்து விடோணும்’

‘பகிடிபண்ணாத’

‘நான் பகிடிக்குச் சொல்லேல்லை. அது சரி இப்ப ஏன் இந்தத் திடீர் ஞானம்?’ என்றேன்.

★

‘காய்’

குரல் வந்த திசையைத் திரும்பிப் பார்த்தேன். அங்கே நித்தியும் சுசானும் கதரீனாவோடும் மோல்டனோடும் நின்றார்கள். அதிலும் நித்தியே முந்திரிக் கொட்டையாக,

‘என்னப்பா கடுமையா விவாதிச்சுக் கொண்டு இருக்கிறியள் போல?’ என்றான்.

‘சீ அப்பிடி இல்லை. சும்மா கதைக்கிறம்’ என்றேன்.

‘என்ன குமரேசன்மாமா சுகமா இருக்கிறியளோ?’ என்றான் நித்தி.

‘ம். ஏதோ இருக்கிறம்’ என்றான் குமரேசன்.

‘ஏன் அலுக்கிறியள்?’ என்றான் நித்தி.

‘இந்த மடத்திலை இருந்தும் அது வராட்டித்தான் அதிசயம்’ என்றான் குமரேசன்.

‘....’

நித்தியால் அதற்குப் பதில் சொல்ல முடியவில்லை. சிலவேளை அவன் மனதில் இருக்கும் குற்ற உணர்வு அதற்குக் காரணமாய் இருந்திருக்கலாம். நான் அந்த மௌனக் கணங்களைக் கலைத்தேன்.

‘மொல்டன் இங்கவா’

நான் கூப்பிட்டதும் அவன் மான்குட்டி போலத் துள்ளி ஓடி வந்தான். அவனை விட்டுக் கலைத்துக் கொண்டு கதரீனாவும் ஓடிவந்தாள்.

‘கதரீனா அந்தத் தாத்தாட்டப் போங்கோ’ என்றேன்.

‘சரி’

அவள் காற்றைக் கிழித்துச் செல்லும் சிட்டுக்குருவி போல அங்கே சென்றாள். சுசான் இதுவரையும் பேசாது நின்றிருந்தாள். இப்போது என்னருகே வந்து,

‘நல்லா இருக்கிறியளோ?’ என்று கேட்டாள்.

‘அதுக்கென்ன குறை சுசான்… நான் நல்லாத்தான் இருக்கிறன்’ என்றேன்.

‘உடம்புக்கு ஒண்டுமில்லையே?’

‘கிழடு எண்டாலே இயக்கம் குறைஞ்சுதான் போகும். எனக்கும் அப்பிடித்தான். ஆனா நான் எழுதி முடிக்கிறவரைக்கும் ஓயமாட்டன்’

‘ஓ… உங்கடை எழுத்து வேலை எந்த அளவில இருக்குது?’ என்றாள்.

‘இன்னும் கொஞ்ச நாளில முடிஞ்சிடும்’ என்றேன்.

‘நான் ஒரு அச்சகத்தோடை கதைச்சனான்’

‘ஓ அதுக்கு முதல்ல நான் அதைத் திருத்தோணும். பிறகு நித்தியும், பவியும்… தெரியுமெல்லே அவளை உனக்கு?’

‘ஓ தெரியும்’

‘இரண்டுபேரும் சேர்ந்து இதை ‘நோஸ்’க்கிற்குக் கொஞ்சமும் தரம் குறைஞ்சிடாமல் மாத்தோணும். மாத்தினாப் பிறகு குனுத்திட்டை குடுத்து ஒருக்காச் சரி பார்க்கோணும். பிறகு நீ ஒருக்கா வாசிச்சுப் பார்க்கவேணும். இவ்வளவும் முடிச்சாத்தான் அதை அவங்களுக்கு அனுப்பி வைக்கலாம்’

‘ம்… அதெல்லாம் செய்யலாம்’ என்றாள் அவள்.

‘எனக்கும் அந்த நம்பிக்கை இருக்குது’ என்றேன்.

‘அப்பா ரெண்டு நாளைக்கு வீட்டிலை வந்திருங்க’

‘வேண்டாம்’

‘ஏன் அப்பா?’

‘நான் அங்க வந்தா எழுதுறது தடைப்பட்டுப் போகும். நான் அதை முடிக்க முதல் எங்கையும் வாறதா இல்லை’ என்றேன்.

மோல்டன் என் தாடையைத் தடவினான். ‘ஏன் இப்பிடிச் சுருக்கம் விழுந்திருக்கு உங்கடை முகத்தில?’ என்றான்.

‘வயது போகப் போக இப்பிடித்தான் வரும்.’

‘எனக்கும் வருமா?’

‘எல்லாருக்கும் வரும். ஆனா உனக்கு வாறத்துக்கு நிறையக் காலம் செல்லும்’

‘ஏன் இப்பிடி வரோணும்?’

அவனது கேள்விக்கு எப்படிப் பதில் சொல்வது என்று புரியவில்லை.

‘தெரியேல்லை அப்பா. ஏன் இப்பிடி வரோணும் எண்டு சரியாத் தெரியேல்லை. இயற்கை அப்பிடித்தான். இல்லாட்டி உலகம் தாங்காது’ என்றேன்.

‘அப்பாப்பா..’

இப்போது கதரீனாவும் வெண்புறாவாய்ப் பறந்து வந்து எனது வலது தொடையில் ஏறி இருந்தாள். இந்தப் பிஞ்சுகளை வைத்திருப்பதில் எவ்வளவு சந்தோசம்? மனிதனைப் பாச பந்தம் எப்படிப் பிணைக்கிறது? அல்லது இயற்கையின் விசித்திரம் அதில் எப்படி ஒளிந்திருக்கிறது? பாசபந்தப் பிணைப்பில்லாத வாழ்க்கையில் எவ்வளவு சந்தோஷம் இருக்கும்? இவர்களில் அந்தப் பாதிப்பு அதிகம் தெரிகிறது. தனிமை என்கின்ற கொடுமையால் இவர்கள் அதிகம் பாதிக்கப்படுகிறார்கள். இங்கு வந்த எங்களுக்கே அதிக தனிமையை உணர முடிகிறது என்றால் இந்தக் கலாச்சாரத்தில் வாழ்பவர்களுக்கு இது ஒரு நரக வேதனையாகத்தான் இருக்க வேண்டும். நான் சிந்தனையில் அதிக நேரத்தைச் செலவழித்திருக்க வேண்டும்.

‘அப்ப வீட்ட வருகிற ஐடியா இல்லையா?’ சுசான் கேட்டாள்.

‘இல்லை. நான் என்ரை வேலையை முடிக்கோணும். முடிச்சோண்ணை உங்களுக்குப் போன் பண்ணுறன். வந்து எடுத்துக் கொண்டு போய் மிச்ச வேலையைப் பாருங்க’

‘சரி’ என்றாள் அவள்.

‘வேற என்னப்பா? நாங்கள் அப்ப வெளிக்கிடுறம்’ என்று கூறிய வண்ணம் நித்தி புறப்பட்டான்.

‘ம் சரி போட்டு வாங்கோ’

‘குமரேசன் மாமா நாங்கள் போட்டு வாறம்’ என்றான் நித்தி.

‘சரி வாங்கோ’

நித்தி மோல்டனையும், கதரீனைவையும் வெளிக்கிடுத்தி அழைத்துச் செல்ல அவன் பின்னால் சுசான் சென்றாள். அவர்கள் சென்று முடியும் வரையும் என்னால் பார்வையை அவர்களில் இருந்து எடுக்க முடியவில்லை.

‘என்ன புத்திரன்? புத்திரனிட்டப் புத்தியைத் தொலைச்சிட்டா போல இருக்குது?’ என்றான் குமரேசன்.

‘ஆ… நீ கவிதை எழுதலாம்’ என்றேன்.

‘ம்… அந்த அறியாச் சிங்களத்தை விடு… என்ன குழம்பிப் போனாய் போல இருக்கு?’

‘இது குழப்பம் இல்ல. சாதுவான ஒரு ஏக்கம். நாங்கள் இங்க இருந்து ஏங்கிறம். இப்ப இலங்கையில பிள்ளையள் வெளிநாட்டில இருக்க அங்க தனிய இருந்து ஏங்கிற கிழடுகளும் இருக்கினம். அங்க இருக்கிறவைக்கு நல்ல கடைசிக்காலம் கிடைக்குதோ எண்டும் யோசிக்க வேணும். நான் சாகேக்க பட்டெண்டு சாகோணும். கதைச்சுக் கதைச்சு அல்லது நித்திரையில சாகிறது தெரியாமல், அவஸ்தைப் படாமல், இந்தக்கிழடு சாகுது இல்லையே எண்டு முழிப்பிருக்கிறவன் முணுமுணுக்காமல், நிண்டாப் போல, மற்றவனுக்குத் தெரியாமல், மற்றவனை அவஸ்தைப்படுத்தாமல் சாகோணும்’ என்றேன்.

‘யாருக்கப்பா அப்பிடிச் சாகோணும் எண்டு விருப்பமில்லை. ஆனா எல்லாருக்கும் அப்பிடிச் சா வந்திடுதே?’ என்றான் அவன்.

‘உண்மைதான். அதுக்கும் அதிஸ்ரம் செய்திருக்கோணும்.’

# 15

**ம**னித எலும்புகளினதும் தசைகளினதும் கூட்டுப் பொறியியக்கம் வயதோடு குறைகிறது. இதயம் பல முறை துடிக்க முடியாதெனச் சோர்ந்து துடிக்கிறது. இரத்தம் உறைந்ததான அசதி. சோம்பலாய்… அயர்ச்சியாய்ப் படுக்க வேண்டும் போல் இருந்தாலும் படுத்தால் நித்திரை வருவதில்லை. கடந்த வாழ்வில் நடந்தவை பற்றிய மனதின் விசாரணை இடைவிடாது தொடர்கிறது.

காது வரவர மந்தமாகிறது. பக்கத்தில் நின்று தாதிகள் கூறுவதே கிணற்றுக்குள் இருந்து கத்துவதாய்க் கேட்கிறது. எழுத்து மட்டும் ஓரளவுக்குத் தெரிகிறது. அது தெரியாவிட்டால் நான் எழுதுவது தடைப்பட்டுப் போய்விடும். அப்படி ஒரு தடை வருவதற்குள் எழுதி முடிக்க வேண்டும். அந்த ஓர்மத்தில் குமரேசனைக்கூட இப்போது பார்ப்பதில்லை. செயலிழந்து போகும் அங்கங்களை நம்ப முடியாதவனாய் நான் அவதிப் படுகிறேன். எனக்காக எத்தனையோ வருடங்கள் விசுவாசத்தோடு உழைத்த அங்கங்கள் இப்போது முடியாது என்கிறது. முதுமை என்பது கைவிரிப்பாகத்தான் இருக்குமோ? தெரியவில்லை. நான் எனது சிந்தனையில் இருந்து விடுபட்டு எழுத்துக்கு வேகம் கொடுத்தேன். அது மீண்டும் தடைப்பட்டது.

‘காய்’

திரும்பிப் பார்த்த போது தாதி ஒருத்தி வாசலில் நின்றாள்.

‘என்ன?’

‘படுக்கிற நேரமாச்சுது’ என்றாள்.

‘நான் இப்ப படுக்கேல்லை. லையிட்டை ஓவ்பண்ணிட்டுப் போ’

‘உங்களுக்கு உதவி தேவையில்லையா?’ என்றாள்.

‘பிளீஸ்... ஒரு ஒருமணித்தியாலம் கழிச்சு வாங்க’

‘ஓகே கெதியா முடியுங்க’

அவள் போய்விட்டாள். அடுத்த முறை வந்தாலும் சமாளிப்பேன். இன்று மூன்று மணிவரை எழுதினால் இந்த நாவல் முடிந்துவிடும். அதன் பின்பு நிம்மதி. திருத்துவதை ஐந்து நாட்களுக்குள் செய்து முடித்து விடலாம். அதன் பின்பு என் பொறுப்புக் குறைந்துவிடும். நான் மீண்டும் எழுதத் தொடங்கினேன். நான் எழுதி முடித்துவிட்டு நிமிர்ந்த போது இரண்டு பேராக வந்தார்கள். என்னை எதுவும் கேட்காது வலுக்கட்டாயமாகத் தூக்கிப் படுக்கையில் போட்டார்கள். நான் என்ன குழந்தையா? பின்பு எனது கணினியை நிறுத்தினார்கள். எழுதியதைச் சேமித்துவிட்டேன். அது மகத்தான நிம்மதி.

ஏழு நாட்கள் கடும் உழைப்பைச் சிந்த வேண்டியதாகிற்று. ஒருமுறை திருத்தியாகிவிட்டது. என்றாலும் எனக்குத் திருப்தி ஏற்படாத காரணத்தினால் இன்னும் ஒரு முறை திருத்தினேன். அதற்கு இரண்டு நாட்கள் எடுத்தன. இனி என்னாற் திருத்த முடியாது. போனில் நித்தியை அழைத்து அவனிடம் இதைக் கொடுத்து அனுப்ப வேண்டும். நான் தொலைபேசியிற் தொடர்பு கொள்ள வேண்டும் என்பதை ஒரு தாதியிடம் கூற அவள் அதற்கு ஒழுங்கு செய்தாள். அதற்காகக் கைத் தொலைபேசியுடன் எனது அறைக்குள் வந்தவள், ‘அந்த எட்டாம் நம்பர் றுமில இருந்த தமிழர் உங்களுக்குச் சொந்தமா?’ என்றாள்.

‘இல்லை நல்ல நெருங்கின பிரண்ஸ். ஏன் கேட்கிறா?’ என்றேன்.

‘அவர் மோசம் போயிட்டார்’ மலையொன்று பிரண்டு தலையில் விழுந்தது போல இருந்தது எனக்கு. ஐயோ என்று கத்த வாயெடுத்து இடத்தை எண்ணி அதை அவஸ்தையோடு அடக்கினேன்.

‘என்ன? என்ன?’ நான் உயிர் போகும் வேதனையோடு பதறினேன்.

‘ம்... நீங்க கவலைப்படாதீங்க. அது தவிர்க்க முடியாதது தானே?’ என்றாள். அவள் தத்துவம் இப்போது ஏனோ எனக்கு இனிக்கவில்லை.

‘குமரேசா...?’

ஐயோ என்று கத்தி தலையில் அடித்து அழவேண்டும் போல் மீண்டும் மீண்டும் சோகம் எழுந்தது. இங்கு அப்படிச் செய்வது வழமை அல்ல.

‘நீங்க பிரேதத்தைப் பார்க்கோணுமா?’

‘ம்...’

‘நாளைக்குக் காலமைதான் இனிப் பார்க்கலாம்’

‘எத்தினை மணிக்கு?’

‘ஒன்பது மணிக்கு’

‘நான் கட்டாயம் பார்க்கோணும். நீ அதுக்கு ஒழுங்கு செய்யமுடியுமா?’

எனக்குச் சிறிது நேரம் என்ன செய்வது என்று புரியவில்லை. குமரேசனைக் கதை அலுவலில் முற்றாகப் பார்க்கவில்லை. அறைக்குள்ளேயே அடம்பிடித்துக் கொண்டு இருந்தாகிற்று. இனி... கண்களிற் கண்ணீர் நிறையப் பார்வை கலங்கிற்று. மனது வெம்பிற்று. அன்று சிரித்துக் கதைத்தவன். எலும்பும் தசையுமாய் அசையும் உருவமாய்த் தோன்றினாலும் அழகாய்ச் சிரித்தவன். இப்போது அவன் அப்படி அல்ல என்கின்ற உண்மை புரிந்தது.

அடுத்து எனக்கும் இதுதான் முடிவு. இந்த நித்தியம் அற்ற வாழ்க்கையில் என்னாற் கடைசியாகச் செய்ய முடிந்ததைச் செய்ய வேண்டும் என்கின்ற அவா என்னை உந்தியது. அதுவே என்னைக் குமரேசனின் கடைசிக் காலத்தில் அவன் பக்கத்தில் இருக்க விடவில்லை. எனினும் அவன் நினைவுகள் வருங்காலத்தில் சிலரது மனதில் இருக்கும். அந்த எண்ணம் எனக்குச் சற்று ஆறுதல் தந்தது.

நான் கைத் தொலைபேசியில் எண்களை அழுத்தினேன். மறுமுனை உயிர் பெற்றுக் கொள்ள நித்தி 'கலோ' என்றான்.

'கலோ. நான் அப்பா கதைக்கிறன்'

'சொல்லுங்கோ... புத்தகம் முடிஞ்சுதா?'

'ஓ.'

'அப்ப அதை எடுக்க நான் வாறன்'

'இன்னுமொரு விஷயம் நித்தி'

'என்ன?'

'குமரேசன் மோசம் போயிட்டான்'

'அப்பா?'

'யாரும் எவருக்காக வேண்டியும் அதிரத் தேவையில்லை. இதுதான் முடிவெண்டு தெரிஞ்சவனுக்கு அதிர்ச்சி வரவேண்டியதில்லை'

'என்னப்பா நீங்கள் இப்ப தத்துவம் கதைக்கிறியள்?'

'தத்துவமும் ஒருவகை நடமுறை தம்பி. நடைமுறை என்பதை ஒழுங்காகப் புரிஞ்சா அதிலையும் தத்துவம் தெரியும்'

'எனக்கு நீங்க சொல்லுறது ஒண்டுமே விளங்கேல்லை'

'பருவாயில்லை. ஆறுதலாப் புரியும் உனக்கு'

'எப்ப அப்பா சவம் எடுப்பினம்?'

'தெரியாது. நாளைக்குக் காலை பத்துமணிக்குப் பார்க்கலாம் எண்டு சொல்லிச்சினம்'

'சரி... காத.'

'காத'

'எப்ப அப்பா சவம் எடுப்பினம்?' நித்தி கேட்டது மீண்டும் ஞாபகம் வந்தது. குமரேசன் மாமா இன்று சவம். அப்பாவும் நாளை சவமாவார். இரத்தமும் தசையுமாக உயிரோடு திரிந்த அதே பிண்டம் சுவாசத்தை இழந்தாற் சவம். அவர் அதுவான விந்தை. நாறிப் புழுத்துப் போகும் காலம் வந்ததான ஜதார்த்தம். இன்று நடமாடும் சவங்கள் நேற்று நடமாடிய சவங்களைச் சவங்கள் என்னும் உலகு. நரனின் விதி நாறிப் புழுத்தல் அல்லது எரிந்து சாம்பலாகுதல். மூச்சுக் காற்று இருக்கும் வரையும் ஆயிரம் ஆண்டு வாழ்ப் போவதான கற்பனையில் இருக்கும் நரன். பிண்டங்கள் அழியா வரம் பெற்றதாய் மமதையில் ஆடும் அறிவிலிகள். பிண்டங்கள் மறுபிண்டம் தேடியலையும். ஒரு பிண்டத்தோடு அடங்காத இச்சையால், பல பிண்டங்கள் தேடவைக்கும். அழியும் பிண்டத்தின் ஆயிரமாயிரம் திருக்கூத்துக்கள். உயிரில்லாத பிண்டம் சடலம். அழுகுகின்ற மாமிசம். புதைத்தோ, எரித்தோ அதை அப்புறப்படுத்த வேண்டியது சுவாசிக்கும் பிண்டத்தின் கட்டாயம். அழுகிப் போகும் பிண்டமாகிய நரமாமிசக் கூட்டிற்கு எத்தனை அலங்காரம்? எத்தனை அகங்காரம்? தனக்காகவே இந்த உலகம் என்கின்ற அடங்காத மமதை. அழுக்கால் உருவாகி... அழுக்காகி அழிந்து போவதை வைத்து எத்தனை கற்பனை? எத்தனை கவிதை? இது பிண்டங்களுக்கு ஏற்பட்ட பித்தமா? கண்டம் இழுக்கும் போது மட்டும் சில பிண்டங்களுக்குப் புரியும் தத்துவமா?

'கலோ என்ன போன் பண்ணியாச்சா?' என்றாள் சிரித்துக் கொண்டு வந்த அந்தத்தாதி.

'ம்..'

'கோலுக்கு வாறியளா?'

'எங்கயெண்டாலும் சரி வாறன்'

'ஏன் இவ்வளவு விரக்தியாப் பேசுறியள்?'

'எது எங்களுக்குச் சொந்தம்? எதுவுமே எமக்குச் சொந்தமில்லைத்தானே? எல்லாமே எமக்குச் சொந்தம்தானே? நினைக்கிற மனசைப் பொறுத்து நியதிகள்கூட மாறிக் கொள்ளலாம். நீ எப்பிடி நினைக்கிறியோ அப்பிடித்தான் உனக்கு இந்த உலகு. ஆனா அதுவே இந்த உலகில்லை'

‘நீங்கள் சிலவேளை சாவை நினைச்சுப் பயப்பிடுகிறியளோ?’

‘ம்… முடிவு தெரியாதவன் முடிவை ஒத்துக் கொள்ள முடியாதவன்தான் அப்பிடிப் பயப்பிடுவான்’

‘அப்ப நீங்க பயப்பிடேல்லையா?’

‘பயப்பிடக் கூடாது எண்டு நினைக்கிறன்’

‘ஓ நீங்க ஒரு மாதிரித்தான் கதைப்பியள்’

‘ம்..’

அவள் அப்பால் சென்றாள். எனக்குக் குமரேசன் ஞாபகம் வந்தது. நான் அப்படியே கண்ணை மூடி அதற்குள் புதைந்து கொண்டேன்.

★

சில நாட்களுக்குப் பின்பு பிள்ளை, பேரப்பிள்ளைகள், மருமகள் சூழ எல்லா ஒழுங்குகளுடன் அவனது அடக்கம் நடந்தது. நித்தி அவர்களுக்கு உதவிகள் செய்தான். கண்ணீர், கவலை, அடக்க முடியாத அரற்றல்கள். அடக்க முடியாது எனது கண்களும் மனதும் அடிக்கடி அவனுக்காகக் கசிந்தன. நட்பு என்பதற்கு உதாரணம் எனக்கு அவன்தான். அதற்கும் முற்றுப்புள்ளி வைத்தாகிற்று. இப்போது தனிமரமாகிய உணர்வு என்னை வாட்டுகிறது.

# 16

**க**லியாண மண்டபமாக மாறிய முதியோர் மடம். இத்தனை கலகலப்பான நாட்கள் இதற்கு முன்பு இங்கு வந்ததில்லை. நிறைந்து கிடந்த நடைமுறைச் சிக்கல்களைக் கடந்து இலக்கை அடைந்த சந்தோஷம். நித்தி புத்தக அலுவலை ஏனோ தனோ என்று விடவில்லை. அதிகம் சிரமப்பட்டிருப்பான் என்பதில் எனக்கு ஐயம் இல்லை. குறுகிய காலத்தில் இங்கு ஒன்றைச் செய்து முடிப்பது இலகுவான காரியம் இல்லை. எதற்கெடுத்தாலும் இடைவேளை இடைவேளையெனக் கோப்பியோடு அலையும் இவர்களிடம் இந்த வேலையைச் செய்து முடித்தது பெரும் சாதனைதான். அன்று அவன் அலுவல்கள் முடிந்துவிட்டது என்று கூறிய போது பெரும் சாதனை செய்த பெருமிதம் அவன் முகத்தில் அப்பி இருந்தது. அது நிஜமான சந்தோஷம். கடினமான காரியத்தைச் செய்த களிப்பில் அவன் திளைத்தது தப்பில்லை.

எனக்கு இன்று சந்தோஷத்தில் கடுமையாக நெஞ்சை அடைக்கிறது. நான் அதன் வலியைப் பெரிதாக நினைக்கவில்லை. இந்த விழா எனக்கு மாத்திரம் பெருமை சேர்ப்பதாய் இவர்கள் எண்ணவில்லை. இதில் வேலை செய்யும், வாழும் எல்லோருக்கும் பெருமை சேர்ப்பதாகக் கருதுகிறார்கள். இங்கு ஒரு புத்தக வெளியீட்டு விழா நடத்த வேண்டும் என்று கூறியபோது பொறுப்பதிகாரி திகைத்துப் போய்விட்டார். இது நடைமுறைச் சாத்தியம் இல்லை என்பது அவருடைய எண்ணம். நான் விடவில்லை. இங்கு நடக்கும் வைபவத்தை நான் வேறு ஒரு இடத்தில் செய்யலாம். அப்படிச் செய்தால் இந்த முதியோர் மடத்திற்கு வரவேண்டிய மதிப்பு அநியாயமாக நழுவிப் போய்விடும். அதைத் தடுப்பதோடு, வயது வந்த பின்பு இங்கு வாழும் காலத்தில் உலகத்திற்குப் பயன்படும் வகையில் நிறையச் செய்யலாம் என்பதை இதன் மூலம் நிரூபிக்கலாம். அப்படிச் செய்தால், இது வயது வந்தவர்களுக்குப் பாதுகாப்பான, வசதியான, விரும்பத்தக்க வீடு போன்றது என்பதை எடுத்துக் காட்டலாம். உங்கள் நிருவாகம் அப்படித்தான் எங்களை நடத்துகிறது என்பதை நிரூபிக்கலாம் என்று விளக்கம் கொடுத்து மசியப்பண்ணினேன்.

புகழை தக்கவைத்துக் கொள்ள விரும்பாத மனிதர்கள் உண்டோ? அவசர அவசரமாகச் சில அழகு செய்தல் நடைபெற்றன. இயந்திரக் கண்களுக்குப் பயந்து அழகு செய்தல் என்பது எனக்குப் புரிந்தது. அது எந்த மூலையை எந்தக் கோணத்தில் எடுத்து எப்படிக் காட்டும் என்பதை எவராலும் கூறிவிட முடியாது. எல்லாச் செய்தி நிறுவனங்களுக்கும் அறிவித்தல் கொடுக்கப்பட்டது. அவர்கள் இன்னும் சில மணித்தியாலத்தில் வந்து விடுவார்கள்.

என்னைப் பேட்டி காணவேண்டும் என்று அறிவித்து இருக்கிறார்கள். என்ன கேட்கப் போகிறார்கள் என்பது தெரியவில்லை. எனக்கு இது முதலும் கடைசியுமான நேர்முகமாக இருக்கப் போகிறது. அதை எண்ணும் போது சற்றுப் படபடப்பாய்தான் இருக்கிறது. இன்னும் நித்தியைக் காணவில்லை. நான் எனது வேட்டிகளை நித்தி வீட்டில் வைத்திருந்தேன். கடைசிக் காலத்தில் என்றாலும் எங்கள் கலாச்சாரப்படியே இந்த விழாவில் உடையணிய வேண்டும் என்கின்ற தீராத ஆசை எனக்கு. அதை நிறைவேற்ற நித்தியை அனுப்பி எனது வேட்டியைக் கொண்டு வருமாறு பணித்தேன். அவன் வேட்டியுடன் வந்து விடுவான். அதன் பின்பு அதைச் சுற்ற வேண்டும். வேட்டி சுற்றி நிறையக் காலம் ஆகிறது. இரண்டு வருசத்திற்கு முதல் ஒரு கலியாண வீட்டிற்குப் போகும் போது அடம்பிடித்துக் கட்டிக் கொண்டு சென்றது. பழைய வேட்டிகளைக் குப்பையில் போட்டாகிற்று. இது கடைசியாய் வாங்கிய பட்டு வேட்டி. நான் இருக்கும் நிலையில் இடுப்பில் நிற்குமா என்பது வேறு பிரச்சனை. பட்டியைப் போட்டு இறுக்கினால் பயப்படத் தேவையில்லை. எல்லாரும் எங்கள் கலாச்சாரத்தை மறந்து போகிறார்கள். தமிழனும் தமிழிச்சியுமாய் இருக்கிறவர்களே வேட்டி கட்ட வெட்கப்படுகிறார்கள். காற்சட்டைதான் எங்கள் தேசிய உடுப்பென்கிறார்கள். இந்தக் கூத்துக்களைப் பார்க்கும் போது கவலையும் சிரிப்பும் கலந்த உணர்வு என்னைத் தாக்கும். 'எங்கடையள் உருத்தெரியாத ஒரு கூட்டமாக மாறப் போகுதுகள்' என்கின்ற நினைப்பு என்னை அடிக்கடி வாட்டும். இல்லையென்று வருங்காலம் நிரூபிக்குமா?

நெஞ்சிற்குள் மீண்டும் கடுமையாக நொந்தது. நான் நெஞ்சைப் பிடிக்க யாரோ வரும் காலடிச் சத்தம் கேட்டது. நான் சமாளித்து எனது வேதனையை மறைத்துக் கொண்டு நிமிர்ந்து பார்த்தேன்.

'கலோ? என்னப்பா கடுமையான யோசினை? சனம் வரத் தொடங்கீட்டினம். நான் கொஞ்சம் பிந்தீட்டன்' என்றான் நித்தி, மன்னிப்புக் கேட்கும் தோரணையில்.

'பருவாய் இல்லை'

'இந்தாங்க வேட்டி'

'கலோ' என்ற வண்ணம் தாதி ஒருத்தி உள்ளே வந்தாள்.

'நீங்கள் இன்னும் வெளிக்கிடேல்லையா?' என்றாள்.

'இப்பதான் உடுப்பு வந்தது. இதைக் கட்டுறத்துக்கு இரண்டு பேரும் என்னைத் தூக்கிப் பிடியுங்கோ' என்றேன்.

'தாராளமாக?'

அவளும் நித்தியும் என்னைத் தூக்கி நிறுத்திப் பிடித்துக் கொண்டனர். நான் வேட்டியை உதறிக் கட்டத் தொடங்கினேன்.

'இது என்ன உடுப்பு?' என்றாள் அவள்.

'வேட்டி. தமிழற்ற பாரம்பரிய உடுப்பு' என்றேன். இதைத் தமிழர்கள் மறக்காமல் இருப்பார்களா என்பது தெரியாது.

'எளிமையாக இருக்கு. ஆனா உடுக்கிறது கஸ்ரம்?' தமிழர்களும் ஒரு காலத்தில் எளிமையாகத்தான் இருந்தார்கள்.

'பழகினா இது லேசானது' என்று அவளுக்குப் பதில் கூறினேன்.

'ரீவிக்காரர் வந்திட்டினம். உங்களைத் தனியாப் பேட்டி காணோனும் எண்டிச்சினம்'

'சரி... இனி நீ போய் அவைய வரச் சொல்லலாம். நான் தயார்' என்றேன்.

நான் பாதுகாத்து வைத்திருந்த மேற்சட்டையை அணிந்தேன். பின்பு தலையை வாரிக் கொண்டேன். பட்டு உத்தரியத்தைக் கழுத்தில் போட்டுக் கொண்டேன். நித்தி எனக்கு வாசனை தெளித்து விட்டான். தொலைக்காட்சி அணியினர் அதற்கு மேல் ஒப்பனை செய்தார்கள். தொலைக்காட்சிக்குப் பேட்டி முடித்துக் கொண்டு மண்டபத்திற்குள் நான் போகும் போது எல்லோரும் வந்துவிட்டார்கள். என்னைக் கண்டவுடன் எழுந்த நின்று கரகோஷம் செய்தனர். இந்த மரியாதையை நான் என்றும் பெற்றவன் அல்ல. ஆனந்தத்தில் திகைப்பாய் இருந்தது. இவ்வளவு பெரிய விழாவாக, இவ்வளவு சனத்தோடு அது நடைபெறுமென நான் கனவுகூடக் கண்டதில்லை.

பல இடங்களிலும் இருந்து வந்த இலக்கிய விமர்சகர்கள், அரசியல் வாதிகள், தமிழ் அன்பர்கள், தெரிந்தவர்கள், அறிந்தவர்களெனக் கூட்டம் நிறைந்து வழிந்தது. நிகழ்ச்சிகள் முறைப்படி நடந்தன.

நான் எனது நாவலின் முதலாவது பிரதியை மாநில முதல்வரிடம் ஒப்படைத்தேன். அடுத்த பிரதியை மாநகர முதல்வரிடம் ஒப்படைத்தேன். சிறிது நேரத்தின் பின்பு நான் வசிக்கும் மடத்தின் தலைமை அதிகாரி என்னை உரையாற்றுமாறு அழைத்தார். ஆனந்தத்தில் எப்படி உரையாற்றுவது என்பது புரியவில்லை. எழுதுவது என்றால் ஆறுதலாக யோசித்து யோசித்து எழுதலாம். பேசுவது அப்படியல்ல. எனக்கு நாவெல்லாம் உலர்ந்து விட்டது. நான் முதலில் ஏதோ உளறினேன். பின்பு புத்தகம் எதற்காக எழுதினேன் என்பது பற்றி விவரித்தேன். கடைசியாக எல்லாருக்கும் நன்றி கூறி முடித்துக் கொண்டேன். எனக்கு மீண்டும் கடுமையாக நெஞ்சிற்குள் நோவெடுத்தது. நான் நெஞ்சை மெதுவாக அழுத்திப் பிடித்துக் கொண்டேன். மாநில முதல்வர் பேசத் தொடங்கினார். எனக்கு நெஞ்சுவலி உச்சக்கட்டத்தை எட்டியது.

எதற்காக இதெல்லாம்? 'நான்!' இந்த 'நான்' என்கின்ற அகங்காரம், சுயநலம்... என்னை நிறுவும் 'நான்' இன் அவதி... நான் என்பது அழிந்து விடும் என்பதால் நான் என்பதை நினைவு படுத்தும் சில நுட்பமான வேலை... எனக்கு மறுபிறப்புப் பற்றித் தெரியாது. ஆத்மா பற்றியும் அக்கறையில்லை. பரமாத்மா பற்றியும் நம்பிக்கை இல்லை. செய்தவை 'நான்' என்பதைக் காக்க என்பது மட்டும் புரிகிறது. முழுமை அடையாத என் வாழ்க்கை. 'நான்' என்பது மாறாது பிண்டத்தோடு ஒட்டியதாய். 'நான்' என்பதோடு வாழ்ந்து அதைக் கொல்லாமலே சாகும் 'நான்'. பிண்டத்தின் இயக்கம் முற்றுப்பெற 'நான்' தொலைந்து போகும். அல்லது தொலைக்கப்படும். அதைத் தொலையாது சிலையாக்கும் 'நான்' இன் நட்பாசையாக இது? நித்தியின் வீட்டிற்குப் போகவே இல்லை. நான் என்கின்ற என் பிண்டம் வேதனையில் மயக்கமாகியது. நித்தி 'அப்பா அப்பா' எனத் தமிழில் கூப்பிடுவது எங்கோ தொலைவில் கிணற்றுக்குள் இருந்து கேட்பது போலக் கேட்டது.

–முற்றும்–